


## ஆகஸ்டு 30, 1959



"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 19 | தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | விகாரி ஆவணி 14௨
இதழ் 5

# உணவு மந்திரியின் ராஜீநாமா

பழி ஓரிடம் பாவம் ஓரிடம் என்பார்கள். இன்றைய உணவுக் குழப்பத்தை உண்டாக்கியவர்கள் ஒருபுறமிருக்க, ஒரு பாவமும் அறியாத உணவு மந்திரி திரு ஏ. பி. ஜெயின் அநாவசியமாகப் பலியாகிறார். அவர் உணவு மந்திரி பதவியை விட்டு ராஜீநாமா செய்துவிட்டார். அவருடைய ராஜீநாமாவைப் பிரதமரும் ஏற்றுக் கொண்டுவிட்டார்.

இன்றைய உணவு நிலைமை இதுதான்: உணவு தான்ய விலைகள் ஏகத்தாறாக ஏறி இருக்கின்றன. விலை ஏறினாலும் உணவுப் பொருளாவது கிடைக்கிறதா என்றால் அதுவும் இல்லை. வங்காளத்தில் பல இடங்களில் பஞ்ச நிலைமை ஏற்பட்டிருக்கிறது. பலஊர்களில் அரிசி கிடைப்பதில்லை; கோதுமை கிடைப்பதில்லை. இவை யெல்லாவற்றையும் விட மிகப் பரிதாபமான நிலை, உணவு உற்பத்தி செய்த உழவனே, இன்று தனக்கு வேண்டிய அரிசியைக் கறுப்பு மார்க்கெட்டில்தான் அதிக விலை கொடுத்து வாங்கவேண்டி யிருக்கிறது!

இந்தப் பயங்கர நிலைமை இந்த வருஷம் ஏற்பட்டிருக்கிறது! 'இந்த வருஷம்' என்று தனிப்பட்டுச் சொல்வதற்குக் காரணம், உணவுப் பொருள் உற்பத்தி, நாட்டில் எந்த வருஷத்தையும் விட இந்த வருஷத்தில்தான் அதிகம் என்று சொல்லப்படுகிறது. இவ்வளவு உணவு உற்பத்தியானது குறித்து மனத் திருப்தியடைந்து, சந்தோஷப்பட வேண்டிய உணவு மந்திரி திரு ஏ. பி. ஜெயின் இந்த வருஷம்தான் தமது பதவியை ராஜீநாமா செய்கிறார்.

உற்பத்தி பெருகியதற்கு மகிழ்ச்சி யடைவதற்குப் பதில் மந்திரி மேல் பழி சுமத்தப்பட்டு அதனால் பதவியை விட்டு விலகினார்!

** ** ** **

உற்பத்தி பெருகியிருந்தாலும், நாட்டில் பஞ்ச நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இவ்வளவு நெருக்கடியான நிலைமையை உண்டாக்கியவர், உணவு மந்திரி மட்டுமல்ல. மத்திய சர்க்கார் மந்திரிகள் அத்தனை பேருமேதான் இந்நிலைக்குக் காரணம். பார்லிமெண்டரி காங்கிரஸ் அங்கத்தினர்கள் அத்தனை பேருமேதான் காரணம். திட்டக் கமிஷன் அங்கத்தினர்கள் அத்தனை பேருமேதான் காரணம்.

திட்டக் கமிஷன் ஆலோசனையின் பேரில், பிரதமர் நேருஜியின் ஆசியுடன், காங்கிரஸ் அங்கத்தினர்களின் 'ததாஸ்து' கோஷத்துடன் உணவு தான்ய வியாபாரத்தில் சர்க்கார் நுழைந்தது.

என்றைக்குச் சர்க்கார் உணவுக் கொள்முதல் செய்யப் புகுந்து, தான்ய விலையைக் கட்டுப்பாடு செய்வதாகச் சொல்லி அரிசி கோதுமை, விலை நிர்ணயம் செய்தார்களோ, அன்றைய தினத்திலிருந்தே அரிசியும் கோதுமையும் மாயமாய் மறைந்து மக்கள் சொல்லொணக் கஷ்டங்களுக்கு உள்ளாயினர்.

ஆகவே, காங்கிரஸ் சர்க்காரின் உணவு தான்ய வியாபாரக் கொள்கையே, இன்றைய உணவு நெருக்கடிக்குக் காரணம்.

உணவு மந்திரியாக இருக்கும் திரு ஏ. பி. ஜெயின் முன்னாட்களில் உணவு மந்திரியாக இருந்த திரு கித்வாயின் கீழ் வேலை செய்தவர். கித்வாயும் ராஜாஜியும் சேர்ந்து பாரத மக்களைப் பிடித்துவந்த 'உணவு ரேஷன்' என்ற பிசாசினிடமிருந்து

மீட்டார்கள். மீண்டும் சர்க்கார் உணவு தான்ய வர்த்தகம் என்ற பிசாசைப் புக விட்டால் பழைய கஷ்டங்கள் எல்லாம் வந்து சேரும் என்று திரு ஏ.பி. ஜெயின் எடுத்துரைத்தார்; எச்சரிக்கை செய்தார். மத்திய சர்க்கார் மந்திரிகளோ, மக்கள் சபை காங்கிரஸ் அங்கத்தினர்களோ, திட்டக் கமிஷன் அங்கத்தினர்களோ, அவர் பேச்சைக் கேட்கவில்லை.

தான்ய வியாபாரத்தைச் சர்க்கார் எடுத்துக் கொண்டால், கண்ட்ரோல்களும் ரேஷனும் வந்தே தீரவேண்டும். ரேஷன் வந்தால் மக்கட் சமூகம் முழுதும் அலைந்து பரிதவிக்க வேண்டியதுதான்.

உணவு மந்திரி ஏ. பி. ஜெயின் எதிர்பார்த்தது நடந்துவிட்ட பிறகு, கொஞ்சங்கூட வெட்கமில்லாமல் காங்கிரஸ் அங்கத்தினர்களே, உணவு மந்திரியைத் தாக்கிப் பேசுகிறார்கள். இது அவர்களின் 'பண்பாட்டை'க் காட்டுகிறது. பிரதமரின் கொள்கையைக் கடைப்பிடித்ததால் இந்த அவல நிலைக்கு உணவு மந்திரி உட்படுத்தப் பட்டிருப்பதைப் பார்த்துக் கொண்டு, பிரதமர் சும்மா இருப்பதும் அவர் ராஜீநாமாவை ஏற்றுக் கொண்டிருப்பதும் விந்தையாக இருக்கிறது.

மக்கள் சபையிலுள்ள காங்கிரஸ் அங்கத்தினர்கள் மனச் சாட்சி யுள்ளவர்களானால், "காங்கிரஸ் மந்திரி சபையில் உணவு தான்ய வர்த்தக விஷயமாகக் கொள்கை மாற்றம் வேண்டுமேயொழிய, உணவு மந்திரியின் ராஜீநாமாவினால் ஒரு பயனுமில்லை" என்று வற்புறுத்த வேண்டும்.

# ஜனாதிபதியின் மோகம்

தெலுங்கு மொழியில் விஞ்ஞான புத்தகங்களையும் சரித்திரப் புத்தகங்களையும் வெளியிடுவதற்காக ஏற்படுத்தப்பட்டுள்ள தெலுங்கு மொழிக் கழகத்தை ஹைதராபாத்தில் ஆரம்பித்து வைக்க வந்த ஜனாதிபதி ராஜேந்திரபாபு தாம் வந்த காரியத்துடன் திரும்பிச் சென்றிருந்தால் நாம் இதை எழுதவேண்டிய அவசியமே நேர்ந்திராது. ஆனால் வந்தவர் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டுவிட்டுப் போய் இருக்கிறார். பிரதமர் நேரு பார்லிமெண்டில் பேசியதை ரத்து செய்யும் வகையில் அவர் ஹைதராபாத் தெலுங்கு மொழிக் கழகத்தில் பேசியதாவது:

"ஒரு சுதந்திர தேசம், தனது அரசாங்க நிர்வாகத்துக்கு ஒரு அந்நிய மொழி-அது எவ்வளவுதான் வளம் பெற்றிருந்தாலும்-ஏற்க முடியாது. ஆங்கிலத்தைப் புறக்கணிப்பது என்பதல்ல பிரச்னை. நமக்கு ஆங்கிலத்தின் மீது கோபமில்லை. ஆனால் அதுவே என்றென்றும் ஆட்சிமொழியாக இருக்க வேண்டும் என்று சொல்வது முற்றும் தவறு!

"இந்திய அரசியல் நிர்ணயச் சட்டம், ஹிந்தியே ஆட்சி மொழியாக இருக்கவேண்டும் என்று கூறுகிறது. யதார்த்த நிலையைப் பார்க்கும்போது, வேறு எந்த மொழியையும் ஆட்சி மொழியாக்க முடியாது என்பது தெரியவரும். ஆங்கிலம் போன்ற அந்நிய மொழி ஆட்சிமொழியாக இருப்பதைவிட ஒரு இந்திய மொழி ஆட்சிமொழியாக இருப்பதையே மக்கள் விரும்புவார்கள்."

பிரதமர் நேருஜி ஆங்கிலத்துக்குச் சம அந்தஸ்துக் கொடுக்கப்படும்; இந்தி பேசாத பிறமொழி மாகாணங்களைச் சேர்ந்தவர்களின் விருப்பத்தின் பேரிலேயே ஆட்சிமொழிவிஷயம் தீர்மானிக்கப்படும் என்று மக்கள் சபையில் சொல்லி சில நாட்கள்கூட ஆகவில்லை. அதற்குள் ஜனாதிபதி இவ்வாறு பேசியிருக்கிறார்.

நேருஜியின் பேச்சைக் கேட்டுத் திருப்தி அடைந்துவிட வேண்டாம் என்று எச்சரிக்கை செய்தோம். நாம் செய்த எச்சரிக்கை முற்றும் சரி என்பதை ஜனாதிபதியின் வார்த்தைகள் நிரூபித்து விட்டன.

ராஜாஜி முதலியோர் ஆங்கிலமே ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்பதற்கு புத்தி பூர்வமான காரணங்கள் எடுத்துரைத்தார்கள். ஆனால் ஒரு பிரதேசத்தாரின் தாய் மொழி முழு இந்தியாவுக்கும் ஆட்சிமொழி அந்தஸ்தைப் பெற வேண்டும் என்ற மோகம், ஜனாதிபதி போன்றவர்களின் அறிவையே மயக்குகிறது என்றால் வடநாட்டிலுள்ள சாதாரண மக்கள் எப்படியிருப்பார்கள் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. ஆகவே இந்தி திணிக்கப்படக்கூடாது என்று உறுதியாக நம்புகிறவர்கள் ஓயாமல் கிளர்ச்சி செய்து கொண்டிருக்க வேண்டியதுதான். இல்லையானால் இந்தி பின் பக்கமாக வந்து கழுத்தின் மீது உட்கார்ந்துவிடும்!

இவ்வருஷம் விநாயக சதுர்த்தி ஆவணி மாதம் 21-ம் தேதி (6—9—59) யன்று வருகிறது. அன்று ஸ்ரீ விநாயகர் பற்றி ஸ்தோத்ரங்கள் பாராயணம் செய்ய வேண்டுமென்று அபிப்பிராயப்படுகிறவர்கள் கீழ்க் கண்ட விலாசத்துக்கு எழுதினால் ஸ்ரீ ஆதி சங்கராச்சார்யாள் அருளிய கணேச பஞ்ச ரத்னம் என்னும் ஸ்தோத்ரம் அனுப்பப்படும். ஒரு பிரதிக்கு மேல் வேண்டுபவர்கள் பிரதி ஒன்றுக்கு பதிமூன்று நயா பைசா வீதம் தபால் தலைகள் அனுப்பலாம்.

மானேஜர்,

ஸ்ரீ சங்கராச்சார்யாள் மடம்,

தும்பல் போஸ்டு, பூனமல்லி (வழி)

# பெண் அல்ல—பூதம்



உணவு மந்திரி திரு அஜித் பிரசாத் ஜெயின் பதவியை ராஜிநாமா செய்திருக்கிறார்.



அமெரிக்க ஜனாதிபதி ஐஸனோவரும் ருஷ்யப் பிரதமர் குருஷேவும் சமீபத்தில் அமெரிக்காவில் சந்தித்துப் பேசப்போகிறார்கள் என்பது உலகம் முழுதும் பரபரப்பையுண்டாக்கி யிருக்கிறது.

# என்ன சேதி?

## டாக்ஸிகள் போகும் வழி

சென்ற வாரம் சென்னை நகரப் பொது மக்கள் வாடகை மோட்டாரோட்டிகளின் வேலை நிறுத்தத்தினால் பெரிதும் அவதிப்பட நேர்ந்தது. வாடகை மோட்டார் வாகனங்களின் சொந்தக்காரர்களுக்கும், அவற்றை ஓட்டுபவர்களுக்கும் இடையிலுள்ள சலுகைத் தகராறுகளே காரணம் என்று கூறப்படுகிறது.

வாகனங்களின் சொந்தக்காரர்கள் தரப்பில் அவர்களுக்குள்ள கஷ்ட நஷ்டங்கள் எடுத்துரைக்கப்பட்டன. பதினாயிரம் ரூபாய் வரையில் முதல் போட்டு நடத்தும் இந்தத் தொழிலில் தகுந்த வருமானம் கிடைப்பதில்லை; இதர தொழில்களைவிட இவற்றுக்கு விபத்துக்களும், அதிகாரவர்க்கத்தின் ஆதிக்கமும் அதிகம் என்பது முக்கியமாகச் சொந்தக்காரர்கள் வெளியிடும் குறை. இந்தக் குறைபாடுகளில் உண்மைகளும் இல்லாமல் போய் விடவில்லை. நாட்டில் வேறு எந்த ராஜ்யத்திலும் இல்லாத அதிகார கெடுபிடிகள் இங்கு அதிகம். வரி விதிப்பும் இந்த ராஜ்யத்தில் மிக அதிகம். வரிப்பளு, அதிகார கெடுபிடி, விபத்துக்கள் ஆகியவற்றினின்று மீள்வதே பெரும் பாடாகும்.

வாகனங்களை ஓட்டுபவர்களின் குறைகளிலும் நியாயமானவை சில இல்லாமற் போய் விடவில்லை. எனினும் இந்தத் தகராறுகளையெல்லாம் வேலைநிறுத்தம் செய்யாமலே தீர்த்துக்கொள்ள அவர்கள் முயன்றிருக்கலாம். பொதுமக்களின் அவசியத் தேவையாகிய போக்குவரத்து வசதி பாதிக்கப்படாமல் நடந்து கொண்டிருக்கலாம். வைத்திய சாலைகளுக்குச் செல்பவர்கள், ரயில் பிரயாணிகள் முதலானோர் இந்த ஐந்து நாட்களும் வாடகை மோட்டார் வாகனங்கள் கிடைக்காமல் அனுபவித்த துன்பங்கள் கொஞ்சமல்ல.

## சர்க்கார் உத்தியோகஸ்தர்கள்

மந்திரி பந்த் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள்மீது குறைப்பட்டுக் கொண்டிருக்கிறார். அவர்கள் சரியாக வேலை செய்வதில்லையாம். தங்கள் சொந்த மூளையை உபயோகித்து எந்த முடிவும் எடுத்துக் கொள்வதில்லையாம். பொறுப்பெல்லாம் மேலதிகாரிகளின் மீது சுமத்திவிட்டுப் போய்விடுவதாகச் சொல்லியிருக்கிறார். நேரத்தை வீணாக்குவதிலே சிரத்தை காட்டுகிறார்களே தவிர வேலை செய்வதில் இல்லை என்று குறைப்பட்டுக் கொண்டிருக்கிறார்.

மந்திரி பந்த் அவர்கள், இப்படிக் குறைப்பட்டதுக்குச் செலவழித்த நேரத்தில் இதற்குக் காரணம் கண்டு பிடித்து அதை நீக்க முயன்றிருந்தாரானால் எவ்வளவோ நன்றாக இருந்திருக்கும்.

சர்க்கார் காரியாலயங்களில் அரசியல் வாதிகள் புகுவது அதிகமாகிவிட்டது. இது முதல் காரணம். அரசியல் வாதிகள் தங்களுக்குச் சாதகமான காரியங்களைச் சிப்பந்திகளிடம் நேரிடை தொடர்பு கொண்டு சாதித்துக் கொள்ளப் பார்க்கிறார்கள்.

மந்திரிகளின் நிர்ப்பந்தத்தினால் அல்லவோ முந்திரா நிகழ்ச்சி ஏற்பட்டது.

மனச் சாட்சிப்படி யாராகிலும் ஒரு உத்தியோகஸ்தர் வேலை செய்தால், அதைப் பாராட்டுவதற்குப் பதில், மந்திரிகள், எம். பி.க்கள், எம். எல். ஏ.க்கள் தலையீடு ஏற்பட்டு, செய்த முடிவை மாற்றிவிட நேருகிறது. இப்படிச் செய்தால் எந்த உத்தியோகஸ்தருக்கு வேலை செய்வதில் ஊக்கமும் உற்சாகமும் இருக்கும்?

மொத்தத்தில் சுதந்திரத்துக்குப் பிறகு நமது சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் எண்ணிக்கை இரண்டு மடங்கு மூன்று மடங்கு பெருகியிருப்பதில் குறைவில்லை. நிர்வாகத் திறமை அதற்குத் தகுந்தபடி இரண்டு மடங்கு மூன்று மடங்கு குறைந்திருப்பதிலும் சந்தேகமில்லை. இந்தக் குறையை யார் நிவர்த்தி செய்யப் போகிறார்களோ?

## மந்திரிகளுக்குப் புது வேலை

சென்னை காங்கிரஸ் மந்திரிகள் இப்போது ஒரு புது வேலை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். அதுதான் சுதந்திரக் கட்சிப் பிரசாரகர்கள் வேலை. இந்த வேலையை அவர்களுக்குச் சுதந்திரக் கட்சியினர் யாரும் கொடுக்காமலே மேற் கொண்டிருப்பதைக் கண்டு மகிழ்கிறோம். அவர்கள் போகுமிடமெல்லாம் "சுதந்திரக் கட்சி பணக்காரர் கட்சி" என்று ஓயாமல் பிரசாரம் செய்து வருகிறார்கள். ஆனால் பொதுமக்களுக்கு எது பணக்காரர் கட்சி என்பது நிச்சயமாகத் தெரியும். எந்தக் கட்சிக்குப் பணக்காரர்கள் நிதி உதவி செய்கிறார்கள், அந்தப் பணக்காரர்களுக்கு எப்படியெல்லாம் அரசாங்கம் மறைமுகமாக உதவிகள், சலுகைகள் அளித்து வருகிறது என்பது நாடறிந்த உண்மை. முந்திரா பேர விவகாரம் ஒன்றே போதும்.

சுதந்திரம் பெறுவதற்குமுன் வரை காங்கிரஸ் ஏழைகளின் கட்சியாக இருந்தது. காந்தி மகான் இருந்தவரை காங்கிரஸ் ஏழைகளின் கட்சியாக மக்கள் எண்ணி வந்தனர். சுதந்திரம் பெற்று பதவிக்கு வந்தவுடன், காங்கிரஸ் பணக்காரர் கட்சியாகி விட்டது. தேர்தலுக்கு நிதி திரட்டத் தொடங்கியதும் பணக்காரர்கள் காங்கிரசுக்கு லட்சம் லட்சமாக நிதி உதவி அளித்து, வியாபார லைசென்சுகளும், வருமான வரியிலிருந்து சலுகைகளும் பெற்று வருகிறார்கள் என்பது நாடறிந்த உண்மை!

திரு என். ஜி. ரங்காபோன்ற உழவர்களின் தலைவர்களைக் கொண்ட கட்சி என்றைக்காகிலும் பணக்காரர் கட்சியாக முடியுமா?

சுதந்திரக் கட்சி பணக்காரர்களின் கட்சியல்ல என்பது மக்களுக்கு நன்றாகத் தெரியும். பணக்காரர்கள் என்றைக்குமே ராஜாஜியையும், காந்திஜியையும் தங்கள் நண்பர்கள் என்று கருதியதில்லை. காந்திஜி பணக்காரர்களை நாடிப் பெற்ற செல்வத்தை ஏழைகளுக்கு



ஸ்வராஜ்யா பத்திரிகையின் ஆசிரியர் திரு காஸா சுப்பாராவ் அவர்களின் அருமைப் புதல்வி சௌபாக்யவதி சுந்தரிக்கும் மசூலிப்பட்டினம் முனிசிபல் சேர்மன் திரு கே. நரசிம்ம ராவ் அவர்களின் புதல்வர் சிரஞ்சீவி ராமச்சந்திர ராவுக்கும் இம்மாதம் 17ந்தேதி திருநீர்மலையில் திருமணம் நடந்தேறியது. திருமண வைபவத்துக்கும் மாலையில் கல்கி காரியாலயத்தில் நடைபெற்ற வரவேற்பு உபசாரத்துக்கும் ஏராளமான நண்பர்களும் பிரமுகர்களும் வந்திருந்து சிறப்பித்தார்கள்.

திருமண வைபவத்தின்போதும் வரவேற்பின்போதும் ராஜாஜி அவர்கள் வந்து கலந்து கொண்டு மணமக்களுக்கு நல்லாசி நல்கினர். வாழ்க மணமக்கள் — வாழ்க பல்லாண்டு!

---

உதவவே செலவிட்டார். அதேபோல் ஏழைகளுக்கு உதவவே ராஜாஜி செல்வந்தர்களைப் பார்க்கிறார். இந்த விஷயத்தை லட்சக்கணக்கான மக்கள் கூடியிருந்த அகமதாபாத் பொதுக் கூட்டத்தில் ராஜாஜி விண்டு சொன்னார்: "நான் பணக்காரர்களைப் பார்க்கிறேன் என்றால், அது ஏழைகளுக்காகத்தான். இல்லையேல் எனக்கும் அவர்களுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை" என்றார்.

இதைக் கேட்ட பிறகும் மக்கள் ஏமாந்து போவார்கள், தங்கள் வார்த்தையைத்தான் நம்புவார்கள் என்று சென்னை மந்திரிகள் நினைப்பார்களானால், அவர்கள் பேதமையைக் கண்டு சிரிக்க வேண்டியதுதான்.

# நடம் செய்யும் பாதம்

பாம்புத் தலை மேலே — நடம்செய்யும்
பாதத்தினைப் புகழ்வோம்

—பாரதியார்

நம் நாட்டில் எத்தனையோ மகான்கள் அவதரித்திருக்கிறார்கள். அவர்கள் பிறந்த நாட்களை நாம் கொண்டாடுவதில்லை. ராமன், கண்ணன் ஆகிய இருவருடைய பிறந்த நாட்களையே ராமநவமி என்றும் கிருஷ்ணஜயந்தி என்றும் சிறப்பாகக் கொண்டாடுகிறோம். இந்த வாரம் பாரத தேசமெங்கும் கிருஷ்ண ஜெயந்தியை மக்கள் சிறப்பாகக் கொண்டாடுவார்கள். கண்ணன் பிறந்த இப்புனிதத் திருநாளில் நேயர்களின் கரங்களில் கல்கி இதழும் வந்து சேரும். அவர்களுக்குக் கண்ணனின் ஓர் அரிய லீலையை நினைவூட்டும் வண்ணம், கண்ணபிரான் காளிங்க நர்த்தனக் காட்சியை நமது ஓவியர் 'லதா' வழங்குகிறார்.

காளிங்கன் என்னும் பாம்பு யமுனையின் நீரை யெல்லாம் விஷ மயமாக்கி வந்தது. அதன் கொட்டத்தை பாலகன் கண்ணன் அடக்குகிறான்.

சமுதாயத்திலே ஒரு தீய சக்தியிருந்தால் போதும், சமுதாயம் முழுதும் வெலவெலத்துப் பயந்து நடுங்குகிறது. அந்தத் தீய சக்தியை ஒடுக்க, கண்ணன் போன்ற அவதார புருஷன் அவதரிக்க வேண்டியிருக்கிறது. அந்த அவதார புருஷனுக்கு உலகம் என்றென்றும் நன்றியும் வணக்கத்தையும் செலுத்துகிறது. அந்த வணக்கம் பாரதியாரின் இரண்டு அடிகளில் எவ்வளவு அருமையாக வந்திருக்கிறது பாருங்கள்!



பெங்களூர் சிட்டி திரு டி. கே. முனுசாமி செட்டியார் குமாரன் திரு டி. எம். கோபன்னுவுக்கும், சேலம் திரு ஏ. கோபால் செட்டியார் குமாரத்தி திருமதி ஜமுனுவுக்கும் திருமணம் சிறப்பாக நடந்தேறியது. வாழ்க மணமக்கள்

# உண்மை எது?

கொழும்பு, ஆகஸ்ட் 19உ

இவ்வாரம் இந்திய ஹைகமிஷன் காரியாலயத்தில் ஒரு வருந்தத் தக்க சம்பவம் நடைபெற்றது. சென்ற வாரம் இலங்கையிலுள்ள மலையாளி மகாஜன சபை அங்கத்தவர்கள் கொழும்பில் ஒரு பொதுக்கூட்டம் நடத்தி கேரளத்தில் மத்திய அரசாங்கம் தலையிட்டு ஜனாதிபதி ஆட்சி யேற்படுத்தியதை வன்மையாகக் கண்டித்து ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினார்கள். அத் தீர்மானத்தைக் கூட்டமாகச் சென்று இந்திய ஹைகமிஷனர் திரு கண்டேவியாவிடம் கொடுத்து இந்திய மத்திய அரசாங்கத்துக்கு அனுப்புமாறு கேட்டுக் கொள்ளுவதென்றும் அவர்கள் முடிவு செய்தார்கள். அதன்படி அவர்கள் ஒரு பெருங் கூட்டமாகக் கோஷங்கள் செய்து கொண்டும் இந்திய மத்திய அரசாங்கத்தைக் கண்டிக்கும் சுலோகங்களைக் கோஷித்துக் கொண்டும் இந்திய ஹைகமிஷன் காரியாலயத்துக்கு வந்தார்கள். அவர்கள் இந்திய ஹைகமிஷனரைக் காண்பதற்கு முன்னால் போலீசார் நாலாதிசைகளிலிருந்தும் பாய்ந்து வந்து ஆர்ப்பாட்டக்காரர்களை நையப் புடைத்து விரட்டி விட்டனர். அதில் பலர் காயமடைந்து ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப் பட வேண்டியதாயிற்று.

இதையடுத்து இந்திய ஹைகமிஷன் வெளியிட்ட ஒரு உத்தியோக பூர்வமான அறிக்கையில் போலீசாரைத் தாங்கள் அழைக்கவில்லை யென்றும் அழையாமலே போலீசார் ஸ்தலத்துக்கு வந்து தடியடிப் பிரயோகம் செய்திருப்பதாயும் அச்சம்பவம் ஹைகமிஷனருக்கே பெரிய அதிர்ச்சியை உண்டு பண்ணிவிட்டதென்றும் தெரிவிக்கப் பட்டிருந்தது. இந்த அறிக்கையைத் தழுவி பாரதப் பிரதமர் நேருவும் லோக் சபையில் ஒரு அறிக்கையை வெளியிட்டார். இச்சம்பவத்துக்கு இலங்கை அரசாங்க அதிகாரிகள் வருத்தம் தெரிவித்திருப்பதாகவும் நேருஜி தெரிவித்தார். ஆனால் இலங்கைப் பிரதமர் சும்மா யிருக்கவில்லை. இந்திய ஹைகமிஷனைச் சேர்ந்த இரண்டாவது காரியதரிசியான திரு ஐயங்கார் போலீசுக்கு ஒரு முறையல்ல, இரு முறையல்ல ஆறு தடவை டெலிபோனில் அழைத்துத் தகவல் கொடுத்ததாயும் போலீசார் ஸ்தலத்துக்கு வந்த பிறகும் கூட ஆர்ப்பாட்டக்காரர்களை வெளியேற்றுமாறு இந்திய ஹைகமிஷன் அதிகாரிகள் கூச்சலிட்டுக் கத்தியதாயும்; ஆகையால் போலீசார் அழையாத விருந்தாளிகளாக வந்து ஆர்ப்பாட்டக் காரர்களை அடித்து விரட்டியதாகக் கூறப்படுவதும் இச்சம்பவத்துக்கு இலங்கை அரசாங்க அதிகாரிகள் வருத்தம் தெரிவித்துக் கொண்டதாகக் கூறப்படுவதும் சுத்தத் தவறு என்று இலங்கைப் பிரதமர் பார்லிமெண்டில் அறிவித்திருக்கிறார். இது நேருவுக்கு மிகவும் சங்கடமான நிலைமையை விளைவித்திருக்க வேண்டும். போலீசை அழைக்கவில்லையென்று ஹைகமிஷன் அறிக்கையும் தெளிவாகக் கூறுகிறது. இலங்கைப் பிரதமரோ அழைப்பின் பேரிலேயே போலீசார் சென்று கூட்டத்தைக் கலைத்ததாகக் கூறுகிறார். இதில் எது உண்மை? மலையாளி மகாஜன சபை இவ்வாரம் நடத்திய இன்னொரு கூட்டத்தில் இந்திய ஹைகமிஷனின் போக்கை வன்மையாகக் கண்டித்துவிட்டு ஹைகமிஷனர் திரு கண்டேவியாவையும் இரண்டாவது காரியதரிசி திரு ஐயங்காரையும் உடனே வேறிடத்துக்கு மாற்ற வேண்டுமென்றும் போலீஸ் தடியடிப் பிரயோகத்தைப் பற்றி பாரபட்சமற்ற விசாரணை நடத்த வேண்டுமென்றும் தடியடிப் பிரயோகத்தில் காய மடைந்தவர்களுக்கு இந்திய ஹைகமிஷன் போதிய நஷ்ட ஈடு வழங்க வேண்டுமென்றும் கோரியிருக்கிறது.

## விரைவில் நேரடி நடவடிக்கை?

இவ்வாரம் தமிழ் அரசுக் கட்சியின் மத்தியக் கமிட்டி யாழ்ப்பாணத்தில் முக்கியமானதொரு கூட்டம் நடத்தி தற்போதைய அரசியல் நிலைமையையும் அடுத்தபடியாக என்ன செய்ய வேண்டுமென்பதையும் பற்றி ஆராய்ந்தது. தமிழும் தமிழர்களும் படிப்படியாக நசுக்கப்பட்டு வருவதை ஆராய்ந்த மத்தியக் கமிட்டி தமிழரசுக் கட்சி மீண்டும் சத்தியாக்கிரக இயக்கத்தைத் தொடங்கவேண்டி யிருக்கலாமென்று தீர்மானித்தது. இக் கூட்டத்தைப் பின்பற்றி நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் திரு எஸ். ஜே. வி. செல்வநாயகம் பேசுகையில் சென்ற முறை வகுப்புக் கலகத்தின்போது தமிழ் மக்களுக்கு மகத்தான கஷ்ட நஷ்டங்கள் ஏற்பட்டதை எடுத்துக் காட்டி

**கூட்டு விவசாயம், நில உச்சவரம்பு, சர்க்கார் வர்த்தகம்**

ஆகிய விஷயங்கள் பற்றிய இந்த ஆராய்ச்சி அரங்கத்தில்
அடுத்த வாரம் செப்டம்பர் 6-ந் தேதி கல்கி இதழில்

ஏ. ஆர். வெங்கடாச்சாரி (முன்னாள் சென்னைப் பிரதம என்ஜினீயர்): எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி, ஐ. ஸி. எஸ். (ரிடையர்டு) எல். கிருஷ்ணஸ்வாமி பாரதி

ஆகியோரின் கட்டுரைகள் வெளிவரும்.

சத்தியாக்கிரகம் சாத்வீக முறையில் நடைபெற்றுக்கூட அரசாங்கம் போலீசையும் ராணுவத்தையும் ஏவி மக்களைக் கொடுமைப் படுத்தலாமென்றும் ஆயிரக் கணக்கானவர்கள் சிறைசெல்ல நேரிடலாமென்றும் தமிழர்கள் எவ்விதமான தியாகங்களுக்கும் தயாராயிருக்க வேண்டுமென்றும் கூறினர். தமிழ்ப் பகுதிகளைச் சிங்களமயமாக்கப் படிப்படியாக எடுக்கப்பட்டுவரும் நடவடிக்கைகளை அவர் அழுத்தமாகக் கண்டித்தார்.

தமிழ்ப் பகுதிகளில் உள்ள அரசாங்கக் காரியாலயங்கள் தமிழிலேயே நடக்கலாமென்பதுதான் பிரதமர் முன்பு ஒப்புக்கொண்ட ஏற்பாடு. தமிழ் மொழியை ஓரளவு உபயோகிக்க ஒரு சட்டம் இயற்றப்பட்டதும் இதற்காகவே யாகும். ஆனால் தமிழ்ப் பகுதிகளிலுள்ள அரசாங்கக் காரியாலயங்கள் சிங்களத்திலேயே செயல்படுவதற்கு அரசாங்கம் நடவடிக்கை யெடுத்து வருகிறது. இதற்காகத் தமிழ்ப் பிரதேசங்களுக்கு சிங்கள குமாஸ்தாக்களை யனுப்ப யோசித்து வருகிறார்கள்.

### உதவி மந்திரிக்குக் கறுப்புக் கொடி

தமிழ் மொழிக்கும் தமிழ் இனத்துக்கும் விரோதமான நடவடிக்கைகளை எடுத்துவரும் பண்டாரநாயகா அரசாங்கத்தில் தமிழர்கள் யாரும் சேரக்கூடுமென்று எதிர்பார்ப்பது துர்லபம். தமிழர்களும் தம்முடன் ஒத்துழைப்பதாகச் சொல்லிக்கொள்ள யாராவது ஓரிரண்டு தமிழர்களுக்கு அரை மந்திரி பதவிகள் அளிக்க பண்டாரநாயகா தீவிரமாகத் திட்டமிட்டுவந்தார். கடைசியாக கிழக்கு மாகாணத்தைச் சேர்ந்த ஒரு தமிழரையும் ஒரு தமிழ் முஸ்லிமையும் பிரதமர் வளைத்துப் போட்டு உதவி மந்திரிகளாக்கி யிருக்கிறார். இவ்விருவரில் ஒருவரான திரு எஸ். யு. எதிர்மனசிங்கம் என்பவர் கிழக்கு மாகாணத்தில் சுற்றுப் பிரயாணம் செய்தபோது அவருக்கு கறுப்புக் கொடிகளும் எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்களும் வரவேற்பளித்தன.

### பிரித்தாளும் சூழ்ச்சி

இது ஒரு புறமிருக்க லஞ்சம் கொடுப்பதைப்போல உதவி மந்திரி பதவிகளை வழங்கித் தனது பக்கத்தில் இழுத்துக் கொண்டவர்களைப் பயன்படுத்தித் தமிழ் மக்களிடையில் பிரிவினைகளைச் சிருஷ்டிக்க அரசாங்கம் திட்டமிட்டு வருவதாயும் இப்பொழுது சந்தேகிக்க வேண்டியிருக்கிறது. இவ்வாரம் உதவி மந்திரி திரு. எதிர்மனசிங்கம் ஒரு பத்திரிகைக்கு அளித்துள்ள விசேஷப் பேட்டியில் வட மாகாணத்திலேயே தமிழரசுக் கட்சிக்கு ஆதரவு இருப்பதாயும், வட மாகாணத் தமிழரசுக் கட்சித் தலைவர்கள் கிழக்கு மாகாணத்தில் செல்வாக்குப் பெற, கிழக்கு மாகாணத் தமிழர்களும் முஸ்லிம்களும் ஒருபோதும் அனுமதிக்க மாட்டார்களென்றும் சொல்லியிருக்கிறார். வடக்கு மாகாணத் தமிழர்களையும் கிழக்கு மாகாணத் தமிழர்களையும் வேற்றுமைப் படுத்திப் பேசும் இம்மாதிரியான பேச்சுகள் பேராபத்தானவை யென்பதை 'வீரகேசரி' பத்திரிகை சுட்டிக்காட்டி யிருக்கிறது. —ரஜனி

# ஆகாச வெடி!

நவீன மூக்குக் கண்ணாடித் தொழிற்சாலையைக் கடைசியில் துர்காபூர் அல்லது கல்கத்தாவில் அமைப்பதென்று இந்திய சர்க்கார் தீர்மானித்துவிட்டது. —தினசரி

இந்திய சர்க்காரின் பார்வைக்குத் தென்னாடு தெரியாமற் போனதற்குக் காரணம் நவீன மூக்குக் கண்ணாடி இல்லாததுதான் போலும்!

★

கேரள மாஜி முதன்மந்திரி ஸ்ரீ நம்பூத்ரிபாடிற்கு, கன்னிக்கோட்டைப் பொதுமக்கள் ரூபாய் நோட்டு மாலையும், நயா பைசா மாலைகளும் அணிவித்தார்கள். —செய்தி

நோட்டுக்குச் சில்லறை மாற்ற வேண்டுமானால், அவர் மாலையை மாற்றிக் கொள்ளட்டும் என்று கருதியிருக்கலாம்.

★

மதுவிலக்குச் சோதனை செய்வதாகக் கூறி, ஒருவருடைய சட்டைப் பையிலிருந்து பணத்தை எடுத்துக்கொண்டு ஓடிய ஹெட் கான்ஸ்டபிள் மீது நடவடிக்கை.

—நெல்லை வட்டச் செய்தி

ஓடிய திருடன் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் ஒளிந்து கொண்டானே?

''நேருவை பகவானின் அவதாரமாகச் சிலர் போற்றுவதை நானும் விரும்பவில்லை; நேருவும் விரும்பவில்லை.'' —மந்திரி சாவன்

பகவானும் விரும்ப மாட்டார்!

★

தூத்துக்குடியில் பூ வியாபாரிகள் ஸ்டிரைக்! —செய்தி

பூ! இதற்குக்கூட ஸ்டிரைக்கா?

★

பஞ்சாப் அரசாங்கக் காரியாலயத்தில் வெள்ளம் புகுந்ததால், ஆபீஸ் ரிகார்டுகள் மேஜைக்கு மேஜை மிதந்து சென்றன!

—சண்டிகார் செய்தி

சர்க்கார் காரியாலயங்களில் ரிக்கார்டுகள் மேஜைக்கு மேஜை செல்வதிலுள்ள தாமதம் அப்போதாவது நீங்கிற்று?

★

தந்தி மூலம் அனுப்பாமல் தபால் மூலம் ஒரு செய்தியைச் சர்க்காருக்கு அனுப்பிய கமிஷனின் செய்கையை ஆட்சேபித்து, சிதம்பரம் நகர சபை அங்கத்தினர்கள் சபையிலிருந்து வெளியேறினர். —தினசரி

தந்தி மூலம் வரும் செய்திக்கும் தபால் மூலம் வரும் செய்திக்கும் சர்க்கார் ஏதாவது வித்தியாசம் பார்க்கிறது உண்டா?

மகத்தான-நவீனம்
மனங்கவரும் திரைச்சித்திரம்






சென்னை ஸ்ரீ கிருஷ்ணா·வெலிங்டன்·உமா
மற்றும் தென்னாடெங்கும் இப்பொழுது நடைபெறுகிறது...

[இக்கட்டுரையை வழங்கும் ராஜபாளையம் பண்ணையார் திரு ஆர்.வி. ராமசுந்தரம் பிள்ளை பரம்பரை விவசாயி. முற்போக்குக் கருத்துள்ளவர். குடிகளிடம் அன்பும் ஆதரவும் மிக்கவர். ஜப்பானிய முறை, சீன முறை விவசாயமெல்லாம் நேரில் பார்த்தவர். அவர் கூறும் கருத்துக்கள் மேலெழுந்தவாரியாகச் சொல்லுவதல்ல என்பது இக்கட்டுரையிலிருந்து தெளிவாகும். —ஆசிரியர்]

# நிலஉடைமைக்கு உச்ச வரம்பும் கூட்டுமுறை விவசாயமும்

ஆர். வி ராமசுந்தரம் பிள்ளை

நாட்டின் பிரஜை ஒவ்வொருவனும் தேச முன்னேற்றத்துக்கான திட்டங்களை நிறைவேற்றி வைப்பதில் அரசாங்கத்துடன் பூரணமாக ஒத்துழைக்க வேண்டும். இதில் சந்தேகமில்லை. ஆனால் முன்னேற்றம், அபிவிருத்தி என்னும் பெயரில் தேச நலனைச் சிதைக்கக் கூடிய அபாயகரமான திட்டங்களைப் பரீக்ஷிக்க அரசாங்கம் முற்படும்போது அது எப்படி, எங்கே தவறிப் போகின்றது என்பதை ஒவ்வொருவனும் அரசாங்கத்துக்கு எடுத்துரைக்கக் கடமைப்பட்டவனாக இருக்கிறான். நில உடைமைக்கு உச்ச வரம்பு நிர்ணயிக்கும் தீர்மானங்கள்; உபரியாகக் கிடைக்கும் நிலத்தைச் சொற்ப விலைக்கு வாங்கி விடுதல்; அந்த நிலங்களை நிலமில்லாதவர்களுக்கு வழங்குதல்; அவ்வாறு வழங்கப்பட்ட நிலங்களைக் கூட்டு முறை விவசாயம் மூலம் பயிரிடச் செய்வது; அதன் மூலம் உணவு உற்பத்தி வேகமாகப் பெருகும் என்று சாதிப்பது — இவையனைத்தும் அபிவிருத்தித் திட்டங்கள் என்று சொல்லப்பட்ட போதிலும் தவறான பாதையில் நாட்டை இட்டுச் செல்லுபவை. தேசாபிமானம் கொண்ட ஒவ்வொருவனும் இத்திட்டங்களை எதிர்க்க வேண்டும். இத்திட்டங்களைச் செயலில் நிறைவேற்றினால் எத்தகைய பயங்கரமான கேடுகள் நிச்சயமாக விளையுமென்பதை எடுத்துக்காட்டுவதுதான் இக்கட்டுரையின் நோக்கம். நிலச்சீர்திருத்த வாதிகளும் அரசாங்கத் தலைவர்களும் தீர்க்கமான ஆலோசனைகளும் பரிசீலனைகளும் செய்த பிறகுதான் இம்மாதிரி முடிவுக்கு வந்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். சீர்திருத்தத்தில் நாட்டம் கொண்டவர்கள் இதைச் சொல்லத்தானே வேண்டும். ஆனால் அவர்களுடைய யோசனைகளும் சிந்தனைகளும் குறிப்பிட்ட கருத்துக்கும் கோட்பாடுகளுக்கும் நம்பிக்கைகளுக்கும் உட்பட்டே செயல்படுகின்றன. இக்கருத்துக் கோட்பாடுகள் அயல்நாடுகளிலிருந்து இரவலாகக் கிடைத்தவை. அவர்களுடைய சிந்தனாமுறைகள் இந்திய மக்களின் வாழ்க்கை முறைக்கு இணக்கமாக ஒத்திருக்கவில்லை.

ஜனநாயகம் நிலவும் எந்த நாட்டிலும் ஏதாவது சீர்திருத்தம் கொண்டுவர வேண்டுமானால், தற்போது நிலவும் நிலைமையை அந்தந்தத் தொகுதியிலுள்ள பிரதிநிதிகளுடன் கலந்து முதலில் ஆராய்ந்து தெரிந்து கொள்ள வேண்டும். அதில் சிறந்தவையாக எந்த அம்சங்கள் இருக்கின்றனவோ, அவற்றைக் குலைக்காமல் ஆதாரமாக வைத்துக் கொண்டு அதன் மீது சீர்திருத்தக் கட்டுக்கோப்புகளை எழுப்ப வேண்டும். இந்த முறையை நமது அரசாங்கம் நிலச்சீர்திருத்த விஷயத்தில் பின்பற்றியிருக்கிறதா? விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும் பிரஜைகளை உற்பத்தி பெருக என்ன செய்யலாம் என்று ஆலோசனை கேட்டார்களா? தற்போதுள்ள முறைகளை எந்த விதத்திலும் அபிவிருத்தி செய்து மாற்ற முடியாது, புரட்சிகரமான ஒரு புது மாதிரி முறையை முற்றும் மாறுபட்ட புது முறையை புகுத்தியே ஆக வேண்டும் என்று அரசாங்கம் எப்படி நிச்சயித்தது? இந்திய நிலவரங்களுக்குச் சற்றேனும் ஒவ்வாததும், நிலத்திலேயே உழன்று பாடுபடும் விவசாயிகளின் அநுபவத்துக்கு முற்றிலும் மாறுபட்டதும், அரசாங்கத்துக்குச் செல்லமானதுமான இந்தச் சீர்திருத்தங்களைப் பரபரப்புடன் நிறைவேற்றி வைக்க முற்படுவதற்குமுன், இவையெல்லாம் நாட்டுக்கு நன்மைதானா என்பதைச் சர்க்கார் சற்றே சிந்திக்க வேண்டியது அவசியம்.

உச்சவரம்புக்கும் கூட்டுறவு விவசாயத்துக்கும் சட்டம் வரப் போகிறதென்ற செய்தியே உணவுப் பண்ட உற்பத்தியில் ஈடுபட்டுள்ள நிலச்சுவான்தார்களிடையே பெருத்த பீதியை விளைவித்து விட்டது. சுமார் பத்து வருஷங்களுக்கு முன்பு வரையில் விவசாயத் தொழில் எல்லோராலும் விரும்பப்பட்டு, அரசியல் பூசல்களில் சம்பந்தப்படாது அமைதியுடன் நடந்து வந்தது. வானம் பொய்த்த காலத்தும், யுத்தம் நடந்த காலத்திலும்தான் சிற்சில இன்னல்களுக்கு விவசாயிகள் ஆளானார்கள். ஆனால் இப்போது சாதாரண நாட்களிலேயே பண்ணை நிலங்கள் சீதள யுத்தம் நடக்கும் போர்க்களங்களாக மாறிவிட்டன என்றால் அது பொய்யல்ல. இந்தச் சீதள யுத்தத்தில் நிலத்தைப் பெற்றுள்ள சொந்தக்காரனுக்கும் விவசாயத் தொழிலில் நிம்மதி இல்லை, வேலை செய்வோனுக்கும் அமைதி இல்லை. சொந்தக்காரனுக்குத் தனது உடைமை கொஞ்சம் கொஞ்சமாகப் பறிபோய் விடுமென்ற பீதி வளர்ந்து கொண்டே இருக்கிறது. வேலைக்காரர்களோ நையாண்டி செய்து பயமுறுத்துவதிலேயே அக்கறை காட்டுகின்றனர். நாட்-

டின் இன்றியமையாத தேவையான உணவு உற்பத்திக்கு இப்போது முக்கியமாகத் தேவைப்படுவது இரு சாரார்களிடமிருந்தும் சரியான உழைப்பு. இத்தருணத்தில்தான் நிலச் சீர்திருத்த உற்சாகிகளின் செயல்களால் சொந்தக்காரர்களின் ஊக்கமும் உழவர்களின் உழைப்பும் குன்றிப் போயிருக்கின்றன. ஆனால் அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்களென்ற பற்றுதலால் நிலச் சீர்திருத்தவாதிகள் சொல்லுவது மட்டுமே அரசாங்கத்தார் காதில் விழுகிறது. விவசாயத்தைப் பற்றி முற்றிலும் தெரிந்த அனுபவசாலிகளின் கூற்று அரச மாளிகைக்குள் புகுவதில்லை. இம்மாதிரி ஏற்பட்ட நிராசையின் விளைவுதான் உணவுப் பண்டங்களின் உற்பத்திக்குறைவு. ஐந்தாண்டு திட்டங்களில் உணவுப் பெருக்கத்துக்கென ஏராளமான பணம் செலவு செய்யப்பட்ட போதிலும், உற்பத்திப் பெருகப் போகிறதென்று உத்தேச மதிப்பீடுகள் செய்திருந்தும் எதிர்பார்த்ததற்குமாறாகச் சமீப ஆண்டுகளில் உற்பத்திக்குறைவுக்கு இந்நிராசை தான் காரணம். நிலச் சீர்திருத்தங்கள் பூராவும் அமுலாக்கப்பட்டால் என்ன விளையும் என்பதற்கு இந்தக் கசப்பான உண்மைகளை ஒரு முன்னெச்சரிக்கையாக அரசாங்கம் கருத வேண்டும்.

நடைமுறையில், நில உடைமைக்கு உச்சவரம்பு என்பதின் அர்த்தம் என்ன? சுருங்கச் சொன்னால், நிலத்தின்மீது அன்பு கொண்டிருப்பவர்களிடமிருந்து நிலத்தைப் பிடுங்கி நிலத்தில் அக்கறையில்லாதவர்களுக்கு அதை அளிப்பது; முதிர்ந்த அனுபவசாலிகளான விவசாயிகளிடமிருந்தும், நிலச்சுவான்தாரர்களிடமிருந்தும் நிலத்தைப் பிடுங்கி அனுபவமில்லாத கற்றுக்குட்டிகளிடம் அதை ஒப்படைப்பது; நிலத்தை இழந்து விட்ட சொந்தக்காரன் அமைதியிழந்து ஏழைமை நிலையை அடைவது; கஷ்டப்பட்டுச் சம்பாதிக்காமல் சொற்பகாசுக்கோ அல்லது சும்மாவோ நிலத்தை அடைந்த புதுச் சொந்தக்காரர்கள் தெரியாத்தனத்தால் தங்கள் மனம் போனபடியெல்லாம் விவசாயம் நடத்துவது; இதுதான் உச்சவரம்பின் பொருள். இதன் விளைவாகப் பழைய சொந்தக்காரருக்கும் விவசாயத்தில் அக்கறை இராது. புதுச் சொந்தக்காரருக்கும் விவசாய உற்பத்தியில் அக்கறையிராது. உற்பத்தி குறைந்து, அடுத்த சில வருஷங்களில் உணவுப் பஞ்சம் நிச்சயமாக வரத்தான் செய்யும். ஆகவே நில உச்சவரம்பினால் விவசாயத்தில் சீர்திருத்தம் உண்டாகாது. சீர்கேடுதான் பெருகும். விவசாயமே குலைந்து போகும். இந்தப் பேராபத்து நாட்டில் தோன்றத் தொடங்கி விட்டால், அதிலிருந்து விமோசனமே கிடையாது.



திரு ஆர். வி. ராமசந்தரம் பிள்ளை

புதுச் சொந்தக்காரர்களுக்கு அனுபவம் போதாது என்பதை ஒருவாறு ஒப்புக்கொண்டு அதற்குச் சமாதானமாகக் கூட்டுறவு விவசாயத்தினாலும்; யந்திர சாதனங்கள்; நவீன முறைகள்; விஞ்ஞான ஆராய்ச்சிகளின் உதவி; பெரும் பண்ணை நிர்வாகம்; ஆகியவற்றின் மூலமாகவும் இக்குறையை நிவர்த்தி செய்துவிட முடியுமென்று சீர்திருத்தவாதிகள் நம்புகின்றனர். ஆனால் நடைமுறையில் இது சாத்தியமாகக் கூடியவை அல்ல. முதலாவது, நமது நாட்டில் பொதுநல உணர்ச்சி மக்களிடையே பிரமாதமாக வளர்ந்து விடவில்லை. கூட்டுறவு முறைக்கு இந்த உணர்ச்சி மிகவும் அவசியம். இதில்லாவிடில் கூட்டுறவு ஸ்தாபனங்களைச் சாமர்த்தியமும் திறமையுமுள்ள ஒரு சில அதிகாரிகள் அல்லது அங்கத்தினர்கள் தங்கள் சுயநலத்துக்காகப் பயன்படுத்திக் கொள்ளுவார்கள். நமது நாட்டில் கூட்டுறவுச் சங்கங்களின் சரித்திரத்தைக் கவனித்துப் பார்த்தால் இந்த உண்மை நன்கு தெரியும். இரண்டாவது சிறு சிறு துண்டு நிலங்களை டிராக்டர் போன்ற நவீன யந்திர சாதனங்களைக் கொண்டு உழ வேண்டுமானால், பெரிய நிலங்களாக மாற்ற வேண்டும். அதற்கு வரப்புகளை யெல்லாம் அகற்றித் தான் ஆக வேண்டும். அதனால் உயர்தர பூமிகள் தங்கள் தரத்தை இழந்து போகும். கீழ்த்தர நிலங்களாவது உயர்தர நிலங்களாக மாறுமோ என்றால் அதுவும் மாறாது. அடுத்தடுத்துள்ள நிலங்களாக இருந்தாலும் ஒன்றுக்குள்ள மண்வளம் மற்றொன்றுக்கு இருக்காது. ஒரு ஏக்கர் உயர்ந்த வளமுள்ள பூமி இருந்தால் அடுத்துள்ள பல ஏக்கர் நிலங்கள் மட்டரக பூமியாக இருக்கலாம். இந்த உண்மை நிலத்தில் உழன்று அனுபவப்பட்டவர்களுக்கே தெரியும். மாறுபட்ட வளமுள்ள எல்லா நிலங்களையும் சமன் செய்து விட்டால் அதிக உற்பத்தி கிடைத்து விடுமென்று எதிர்பார்க்க முடியாது. ஆகவே உச்சபக்ஷ வரம்பினின்றும் கூட்டுறவு முறை விவசாயத்திலிருந்தும் உற்பத்தி பெருகும் என்பது கானல் நீர் போலத்தான்.

## அதோகதியாகி விடுமாம்!

நிலச் சீர்திருத்தத்துக்குச் சட்டம் வரவேண்டியது அவசியம்தான் என்பதற்குக் காங்கிரஸ் தலைவர்களாலும் அரசாங்கத்தாராலும் மற்றொரு காரணம் சொல்லப்படுகிறது. சட்ட மூலம் சீர்திருத்தம் செய்யாவிட்டால் இந்தியாவின் கதி அதோகதியாகப் போய்விடுமாம்! உலகத்தில் மற்ற நாடுகளெல்லாம் அபரிமிதமான உற்பத்திப் பெருக்கு மூலம் அவரவர்கள் நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரத்தை

உயர்த்த வெகு வேகமாக முன்னேறிக் கொண்டிருக்கும்போது இந்தியா மட்டும் தனித்து நிற்கக் கூடாதாம்! உளுத்துப்போன விவசாய முறைகளை விடாது பிடித்துக்கொண்டே இந்தியா மாத்திரம் தனித்து நிற்குமேயானால் பாரதம் என்றென்றைக்கும் உலகத்தில் பின்னடைந்த நாடாகவேதான் இருக்குமாம்! அதன் அவசியமான தேவைகளுக்கும் வாழ்க்கை நடத்துவதற்கும் அயல்நாட்டு உதவியை எதிர்பார்க்க வேண்டிய அவல நிலையிலேயே இருக்குமாம்! இது அவர்கள் கூறும் வாதம். இதில் பொதிந்துள்ள தவறுகளை விளக்கலாம்.

## மற்ற நாடுகளில் முன்னேற்றம் கூட்டுப் பண்ணையினால் அல்ல

முதலாவதாக முன்னேற்றமடைந்துள்ள மற்ற நாடுகளெல்லாம் நில உடைமைக்கு உச்சவரம்பு கட்டிக் கூட்டுறவு விவசாய முறையினால்தான் முன்னேறியுள்ளார்கள் என்பது உண்மையல்ல. கம்யூனிஸ்ட் நாடுகளாகிய ருஷ்யா, சீனா முதலிய தேசங்களில்கூடப் பெரிய பெரிய பண்ணைகளைச் சிறுசிறு பண்ணைகளாகச் செய்ததினால் உற்பத்தி குறையத்தான் செய்கிறதென்பதையும், சர்க்கார் சமூக ஸ்தாபனத்தின் மூலமும், கூட்டுறவு முறை மூலமும் நிலைமையைச் சமாளித்து உற்பத்தியைப் பெருக்க முடியவில்லையென்பதையும், தனிப்பட்ட விவசாயிகளுக்குத் தன்னுடைய பண்ணையைச் சரிவரப் பயிரிடத்தக்க ஊக்கமளிப்பதனால் மட்டுமே நிலத்திலிருந்து மகசூல் அதிகரிக்கிறதென்பதையும், அனுபவம் மூலம் கண்டுள்ளார்கள். நமது நாட்டிலும் கூட்டு முறை விவசாயத் துறையில் நடத்திய சில பரிட்சைகள் இதுவரை தோல்வியே அடைந்துள்ளன. மாறாகத் தனிப்பட்டவர்களின் முயற்சிக்கு மதிப்புக் கொடுக்கும் அமெரிக்காவிலோ பெரிய பெரிய பண்ணைகளில் நவீன யந்திர சாதனங்களை உபயோகித்து உற்பத்தியை இருமடங்காகப் பெருக்கியிருக்கின்றனர். இந்தச் சாதனையைப் பற்றிக் குறிப்பிடும்போது ஜனாதிபதி ஐஸன்ஹோவர் ''கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளில் கண்டிராத முன்னேற்றத்தை இந்தத் தலைமுறையில் நமது அமெரிக்க விவசாயம் கண்டிருக்கிறது. விவசாய உற்பத்தியில் ஒரு புரட்சியையே உண்டு பண்ணி விட்டோம்'' என்று சொன்னார்.

இரண்டாவதாக, தலைமுறை தலைமுறையாக வந்துள்ள விவசாய முறைகளைப் பலாத்காரமாகப் புரட்சி செய்து மாற்றியமைத்து மேற்கு நாடுகள் வெற்றி கண்டு விட்டனர் என்றே வைத்துக் கொண்டாலும், அதே முறைகளை நமது நாட்டில் காப்பியடித்துப் புகுத்த வேண்டுவது அவசியந்தானா? உலகம் முழுதும் யுத்தத்தில் ஈடுபட்டிருந்த போது காந்திஜியின் தலைமையில் இந்தியா மட்டும் யுத்தத்தை எதிர்த்துத் தனித்து நின்று நடைமுறையிலும் அதைக் கடைப்பிடித்துக் காட்டவில்லையா? உலகத்தில் சுதந்திரம் பெற்ற நாடுகள் எல்லாம் ராணுவப் புரட்சி மூலமே சுதந்திரம் அடைந்திருக்க, இந்தியா விடுதலையடைய அதே முறையையா கைப்பற்றியது? நமக்கு ஏற்றப் பாதையென்று தனியான அஹிம்சை வழியை பாரதம் பின்பற்றிச் சுமுகமாகவே விடுதலையடையவில்லையா? நிலைமை அவ்வாறிருக்க, விவசாயச் சீர்திருத்த விஷயத்தில் மட்டும் நமக்கு ஏற்ற இந்தியத் தனி வழியைப் பின்பற்ற ஏன் தயங்க வேண்டும்?

நமது நிலைமைக்கும் பண்புக்கும் சிறிதும் ஒவ்வாத இந்த நிலச் சீர்திருத்தத்தைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று சொல்லும் காலம் வந்து விட்டது. நம் பாரதத்துக்கு ஏற்ற முறை ஜனநாயக முறை. நில உடைமைக்கு வரம்பு கட்டுவது தனி மனிதனின் சுதந்திரத்துக்கு வரம்பு கட்டுவதே யாகும். இதில் நிர்ப்பந்தம் நிறைய இருக்கிறது. பலாத்காரம் இருக்கிறது. பலாத்காரத்தை உபயோகித்து மக்கள் மனமொடிந்து போகும்படி கொண்டு வரப்பட்ட எந்தச் சீர்திருத்தமும் சமூக அமைப்பின் அடிப்படையையே செல்லரித்துவிடும். இதில் சந்தேகம் இல்லை.

## பொறுத்துப் பார்க்கலாமே

“அடுத்த சில ஆண்டுகளுக்கு - சுமார் பதினைந்து வருஷங்களுக்கு - விவசாயத் துறையில் சர்க்கார் தொகுதிக்கும் தனியார் தொகுதிக்குமிடையே இப்போதுள்ள நிலைமையை மாற்றுவதில்லை என்று ஒரு தற்காலிக உடன்படிக்கை ஏற்படட்டும்'' என்று யாரோ ஒருவர் சொன்னார். அதை நான் சர்க்காருக்கு நினைவூட்ட விரும்புகிறேன். அரசாங்கம் விவசாயிக்குத் தேவையான உயர்தர விதை, உரம், கடன் வசதி முதலியவற்றைக் கொடுத்து உதவட்டும். நிலச்சுவான்தாரரையும் உழவர்களையும் பிரித்து, இவர்களுக்குள் மனவேற்றுமையை உண்டாக்கும் எந்தவித செயலையும் அரசாங்கம் செய்யாதிருக்கட்டும். கடும் உழைப்பு தேவை, உணவு உற்பத்தி பெருக வேண்டும் என்று தலைவர்கள் விவசாயிகளின் தேசாபிமான உணர்ச்சியைத் தட்டி எழுப்பட்டும். நம் நாட்டு நிலச் சொந்தக்காரர்கள் எல்லோரும் மெச்சத் தக்கவாறு அவர்கள் பங்கை நிச்சயம் செய்வார்கள். இந்திய நிலச்சுவான்தார் ஜப்பானிய நிலச்சுவான்தாரரைக் காட்டிலும், சீன நிலச்சுவான்தாரரைவிட எந்த விதத்திலும் குறைந்தவரல்ல. அவர்கள் புரிந்த சாதனைகள் வானளாவப் புகழ்ந்து கொண்டாடப்படுகின்றன. நமது நாட்டிலும் முந்திய ஆண்டுகளில் நிலவிய அமைதியும், தனது உடைமை பறி போகாது என்ற நிச்சயமும் நிலச்சுவான்தாரருக்கு ஏற்பட்டால், தேசத்தின் நலனை உத்தேசித்து தமது பங்கைச் செய்ய அவர் தவறமாட்டார். இந்தியாவில் உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு இது தான் ஒரே வழி.

பதினைந்தாண்டு உடன்படிக்கைக் காலம் கழிந்ததும் நிலத்துக்கு உச்சவரம்பு தேவையே இல்லை என்பதை எல்லோரும் உணர்வார்கள். படித்த இளைஞன்கூட விவசாயத்தில் அக்கறை கொள்ளுவான். நமது புராதனத் தொழிலாகிய விவசாயம் மீண்டும் நமது பாரதப் பண்புக்கும் சமூக அமைப்புக்கும் உகந்த முறையில் மேல் நாட்டு அனுபவத்தின் சிறப்பான அம்சங்களையும் ஏற்றுக் கொண்டு, சீரும் சிறப்புமாகச் செழிக்கும்.

[ திரு வி. கே. ராமஸ்வாமி முதலியார் அவர்கள், சென்னை சட்டசபையில் எதிர்க் கட்சித் தலைவராகச் சிறப்புடன் பணியாற்றி வருகிறார். இவருடைய தலைமையில் இயங்கி வந்த சென்னை மாநில ஜனநாயகக் காங்கிரஸ் கட்சி, சமீபத்தில் சுதந்திரக் கட்சியில் இணைந்திருப்பதை அனைவரும் அறிவார்கள். இனி திரு வி. கே. ஆர். அவர்கள் சென்னை சட்ட சபையில் சுதந்திரக் கட்சித் தலைவராக செயலாற்றுவார். விவசாயத்தில் ஈடுபாடு கொண்ட அவர் தமது அனுபவவாயிலாகக் கூறும் உண்மைகளை நமது அரசாங்கம் ஆழ்ந்து கவனிக்க வேண்டும். —ஆசிரியர்]

# கூட்டுப் பண்ணை நன்மை பயக்காது

### வி. கே. ராமஸ்வாமி முதலியார்

(சென்னை சட்டசபை எதிர்க்கட்சித் தலைவர்)

சுதந்திரத்திற்குப் பின் நாட்டின் முன்னேற்றத்துக்காக ஐந்தாண்டு திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. ஒரு திட்டம் முடிந்து இரண்டாவது திட்டம் முடியும் தருவாயிலிருக்கிறது. இத் திட்டங்களில் உணவு உற்பத்திப் பெருக்குக்கு முதலிடம் அளிக்கப்பட்டு உற்பத்தியும் பெருமளவுக்கு அதிகரித்திருக்கிறது. அவ்வாறு அதிகரித்திருப்பினும், தீவிரமான புது முறைகளைப் புகுத்தி உற்பத்தியை இன்னும் வேகமாகப் பெருக்காவிடில் நாட்டில் குழப்பம் ஏற்பட்டுவிடும் என்று அதிகார பீடத்திலுள்ள சிலர் மக்களிடையே பீதியைப் பரப்பி வருகின்றனர். தாங்களாகவே ஏற்படுத்திக் கொண்ட இந்தப் பீதியைப் போக்குவதற்குக் கூட்டு விவசாயம், நில உடைமைக்கு உச்சவரம்பு, உணவுப் பண்டங்களில் அரசாங்க வர்த்தகம் முதலிய சிக்கலான முறைகளை நிவாரணங்களாகக் கூறி வருகின்றனர். இம் முறைகளைத்தான் ஆளும் கட்சியினர் நாகபுரி தீர்மானம் என்று பிரசித்தி பெற்ற தீர்மானத்தில் பொறிக செய்திருக்கின்றனர். இத் தீர்மானத்தின் வாசகமும் அம்சங்களும் எல்லோருக்கும் தெரிந்ததே.

பெரும்பாலான நம் மக்களுக்கு விவசாயம் வெறும் தொழில் அல்ல. அது ஒரு வாழ்க்கை முறை. இதை நன்கு உணர்ந்து கொண்டு நிலச் சம்பந்தமான சீர் திருத்தங்களை மிகுந்த எச்சரிக்கையுடன் மேற்கொள்ள வேண்டும். அவசரப்பட்டு செய்துவிடக் கூடாது.

சமூக நலனுக்காகச் சுதந்திரத்துடனும் சுயேச்சையுடனும் கூட்டுறவு விவசாய முறையில் நிலச் சொந்தக்காரர்கள் ஒன்று சேர்வதை தவறு என்றோ, கூடாது என்றோ ஒருவரும் சொல்ல மாட்டார்கள். ஆட்சேபனைகளுக்குக் காரணம் சொத்துடைமை பறிபோய்விடும் என்பதை குறிப்பிக்கும் அம்சங்கள் இத்தீர்மானத்தின் முதல் பகுதியில் காணப்படுவதுதான். ஒருவனுடைய நிலங்கள் கூட்டுப் பண்ணைக்காக ஒன்று சேர்க்கப்பட்டவுடன் அந் நிலங்களின் வரப்புகள், எல்லைக் கற்கள் எல்லாம் எடுபட்டுப் போய்விடுகின்றன. எல்லா நிலங்களும் கூட்டுப் பண்ணையில் ஐக்கியமாகி விடுகின்றன. தனி உடைமை என்பது மறைந்து போகின்றது. சொத்துரிமைக்கு உத்திரவாதம் அளிக்கப்படும் என்பதெல்லாம் வெறும் கண் துடைப்பு. காகிதத்தில் மட்டுமே உரிமை இருக்கும். உண்மையில் இருக்காது. இந்த நிலைமைதான் கூட்டுறவு விவசாயத்தைப் படிப்படியாக ருஷ்ய, சீன முறைகள் என்று பிரசித்தி பெற்ற கூட்டுப் பண்ணை (Collectives) அல்லது சமுதாயப் பண்ணைக்குக் கொண்டு விடும். இந்த இறுதி நிலையில் நிலங்கள் எல்லாம் தேசியமயமாக்கப்பட்டு சர்க்கார் நேரடியாக விவசாயத்தில் தலையிடுவார்கள்.

இதர நாடுகளில் காணப்படும் முன்னேற்றங்களையும் நடவடிக்கைகளையும் நாம் கவனித்துப் பயனடைய வேண்டுமென்பது உண்மைதான். ஆனால் அந்தந்த நாடுகளில் நிலவும் அரசியல் சூழ்நிலைகள் என்ன, பின்னணிகள் என்ன, லட்சியங்கள் யாவை, அவற்றை அடைய அவர்கள் மேற் கொண்ட முறைகள் எவை முதலிய அம்சங்களையும் கவனிக்கத் தவறக் கூடாது. இதர நாடுகளில் உருவாக்கப்பட்ட விவசாய முறைகளை — முக்கியமாக ஒரு கட்சியின் அரசியல் நடவடிக்கை மூலமே செயல்படக்கூடிய முறைகளை — நமது நாட்டில் புகுத்த முயற்சிப்பது அபாயகரமானது. அந்த நாடுகளில் கையாளப்படும் செயல் முறை ஏறக்குறைய ஒன்று போல இருக்கும். நிலச் சொந்தக்காரர்களுக்கு எதிராக விவசாயத் தொழிலாளிகளுக்குச் சலுகை அளிக்கப்படும். சொந்தக் காரருடைய நிலங்களைப் பறிமுதல் செய்து விவசாயத்



திரு வி. கே. ராமஸ்வாமி முதலியார்

தொழிலாளிகளுக்கும் பகிர்ந்தளிப்பதும் இச் சலுகைகளில் அடங்கியுள்ளது. இதுதான் ஆரம்பக் கட்டம். அடுத்தபடி விவசாயத் தொழிலாளிகளுக்கு (அவர்கள் எல்லாம் இப்போது சிறுநிலச் சொந்தக்காரர்களாவார்கள்) எதிராக பாட்டாளிகளுக்குச் சலுகை காட்டப்படும். முதலில் "உழுபவனுக்கே நிலம்." "நிலச்சுவான்தார்கள் ஒழிக" என்பன போன்ற கோஷங்கள் ஒலிக்கும். பிறகு விவசாயிகள் பகுதி பகுதியாகப் பிரிக்கப்பட்டு படிப்படியாக சர்க்கார் ஆதிக்கத்துக்குள் ஒடுங்கி விடுவார்கள். இந்த முறை நமது நாட்டுக்கு ஏற்றதல்ல. ஜனநாயக முறைக்கு ஒவ்வாதது.

## உற்பத்தி பெருகி யிருக்கிறது

திட்டமிட்டு முன்னேறுவது என்ற நாள் முதல் நமது உணவு உற்பத்தி பெருகி வந்திருக்கிறது. கடந்த பத்தாண்டு காலத்தில் நமது உணவு உற்பத்தி 25 சத விகித அளவுக்கு அதிகரித்திருக்கிறது. இதை உணராமல், உற்பத்தி பெருகவில்லை, அல்லது பெருகியது போதவில்லை என்று ஆத்திரப்படுவதில் அர்த்தமில்லை. சென்னை மாநிலத்தில் மட்டும் 1949-50 ஆண்டு உற்பத்தியுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் 1957-58ம் ஆண்டு உற்பத்தி 74·5 சதம் உயர்ந்திருக்கிறது. பருவ கால நிலைமை சாதகமாக இருந்ததால்தான் இவ்வாறு உற்பத்தி அதிகரித்தது என்பதை ஒப்புக் கொண்டாலும் நிலச் சொந்தக்காரர்களின் ஊக்கமும் உற்சாகமும் இச்சாதனைக்கு ஒரு முக்கிய காரணம் என்பதையும் இங்கே எடுத்துக் காட்ட வேண்டும்.

சென்னை ராஜ்யத்தில் உணவுப் பண்டங்களின் ஏற்றுமதிகூட இரண்டு மடங்குக்கு மேல் அதிகரித்திருக்கிறது என்பதையும் இங்கே முக்கியமாக எடுத்துக் கூறவேண்டும். 1954-55 ஆண்டில் சென்னை இதர பகுதிகளுக்கு 1,12,000 டன் உணவுப் பொருள்கள் ஏற்றுமதி செய்தது. 1957-58 ஆண்டில் இந்த வகையில் ஏற்றுமதியானது 2,31,608 டன்கள். சென்ற ஒன்பது ஆண்டு காலத்தில் தற்போது சென்னை ராஜ்யத்தில் அடங்கிய மாவட்டங்கள் அனைத்திலும் உற்பத்தியான உணவுப் பொருள்களின் ஜாபிதா கீழே கொடுக்கப்பட்டுள்ளது :

| | அரிசி | | இதர தானியங்கள் | | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| வருஷம் | விஸ்தீரணம் (ஏக்கர்) | உற்பத்தி (டன்கள்) | விஸ்தீரணம் (ஏக்கர்) | உற்பத்தி (டன்கள்) | உற்பத்தி (டன்கள்) |
| 1949 — 50 | 47,69,000 | 17,91,460 | 48,54,000 | 12,55,540 | 30,47,000 |
| 1950 — 51 | 42,99,000 | 19,50,000 | 46,75,000 | 11,44,330 | 30,94,330 |
| 1951 — 52 | 44,20,000 | 20,95,000 | 53,33,000 | 13,68,970 | 34,63,970 |
| 1952 — 53 | 43,09,000 | 19,89,000 | 57,30,000 | 11,12,500 | 31,01,560 |
| 1953 — 54 | 51,43,000 | 25,39,000 | 66,08,000 | 15,68,280 | 41,07,280 |
| 1954 — 55 | 53,35,000 | 27,53,000 | 59,08,000 | 17,77,240 | 45,30,240 |
| 1955 — 56 | 54,56,000 | 29,55,000 | 55,28,000 | 14,66,980 | 44,21,980 |
| 1956 — 57 | 53,38,000 | 31,03,000 | 55,97,000 | 15,19,740 | 46,22,740 |
| 1957 — 58 | 56,05,000 | 31,34,000 | 55,75,000 | 15,24,720 | 46,58,720 |

இந்த விவரங்களிலிருந்து நமது மாநிலத்தில் உற்பத்தி எவ்வாறு பெருகியிருக்கிறதென்பது விளங்கும்.

இந்த உற்பத்தி சாதனையை கூட்டுப்பண்ணை முறை அமுலிலிருக்கும் செஞ்சீனாவின் சாதனையுடன் ஒப்பிட்டுப் பார்ப்போம். 1952ம் ஆண்டில் உணவுப் பொருள் உற்பத்தியின் அளவு 16·3 கோடி டன்கள் என்றும் 1955ம் ஆண்டில் 18·3 கோடி டன்களாக உயர்ந்தது என்றும் புள்ளி விவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதன்படி இந்த மூன்றாண்டுகளில் உற்பத்தி 12·4 சதவிகிதத்தில் அதிகரித்திருக்கிறதென்று கணக்காகும். ஆனால் விளைநிலத்தின் விஸ்தீரணம் 4·6 சதவிகிதம் அதிகரித்திருக்கிறது. இவ்விரண்டையும் இணைத்துப் பார்த்தால் உற்பத்தியின் நிகர அதிகரிப்பு 7·5 சதவீதம்தான் .12·4 சதவீதமல்ல என்று கணக்கு வரும். இந்தியாவில் இதே காலத்தில் உற்பத்தியின் அதிகரிப்பு 25 சதவீதம் ஏற்பட்டிருக்கிறது. இதிலிருந்து கூட்டுப் பண்ணை முறை இல்லாமலே கணிசமான அளவுக்கு உற்பத்தியையைப் பெருக்க முடியும் என்பது தெரியவரும்.

## முரணான பேச்சுக்கள்!

மேலும், சிறு நிலங்களையும் துண்டு நிலங்களையும் யந்திர முறை விவசாயத்துக்காகவும் நவீன முறை வேளாண்மைக்காகவும் ஒன்று சேர்த்துக் கூட்டுப் பண்ணைகளாக்க வேண்டியது அவசியம் என்று ஒருபுறம் சொல்லப்படுகிறது. அதே மூச்சில் பெரிய பண்ணைகளுக்கு உச்சவரம்பு கட்டி அவற்றை யெல்லாம் சிறு பண்ணைகளாக ஆக்க வேண்டு மென்றும் சொல்லப்படுகிறது. இவையிரண்டும் ஒன்றுக்கொன்று முரணானவை. நேர்மாறான கருத்துக்கள். வாதத்துக்கு ஒவ்வாதவை. போதிய நீர்ப்பாசன வசதிகளும், குறைந்த விலையில் தேவையான ரசாயன உரமும், நமது விவசாயிகளுக்குக் கிடைக்க வகை செய்து விட்டால், மற்ற நாடுகளில் ஒரு ஏக்கர் விளைநிலத்திலிருந்து கண்டு முதலாகும் அளவுக்கு நமது நாட்டு நிலங்களிலிருந்தும் மகசூல் உண்டாக்க முடியும் என்று நிச்சயமாக எதிர் பார்க்கலாம். நமது விவசாயிகளை இந்த விஷயத்தில் நம்பலாம்.

மற்றொரு விஷயமும் அடிக்கடி பேசப்படுகிறது. சிறிய துண்டு நிலத்தைப் பயிரிட்டு

ஜீவனம் நடத்தும் ஏழை விவசாயி எப்போதுமே அரை வயிற்றுக் கஞ்சி அருந்தும் நிலைமையில் இருப்பதால் தெய்வச் செயலால் எப்போதாவது ஒருபோகம் மகசூல் கிடைக்காமல் போனால் அந்த ஆண்டு அவன் முழுப் பட்டினி கிடக்கவே நேரிடும். அதனால் அவனை இந்நிலையிலேயே விட்டுவைப்பது கூடாது என்று அடிக்கடி சொல்லப்படுவதைக் கேட்கிறோம். இந்தக் கூற்று சரியல்ல. எவ்வளவு சிறிய நிலமாக இருப்பினும் அது தன்னுடைய சொந்த நிலம் என்பதில் இந்திய விவசாயி பெருமை கொள்ளுகிறான். இந்தப் பெருமையினால்தான் அவனுடைய ஊக்கமும் உற்சாகமும் விவசாயத்தில் குன்றாமல் இருக்கிறது. இதை ஆதாரமாகக் கொண்டுதான் நம் நாட்டின் செழிப்பு வளர்கிறது. இதைச் சீர்குலைக்க முற்படுவது தகாது.

## சிறிய நிலம் : அதிக மக்கள்

பாரதத்தில் நமது பிரச்னை பெருவாரியான மக்கள் சிறிய விளைநிலத்தைக் கொண்டு ஜீவிப்பதுதான். நமது ஜனசங்கியையில் 70 சதவிகிதத்தினர் விவசாயிகள். ஒவ்வொரு விவசாயக் குடும்பமும் சராசரி எவ்வளவு விளைநிலம் வைத்திருக்கிறதென்பது 1951-ம் ஆண்டு 'சென்ஸஸ்' கணக்கில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன் விவரம் பின்வருமாறு :

2 ஏக்கராவுக்கும் குறைவாக
நிலம் உள்ளவர்கள் — 51 சதம்

2-க்கு மேல் 5-க்குக் கீழ்
நிலம் உள்ளவர்கள் — 31 சதம்

5-க்கு மேல் 10-க்குக் கீழ்
நிலம் உள்ளவர்கள் — 7 சதம்

10 ஏக்கருக்கு அதிகமாக
நிலம் உள்ளவர்கள் — 11 சதம்

இதிலிருந்து குறைந்த அளவு நிலப் பரப்பை உடைய விவசாயக் குடும்பங்களின் எண்ணிக்கை மிகவும் அதிகம் என்பது விளங்கும். ஒரு குடும்பத்தைக் காப்பாற்றப் போதிய அளவு நிலம் பெரும்பாலான விவசாயிகளுக்குக் கிடையாது. இதுதான் நமது பிரச்னை. இந்த நிலைமைக்குக் காரணம் நமது நாடு தொழில் முன்னேற்றம் அடையாமல் இருப்பதுதான். தொழில் அபிவிருத்தியடைந்திருந்தால் நிலத்தை நம்பி வாழ்பவர்களில் பலபேர்களை தொழிற்சாலைகளுக்கு மாற்றி நிலத்தின் மீதுள்ள பற்றுதலைக் குறைக்க முடியும். தொழில்வளம் பெருகும் வரையில் நிலத்தின் மீதுள்ள இந்த இறுக்கம் தளராது.

கூட்டுறவுப் பண்ணைகளெல்லாம் பெரிய பண்ணைகளாக மாற்றப்பட்டு யந்திர சாதனங்களைக் கொண்டு பயிரிட ஆரம்பித்தால் இப்போது நிலத்தை நம்பி வாழும் மக்களுக்கு வேலை இல்லாமல்போகும். கிராமப்புறங்களில் வேலையில்லாத் திண்டாட்டம் இந்தச்சீர்திருத்தத்தினால் அதிகமாகும். வேலை வாய்ப்புகளை



சென்னை ஓடு தயாரிப்பாளர் சங்கத்தின் தலைவர் ஏ. ஆர். ராஜகோபாலன் நான்காவது வருடாந்திர விழாவில் அகில இந்திய ஓடு உற்பத்தியாளர் சங்கத்தின் தலைவர் திரு பி. எஸ். நாயர் அவர்களையும், அங்கத்தினர்களையும் வரவேற்றுப் பேசுகிறார்.

அதிகரிப்பது நமது லட்சியம். ஆனால் இந்தச் சீர்திருத்தத்தின் விளைவு நேர்மாறானது.

## சிக்கல்கள் உண்டாகும்

மேலும் நடைமுறையில் கூட்டுப் பண்ணையினால் பல சிக்கல்கள் ஏற்படும். ஒவ்வொரு விவசாயிக்கும் தன் நிலத்தில் எவ்வளவு வேலை செய்யவேண்டும். அதற்குப் பலனாக எவ்வளவு மகசூல் கிடைக்க வேண்டும் என்றெல்லாம் அனுபவத்திலிருந்து தெரியும். தன்னுடைய நிலத்தின் வளத்துக்கேற்ப தனக்குக் கிடைக்க வேண்டிய மகசூல் கிடைக்காமல் போனால் சண்டைகள் கிளம்பும், மனக் கசப்பு ஏற்படும். சோம்பேறிகளும் உழைப்பாளிகளும் ஒன்றாகவே மதிக்கப்படுவார்கள். அதனால் உழைப்பாளிகளுக்குக் கிடைக்க வேண்டிய ஆதாயம், சோம்பேறிகளுக்குக் கிடைத்துக் கொண்டிருக்கும். இதையும் தவிர, அரசியல் கட்சிப் பூசல்கள் இப்போதெல்லாம் கிராமங்களுக்கும் பரவிவிட்டதால் அவற்றின் சண்டை சச்சரவுகளெல்லாம் விவசாயத்திலும் புகுவதற்கு வாய்ப்புண்டாகும். அங்கத்தினர்கள் எல்லோரும் ஒன்றாக இணைந்து செயல்பட முடியாததால் பல கூட்டுறவுச் சங்கங்கள் கலைக்கப்பட்டிருக்கின்றன என்பது இதற்கு எடுத்துக்காட்டு.

## உற்பத்தியில் கூட்டுமுறை இல்லை

ஜப்பானில் கூட்டுறவு முறை மற்ற எல்லாத் துறைகளிலும் வியாபித்துச் செயல்பட்டாலும் விவசாய உற்பத்தியில் மட்டும் கூட்டு முறை கிடையாது. நம் நாட்டில்

பல இடங்களில் உள்ள சிறு பண்ணை நிலங்களைவிடச் சிறியது ஒரு ஜப்பானிய விவசாயக் குடும்பம் வைத்திருக்கும் நிலம். கூட்டுறவுச் சங்கங்கள் அங்கே கடன் வசதி செய்துகொடுக்கின்றன; தேவைப் பொருள்களை வாங்கித் தருகின்றன; விளை பொருளை விற்றுத் தருகின்றன; பண்டங்களைப் பண்படுத்தி விற்பனைக்குத் தயாராக்க வேண்டியிருந்தால் அவற்றையும் செய்து கொடுக்கின்றன. ஜப்பானிய விவசாயிகளில் நூற்றுக்கு 95 பேர்கள் இம்மாதிரி கூட்டுறவு சங்கங்களில் அங்கத்தினர்கள். இம்மாதிரி உதவிகளின் மூலமும் சேமநல சர்க்காரின் தாராளமான உதவியினாலும் ஜப்பானிய விவசாயி ஒரு ஏக்கர் நிலத்திலிருந்து ஆசியா கண்டத்திலேயே வேறெந்த பகுதியிலும் காணாத அதிக அளவு உற்பத்தி செய்கிறான்.

## யூகோஸ்லேவியாவைப் பார்!

யூகோஸ்லேவியாவில் கூட்டுப் பண்ணையில் சேருவது ஒரு விவசாயியினுடைய இஷ்டத்தைப் பொருத்தது. சேர்ந்தாலும் தன்னுடைய சொத்துரிமையை அவன் இழப்பதில்லை. மூன்று ஆண்டு காலத்துக்குள் கூட்டுப் பண்ணைகளிலிருந்து விலகிக்கொள்ளும் உரிமையும் உண்டு. இவ்வளவு சலுகைகளிருந்தும் 1951-ம் ஆண்டு இறுதியில் இருந்த 6804 கூட்டுப் பண்ணைகள் 1953-ம் ஆண்டு இறுதியில் 4200 பண்ணைகளாகக் குறைந்தது. 1954 முடிவில் 924 பண்ணைகள் மட்டுமே செயல்பட்டு வந்தன. இதிலிருந்து கூட்டுப் பண்ணை வெற்றி பெறவில்லை என்பது தெளிவாகும்.

ஆக, கூட்டு விவசாய முறையில் சாதகமான அம்சங்களை விடப் பாதகமான அம்சங்களே அதிகமாக உள்ளன. முதல் ஐந்தாண்டு திட்டத்தின் சாதனைப் பற்றிய குறிப்பில் இது சம்பந்தமாகச் சொல்லப்பட்ட கருத்துகள் கவனிக்கத்தக்கது. "கூட்டுறவு விவசாய முறையிலேயே பொதிந்துள்ள இன்னல்களைத் தவிர; திட்டப்படிச் செயல் புரியவும் பரிசோதனைகள் செய்யவும், நாட்டில் பல ராஜ்யங்களிலுள்ள இதர பண்ணைகளில் கண்ட அனுபவங்களை வைத்து நன்மை தீமைகளை ஒத்திட்டுப் பார்த்துப் பயன்பெறவும், போதிய திறமை வாய்ந்த சிப்பந்திகள் இல்லாதது ஒரு பெரிய குறை. முதல் திட்டகாலத்தில் கூட்டு விவசாயத்தில் பரிட்சைகள் நடத்த 40 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தது. இத் தொகையில் பெரும் பகுதி செலவழிக்காமலே நின்றுவிட்டது" என்று அதில் சொல்லியிருக்கிறது.

தவிரவும், அமெரிக்க விவசாய இலாக்காவைச் சேர்ந்த டாக்டர் ஷெர்மான் இ. ஜான்ஸன் (Dr. Shirman E. Johnson) நிபுணர் என்ற முறையில் நம்நாட்டுக்கு விஜயம் செய்து இங்கு நிலவும் விவசாய முறைகளைப் பற்றி ஆராய்ந்தறிந்து ஒரு அறிக்கை சமர்ப்பித்துள்ளார். அதில் அவர் கூறுவதாவது:

"விவசாயிகள் சுயேச்சையாகக் கூட்டுப் பண்ணை விவசாயத்தில் ஈடுபடுவதில் எவ்வித ஆட்சேபமும் இருக்க இடமில்லை என்றாலும் இந்த முறையிலுள்ள சாதக பாதகங்களை அவர்கள் நன்றாக உணர்ந்து கொள்ள வேண்டும். முக்கியமான பாதக அம்சம் என்ன வென்றால் கூட்டுப் பண்ணைக்கு ஒரு மானேஜர் தேவை. இந்தியாவில் பண்ணை சாகுபடி சம்பந்தமாக விவசாய அனுபவமுள்ள மானேஜர்கள் அதிகமாக இல்லை; ஆதலால் அனுபவமில்லாத மானேஜர்களின் நடவடிக்கைகள் அங்கத்தினர்களுக்குள்ளேயே எதிர்ப்பை உண்டாக்க வாய்ப்பளிக்கும். இதனால் கூட்டுப் பண்ணையின் முக்கிய நோக்கமாகிய உற்பத்திப் பெருக்கு பாதிக்கப்படலாம்.

"கூட்டுப் பண்ணை ஏற்பட்டுவிட்டால் உற்பத்தி தானாகப் பெருகிவிடும் என்று கருதுவது தவறு. ருஷ்யாவிலேயே 'பிற்போக்கான பண்ணைகள்' என்று கருதப்பட்ட பல பண்ணைகளில் அரசாங்கக் கூட்டுப் பண்ணைகளில் ஆகும் உற்பத்தியைக் காட்டிலும் அதிகமாகவே விளைந்துக் கொண்டிருந்தன."— இவ்வாறு அவர் எடுத்துக் காட்டுகிறார்.

நமது பிரதமர் நேருஜியும் கூட ஒரு சமயம் இது பற்றிப் பேசுகையில் நிலச் சீர்திருத்தத்தைச் சமாளிப்பதற்காகவே பல இடங்களில் கூட்டு விவசாயச் சங்கங்கள் நிறுவப்பட்டிருக்கின்றன வென்று குறிப்பிட்டிருக்கிறார். புதுடில்லிப் பொருளாதாரப் பள்ளி, ஆராய்ச்சி நடத்தி உண்மையான கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்கள் நாட்டில் இல்லை என்றே முடிவு செய்திருக்கிறது. பண்ணைச் சீர்திருத்த இன்னல்களைச் சமாளிக்கவே இவை உருவாகியுள்ளன.

இவை யனைத்தையும் சீர்தூக்கிப் பார்த்தால் கூட்டுப் பண்ணை முறை விரும்பத்தகாதது மட்டுமல்ல, அது சாத்தியமானதுமல்ல; நமது பாரதப் பண்பாட்டுக்கும், சம்பிரதாயத்துக்கும், மக்கள் மனப்பான்மைக்கும் ஏற்றதல்ல என்பது நிச்சயமாகத் தெரியும்.

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## குழந்தைகளின் சால், குலைக்கட்டி வியாதிகளுக்கு

### வழக்கமான மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும், சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்வார். அப்பொழுது அவரை நேரில் கலந்து ஆலோசிக்கலாம்.

| இடம் | தேதி | நேரம் |
|---|---|---|
| கரூர் | 1 | 9 to 11 காலை |
| சேலம் | 2 | 9 to 12 பகல் |
| | | 3 to 5 மாலை |
| ஈரோடு | 3 | 9 to 11 காலை |
| திருப்பூர் | 3 | 3 to 5 மாலை |
| கோயமுத்தூர் | 4 | 9 to 12 பகல் |
| | | 3 to 5 மாலை |
| பாலக்காடு | 5 | 8-30 to 12 பகல் |
| பொள்ளாச்சி | 5 | 2-30 to 3-30 மாலை |
| உடுமலைப்பேட்டை | 5 | 4-30 to 5-30 மாலை |
| பழனி | 5 | 6-30 to 7-30 இரவு |
| திண்டுக்கல் | 6 | 9 to 11 காலை |
| மதுரை | 7,8,23 | 9 to 12 பகல் |
| | | 4 to 6 மாலை |
| விருதுநகர் | 9 | 8 to 9 காலை |
| கோவில்பட்டி | 9 | 10-30 to 11-30 காலை |
| தூத்துக்குடி | 9 | 3 to 5 மாலை |
| திருநெல்வேலி ஜங். | 10 | 9 to 12 பகல் |
| | | 3 to 6 மாலை |
| நாகர்கோவில் | 11 | 10 to 12 பகல் |
| ஸ்ரீவைகுண்டம் | 11 | 4 to 5 மாலை |
| அம்பாசமுத்திரம் | 12 | 9 to 12 பகல் |
| தென்காசி | 12 | 3 to 5 மாலை |
| திருவனந்தபுரம் | 13 | 9 to 12 பகல் |
| | | 3 to 6 மாலை |
| ராஜபாளையம் | 14 | 9 to 11 காலை |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 14 | 1 to 3 மாலை |
| காரைக்குடி | 15 | 9 to 12 பகல் |
| | | 3 to 6 மாலை |
| சிவகங்கை | 16 | 8-30 to 9-30 காலை |
| தேவகோட்டை | 16 | 11 to 12 பகல் |
| புதுக்கோட்டை | 16 | 3 to 5 மாலை |
| * ராமனாதபுரம் | 22 | 9 to 11 காலை |

| இடம் | தேதி | நேரம் |
|---|---|---|
| தஞ்சாவூர் | 17 | 9 to 11 காலை |
| | | 3 to 5 மாலை |
| பட்டுக்கோட்டை | 18 | 9 to 11 காலை |
| திருத்துறைப்பூண்டி | 18 | 3 to 5 மாலை |
| மன்னார்குடி | 19 | 9 to 11 காலை |
| திருவாரூர் | 19 | 3 to 5 மாலை |
| நாகப்பட்டினம் | 20 | 9 to 11 காலை |
| நன்னிலம் | 20 | 3 to 5 மாலை |
| மாயவரம் டவுன் | 21 | 9 to 11 காலை |
| | | 3 to 5 மாலை |
| சீர்காழி | 22 | 9 to 11 காலை |
| விருத்தாசலம் | 22 | 3 to 5 மாலை |
| சிதம்பரம் | 23 | 9 to 11 காலை |
| | | 3 to 5 மாலை |
| கடலூர் N. T. | 24 | 9 to 11 காலை |
| | | 3 to 5 மாலை |
| பாண்டிச்சேரி | 25 | 9 to 11 காலை |
| திண்டிவனம் | 25 | 3 to 5 மாலை |
| விழுப்புரம் | 26 | 9 to 11 காலை |
| | | 3 to 5 மாலை |
| காஞ்சீபுரம் | 28 | 9 to 11 காலை |
| | | 3 to 5 மாலை |
| வேலூர் | 29 | 9 to 11 காலை |
| | | 3 to 5 மாலை |
| ஜாம்ஷெட்பூர் | 15 | 9 to 11 காலை |
| | | 4 to 6 மாலை |
| கரக்பூர் | 4 | 9 to 11 காலை |
| | | 3 to 5 மாலை |
| ஜபல்பூர் | 15 | 8 to 12 பகல் |
| | | 3 to 5 மாலை |
| ** ராய்ப்பூர் | 25 | 8 to 12 பகல் |
| | | 3 to 5 மாலை |

* குறிப்பு: திருச்சி கிளைக் காரியாலயத்திலுள்ள எமது டாக்டர் ராமனாதபுரத்திற்கு விஜயம் செய்து ஆலோசனை கூறுவார்.

** குறிப்பு: நாகபுரி கிளைக் காரியாலயத்திலுள்ள எமது டாக்டர் ராய்ப்பூருக்கு விஜயம் செய்து ஆலோசனை கூறுவார்.

ஒவ்வொரு ஊரிலும் வழக்கமான விலாசத்திலேயே டாக்டரை சந்திக்கலாம். மற்ற விவரங்களுக்கு காரியாலயத்துக்கு எழுதவும்.

## ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்

சென்னை - திருச்சிராப்பள்ளி - கும்பகோணம்

[ தொழில் துறையிலும் வர்த்தகத் துறையிலும் பிரபலமடைந்துள்ள திரு எம். ஆர். மஸானி தமது கருத்துக்களை ஆணித்தரமாகச் சொல்லத் தயங்குவதில்லை. ஆழ்ந்த சிந்தனைக்குப் பிறகே தமது அபிப்பிராயங்களைக் கூறுவார். அரசாங்க வர்த்தகத்தைப் பற்றி அவருடைய கருத்துக்கள் தெளிவுடன் அமைந்துள்ளன. —ஆசிரியர் ]

# சர்க்காருக்கு நன்மை; மக்களுக்குத் தீமை

எம். ஆர். மஸானி
(மக்கள் சபை அங்கத்தினர்)

வியாபாரிகள்—மொத்த வியாபாரிகள், சில்லறைக் கடைக்காரர்கள், தரகர்கள் முதலியவர்கள் உள்பட—எல்லோரும் சுரண்டல் வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களால் சமூகத்துக்கு தீமையே தவிர நன்மையில்லை, அவர்கள் நடவடிக்கையினால் சமூக நலம் பெருகுவதில்லை—இவ்வாறெல்லாம் மக்கள் மனத்தில் தவறான எண்ணத்தை அரசியல் வாதிகள் பரப்பி வருகின்றனர். இதிலிருந்து இக்கூட்டத்தினரையே சமூக விரோதிகள் என்று இழிவு படுத்தி ஒதுக்கவும் ஒடுக்கவும் வகை செய்யப்படுகிறது.

## சுரண்டுபவர்கள் அல்ல

இது தவறு. பொருளாதாரத் துறையில் சிறிது கற்றவர்களுக்கும் உணவுப் பண்டங்களையும் இதரப் பொருள்களையும் விநியோகம் செய்வது ஒரு முக்கியமான செயல் நிகழ்ச்சி என்று தெரியும். பண்டங்கள் உற்பத்தி செய்வதெல்லாம் உபயோகிப்பவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகவே என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்கின்றனர். அதேபோலத் தேவைகளைப் பூர்த்தி செய்ய உபயோகிப்பவர்கள் இருக்குமிடங்களுக்கெல்லாம் பொருள்களை எடுத்துச் செல்ல வேண்டுவது மிகவும் அவசியம். இல்லாவிட்டால் உற்பத்தி செய்து பலன் என்ன? இந்த முக்கியமான பணியைத்தான் வியாபாரிகள் செய்கின்றனர். உணவு தான்ய வர்த்தகத்தில் ஈடுபட்டுள்ளவர்களும் செய்கின்றனர். இந்தப் பணியைச் சரிவரச் செய்ய அவர்களுக்கு மிகுந்த திறமை வேண்டும். கடுமையாக வேலை செய்ய வேண்டும்; தானியங்களின் தராதரம் தெரிந்திருக்க வேண்டும்; தேவையின் அளவு என்ன, அதற்கு முதலீடு செய்ய மூலதனம் எவ்வளவு ஆகும், தானியத்தைப் பத்திரமாக வைக்க வசதி, வாய்ப்புகள் வாடிக்கைக்காரர்களுக்குக் கடன் கொடுத்து வசூலிக்கும் சாமர்த்தியம்—இப்படிப் பலவித சாமர்த்தியங்கள் அமையப் பெற்றவர்கள் வியாபாரிகள். சமூகப்பணியில் ஒரு முக்கியமான பாகத்தை அவர்கள் செய்கிறார்கள். இதை அரசாங்கம் உணர வேண்டும்.

விலைவாசிகள் உயர்வுக்குக் காரணம் வியாபாரிகளின் பதுக்கல் நடவடிக்கை என்று அவர்கள் மீது குற்றம் சாட்டப்படுகிறது. இப்படிப்பட்டவர்கள் சிலர் நமது பரந்த பாரதத்தில் இங்கு மங்கும் இருக்கலாம். எந்தத் தொழிலானாலும் மனிதத் தன்மை ஒரே மாதிரியாகவே செயல் படுகிறது. அரசியல் வாதியானாலும் சர்க்கார் உத்தியோகஸ்தரானாலும், தொழிலதிபரானாலும், வியாபாரியானாலும், குறிப்பிட்ட ஒரு சூழ்நிலையில் எல்லோரும் ஏறக்குறைய ஒரேவிதமாகவே நடந்து கொள்ளுகின்றனர். எங்கெல்லாம் பற்றாக்குறை காணப்படுகின்றனவோ பதுக்கலும், கருப்பு மார்க்கெட்டும் லஞ்சமும் அங்கெல்லாம் கூடவே தலை தூக்குகின்றன. தேவைக்கு அதிகமாகப் பொருள்கள் இருக்கும் சூழ்நிலையில் கள்ள மார்க்கெட்டைப் பற்றியாவது பதுக்கல்களைப் பற்றியாவது யாராவது கேள்விப்பட்டதுண்டா? உதாரணமாக இப்போது சிமிட்டியில் கள்ள மார்க்கெட்டு பதுக்கல் இருக்கின்றனவா? பற்றாக்குறை புள்ளபோதுதான் இம்மாதிரி சமூக விரோதமான நடத்தைகள் வெளிவருகின்றன. பற்றாக்குறை நிலைமை வந்து விட்டதற்காக வியாபாரிகளைக் குற்றம் சாட்டுவதா? அதற்கு அவர்களா பொறுப்பாளிகள்? அப்படியென்றால் தொத்து நோய் வருவதற்கு டாக்டர்களையெல்லாம் காரணமாகச் சொல்லலாமே!



திரு எம். ஆர். மஸானி

## சர்க்கார் முதலாளித்துவம்

அடிப்படை உண்மைப் பற்றாக்குறை. இதை மறைப்பதற்காக வேறு யார் மீதாவது பழிசுமத்த வேண்டுமா? உண்மையை ஏன் மறைக்கவேண்டும்? ஏன் பழி சுமக்க வேறொருவரைத் தேடவேண்டும் என்றுகேட்கத்தோன்றுகிறதல்லவா? இதற்கு இரண்டு காரணங்கள்

உண்டு. சர்க்காரின் திறமையற்ற நடவடிக்கைகளில் மக்கள் கவனம் செல்லவொட்டாது தடுப்பது ஒன்று. மக்கள் மனத்தில் தவறான கருத்துக்களைப் புகுத்தி, அவ்வாறு மாறிவிட்ட மனத்தில் "சோஷலிஸ"த்தான் நாட்டுக்கு ஏற்றது என்று சொல்லிக்கொண்டே "சர்க்கார் முதலாளித்"துவத்தை மெல்ல மெல்லப் புகுத்துவது இரண்டாவது. அரசாங்க வர்த்தகம் என்பது சர்க்கார் முதலாளித்துவம்தான். இதைச் சிறிது விளக்கலாம்.

வியாபாரிகள் செய்யும் வேலையை அவர்களைக் காட்டிலும் திறமையாகவும், சிக்கனமாகவும் தங்களால் செய்ய முடியும், அதன் மூலம் சமூகத்துக்கு வியாபாரிகள் புரியும் தொண்டை விட அரசாங்கம் மேலான நன்மை புரியும் என்று உண்மையிலேயே சர்க்கார் எண்ணினால் இந்த வியாபாரத்தில் அவர்கள் பிரவேசிக்கட்டும். தனிப்பட்டவர்களும் சர்க்காரும் ஒருவருக்கொருவர் போட்டியிட்டுக்கொண்டு வியாபாரம் நடத்தட்டும். சில நாட்களுக்குப் பின் யாரால் சமூகத்திற்கு நன்மை அதிகமாகக் கிடைக்கிறதென்பது தெரிந்துவிடும்.

## ஏகபோக உரிமையின் தீமைகள்

ஆனால் அரசாங்கம் அவ்வாறு செய்ய முன் வரவில்லை. பதிலாக ஏகபோக உரிமையுடன் உணவுப் பண்ட வியாபாரத்தைத் தங்கள் கையில் வைத்துக்கொள்ளவே விரும்புகிறது. அரசாங்கத்துக்கு ஏகபோக உரிமை கொடுப்பதால் நிச்சயமாகத் தீமைகள்தான் உண்டாகின்றன.

முதலாவதாக அரசியல் சட்டப்படி மற்ற பொருள்களில் வர்த்தகம் செய்வதைப் போலவே உணவுப் பண்டத்திலும் வர்த்தகம் செய்யும் உரிமை இப்போதுள்ள வர்த்தகர்களுக்கு இருந்தாலும் அரசாங்கத் தலையிட்டால் இந்த உரிமை போய்விடும். சுதந்திரமாக ஜீவனம் செய்துகொண்டிருக்கும் லட்சக்கணக்கான வியாபாரிகள் வேலையின்றித் திண்டாட நேரிடும். அவர்களுக்கெல்லாம் சர்க்கார் காரியாலயங்களில் கடைநிலை ஊழியர்களாக வேனும் வேலை அளிப்பார்களா? போதிய படிப்பில்லாதவர்களென்றோ அல்லது அனுபவமில்லாதவர்களென்றோ அவர்களெல்லாம் கழித்துக் கட்டப்படுவார்கள்.

இரண்டாவதாக விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும் மக்களுக்கு இதனால் கஷ்டங்கள் ஏற்படும். தங்கள் விளைபொருள்களை யார் அதிக விலைக்கு வாங்குகிறார்களோ அவர்களுக்கு விவசாயிகள் சாதாரணமாக விற்று வருகிறார்கள். இதில் சிறிது சுதந்திரம் அவர்களுக்கு உண்டு. அரசாங்கம் தனது அதிகாரத்தோரணையுடன் இதில் தலையிட்டால், விளைபொருள்களை அரசாங்கத்துக்கோ அல்லது அவர்களுடைய உத்தரவு பெற்ற அல்லது லைசென்ஸ் அளிக்கப்பட்ட ஏஜெண்டுகளுக்கோ சர்க்கார் நிர்ணயித்த விலைக்கு விற்றுவிட வேண்டும். வேறு வழியில்லை. சர்க்கார் விலை மிகவும் குறைவாக இருப்பதாகத் தோன்றினால் விவசாயிகள் தானியங்களைக் கொடுக்காமல் தங்களிடமே வைத்துக்

கொள்ளலாம். ஆனால் இப்படி அவர்கள் எவ்வளவு நாள் வைத்திருக்கக் கூடும்? விவசாய வர்க்கத்தினர் எல்லோரும் கூடி அம்மாதிரி தானியங்களை விற்பனைசெய்ய முன்வராவிட்டால் "அத்யாவசியமான பண்டங்கள் சட்டம்" என்ற ஆயுதத்தைச் சர்க்கார் பிரயோகிக்கத் தவறமாட்டார்கள். அவசரச் சட்டம் அமுலாக்கப்பட்டால் வயலில் புகுந்து தானியத்தைக் கொள்முதல் செய்யச் சர்க்காருக்கு அதிகாரம் இருக்கும். இந்த நிலையில் சர்க்கார் நிர்ணயித்த விலைக்கு லாபமானாலும் நஷ்டமானாலும் தாங்கள் உற்பத்தி செய்த தானியங்களை விவசாயிகள் கொடுத்துவிட வேண்டியதுதான்.

மூன்றாவதாக, அரிசியையும் கோதுமையையும் தினசரி வாங்கி உட்கொள்ளும் மக்களுக்காவது நன்மை இருக்குமா என்றால் அதுவும் இல்லை. விவசாயிகளிடமிருந்து தானியங்களை வாங்குவதற்கு எப்படி விலையை அரசாங்கம் நிர்ணயம் செய்து அந்த விலைக்கு விற்கும்படி நிர்ப்பந்தம் செய்ய அதிகாரமிருக்கிறதோ அதேமாதிரி தாங்களும் தங்கள் ஏஜண்டுகளும் விற்க வேண்டிய விலைகளையும் நிர்ணயம் செய்து அந்த விலைக்குத்தான் மக்கள் தானியங்களை வாங்க வேண்டும் என்று நிர்ப்பந்தம் செய்யவும் சர்க்காருக்கு அதிகாரம் இருக்கும். இதற்கும் மேலாக ரேஷன் முறையைக்கூட அவசியமானால் புகுத்த அரசாங்கத்தால் முடியும். இதுதான் ஏகபோக உரிமையின் விளைவு. உற்பத்தியாளர்களாகிய விவசாயிகளுக்கும் உபயோகிப்பவர்களாகிய சாதாரண மக்களுக்கும் முழுநன்மை செய்ய முடியாத இந்தமுறையைக் கண்டிக்க வேண்டும்.



## லாபத்தில் நாட்டம்?

உணவு தானிய வர்த்தகத்தைப் பற்றி அரசாங்கத்தின் கொள்கை இவ்வளவு திட்டமாக எங்கும் சொல்லப்படவில்லையே; இதன் விளைவுகளைப்பற்றி இப்படிப் பீதி விளைவிக்கும் வண்ணம் வர்ணிக்க வேண்டுமா என்று என்மீது சிலர் ஆத்திரம் கொள்ளக்கூடும். ஆனால் நான் போதிய ஆதாரமின்றி எதையும் மிகைப்படச் சொல்லவில்லை. நான் மேலே கூறிய ஆட்சேபங்கள் அனைத்தும் நியாயமானவை என்பதைச் சர்க்காரும் உணர்ந்துதானிருக்கிறார்கள் என்றே நான் எண்ணுகிறேன். அப்படியானால் அவர்கள் ஏன் இதை வற்புறுத்த வேண்டும்? அதற்கும் காரணம் ஊகித்துத் தெரிந்து கொள்ளலாம். திட்டக் கமிஷனின் பொருளாதாரத் துறையில் முக்கிய ஆலோசகர் பேராசிரியர் பி.ஸி. மஹலனோபிஸ் என்பது எல்லோரும் அறிந்ததே. கம்யூனிஸ சீனா, ருஷ்யா முதலிய நாடுகளின் முன்னேற்றத்தைக் கண்டு வியந்து பாராட்டுபவர். இவருடைய கருத்தை ஆதரித்து, திட்டக் கமிஷனின் மற்றொரு அதிகாரி திரு பீதாம்பர் பந்த் என்பவர் அரசாங்க வர்த்தகத்தின் மூலம் மூன்றாவது திட்டகாலத்தில் சுமார் 850 கோடி ரூபாய் சர்க்கார் லாபம் சம்பாதிக்க முடியும் என்று ஒரு மதிப்பீடு செய்திருக்கிறார். இந்த மதிப்பீடுதான் அரசாங்கம் உணவுதான்ய வியாபாரத்தில் நுழைவதற்குக் காரணம். இந்த 850 கோடி ரூபாய் லாபம் சர்க்காருக்கு இவ்வியாபாரத்தின் மூலம் கிடைக்க வேண்டுமானால், யாரிடமிருந்து இந்தப் பெருந்தொகையை வசூல் செய்ய வேண்டியிருக்கும், தெரியுமா? விவசாயிகளிடமிருந்து அல்லது உணவுப் பொருளை வாங்கி உபயோகிக்கும் சாதாரண மக்களிடமிருந்து—அல்லது இவ்விரு வர்க்கத்தினரிடமிருந்துமே பெற வேண்டும். அதாவது ஒருவர்க்கத்தினர்—விவசாயிகள்—தானியத்தைக் குறைந்த விலைக்கு விற்க வேண்டும். மற்றொரு வர்க்கத்தினர்—உபயோகிப்பவர்கள்-அதை அதிக விலைக்கு வாங்க வேண்டும். இதில் யாருக்கு நன்மை?

உபயோகிப்பவர்களுக்கும் விவசாயிகளுக்கும் நன்மை செய்ய வேண்டுமானால் அரசாங்கத்துக்கு நஷ்டம் ஏற்பட வேண்டும். "ஸப்ஸிடி" வழங்குவதன் மூலமோ, அல்லது நஷ்ட ஈடு மூலமோ சர்க்காருக்கு அதிகச் செலவே தவிர லாபம் கிடைக்காது. நஷ்ட ஈடு வழங்க நமது சர்க்காரால் இயலாது. நமது சர்க்கார் நிதி நிலைமை பற்றாக்குறையாக இருக்கிறது. ஆண்டுதோறும் பற்றாக்குறை பட்ஜெட் சமர்ப்பித்து வருகிறது. இப்பற்றாக்குறையை நாசிக் அச்சகத்தின் உதவியால் இட்டு நிரப்பி வருவதால், வாரி வழங்கப் போதிய பணமுமில்லை. அப்படி வழங்கினாலும் பண வீக்கம் மேலிட்டு விலைவாசிகளைப் பாதிக்கும். ஆகவே சாதாரண பாமர மக்களின் நன்மைக்காகவும் விலைவாசிகளை உயர வொட்டாமல் தடுக்கவும் அரசாங்க வர்த்தகம் ஏற்பட்டது என்று சொல்லுவதெல்லாம் அர்த்தமற்றபேச்சாகும்.

## 116. நேயர்கள் கடிதம்




நாளது 31-5-59 கல்கி இதழில் வெளியான கட்டுரையின் இலக்கம் 104. அடுத்த கல்கி இதழ் 7-6-59 ல் வெளியானதில் நாட்டுவைத்தியக் கட்டுரை 105 பிரசுரமாகியுள்ளது. இவ்விதழில் வெளியான கட்டுரையோடு நாட்டு வைத்தியக் கட்டுரைகளுக்கு இரண்டு வருஷங்கள் பூர்த்தியானதாக எடுத்துக் கொள்வதில் யாருக்கும் ஆட்சேபமே இருக்க இடமிராதல்லவா? அன்றையத் தேதி வரையில் நேயர்களின் கடிதங்கள் 2245 ஆகியுள்ளன.

இவர்கள் எல்லோருக்குமே திருப்தியளிக்கும் வகையில் ஆலோசனை கூறியுள்ளேன் என்று சொல்ல முடியாதுதான். ஆயினும் பெரும்பாலருக்குத் தப்பாமல் திருப்தியளித்துள்ளேன் என்பது எனது கருத்து.

ஒரே விஷயத்தைத் திரும்பத் திரும்பச் சொல்ல வேணுமா? என்று ஒரு சிலருக்கு எழுதியுள்ளேன். வேறு சிலருக்கு இந்தப் பதிலே அவரே ஊகித்துக் கொள்ளட்டுமென்று விட்டு விட்டேன். தவிர, "தங்கள் கட்டுரையில்......செய்யலாமென்று எழுதியுள்ளீர்கள். அதையே செய்யலாமா? வேறு ஏதாவது யோசனை சொல்கிறீர்களா?" என்று கேட்டு எழுதியுள்ளவர் சிலர். கட்டுரையில் தெரிவித்துள்ளது நேருக்கு நேர் தமக்கேற்றது என்று தெளிந்த பிறகு வேறு ஆலோசனைக்குக் காத்திருப்பானேன் என்று எண்ண நேரிடுகிறதல்லவா? அவ்விதக் கடிதங்களுக்கும் பதில் எழுதுவதில் "இஷ்கா, இஷ்பா" தான். இப்படிச் சில காரணங்களை யொட்டிச் சிலருக்குப் பதில் எழுதாமல் இருந்ததுண்டு.

பதில் தபாலுக்குத் திரும்புகால் தபால் கூலி அனுப்பாதவர், ஒரு ரிப்ளை கார்டில் அடங்காதவளவு பதில் எழுத வேண்டிய கேள்விகளை அடுக்கிவிட்டு, "இவற்றுக்கு விவரமான பதிலே இத்துடன் இணைத்துள்ள ரிப்ளை கார்டில் எழுதியனுப்பவும்" என்று விரும்பியவர் ஆகியவருக்கும் பதில் எழுதவில்லை. நேயர்கள் மன்னிக்க வேணும்.

இவை தவிர, மற்றையக் கடிதங்களுக்கெல்லாம் பதில் எழுதியுள்ளேன். 7-6-59 க்குப் பிறகு கிடைத்த கடிதங்களும், "சுற்றுப் பயணம்" சென்றிருந்த காலத்தில் வந்து குவிந்த கடிதங்களும் சுமார் முந்நூறுக்கு மேலாகி விட்டன. இவை புதிய வருஷத்தைச் சேர்ந்தவை என்ற காரணத்தால் இவற்றுக்கு III என்ற குறிப்பிட்டுத் தொடர் எண்களைக் கொடுத்துள்ளேன். ஊரில் இல்லாத காரணத்தால் பலருக்குப் பதில் எழுதக் காலந் தாழ்ந்து விட்டது. கூடிய விரைவில் எழுதி விடலாமென்ற நம்பிக்கை.

சுற்றுப் பயண காலத்தில் நேரில் சந்தித்த நூற்றுக்கணக்கான (அதற்கும் அதிகமான) நேயர்களுக்குச் செய்துள்ள தொண்டின் விவரங்களைச் சொல்லப் பல பக்கங்கள் எழுத வேண்டி வரும். அதைத் தற்போதைக்கு எடுத்துக் கொள்ள வேண்டாமென்று விட்டு, சுற்றுப்பயண காலத்தில் அன்பையும் ஆதரவையும் அளித்துதவிய கல்கி நேயர்கள் அனைவருக்கும் எனது நன்றியை மட்டும் இப்போதைக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இனி, நேயர்களின் கடிதங்களில் சிலவற்றைப் பற்றிப் பராமர்சம் செய்வது அவசியம்.

டெல்லி நண்பர் கடிதம் 47|IIIல் எழுதுகிறார். இவருக்கு வயது 27 நடந்து கொண்டிருக்கிறதாம். இன்னும் மணமாகவில்லை. [ஆனால் ஜாதகத்தை அனுப்பித் தரவில்லை. ஆகவே நேயர்கள் அது வேணுமென்று எனக்கு எழுதக் கூடாது] லாகிரி வஸ்துக்கள் உபயோகிப்பவரல்ல. [அட கர்நாடகமே! ஒருகால் குடுமியும் வைத்துக் கொண்டிருப்பாரோ, என்னவோ!] "பல வருஷங்களாகக் காப்பி சாப்பிடாமல் இருந்தவன் சென்ற 5-6 மாதங்களாகக் காப்பி சாப்பிட்டு வருகிறேன்" [பேஷ்! சுக்லாம் பரதரம் விஷ்ணும்......இனி புதுமைகளெல்லாம் ஒவ்வொன்றாகத் தாமாகவே வந்து சேரவும் நேரிடலாம்] "இதற்கும் முடி உதிர்வதற்கும் சம்பந்தமுண்டா?" என்பது நேயரின் முதல் கேள்வி. ஆகவே முடி உதிர்வது பற்றித்தான் நண்பர் படும் முதல் கவலை.

நண்பரே! எனக்குத் தெரிந்த வரையில் காப்பிப் பழக்கத்துக்கும் முடி உதிர்வதற்கும் சம்பந்தமிருக்குமென்று தெரியவில்லை. இது ஓர் ஆராய்ச்சிக்குரிய விஷயம்தான். விஞ்ஞானிகள் இந்தக் கேள்வியை ஏற்று ஆராய்ச்சிகளை நடத்தி,

'காப்பி பழக்கத்தால் முடி உதிரும்' என்று மட்டும் தெரிவித்து விடுவார்களானால் உலகம்—முக்கியமாக இந்தியாவில் பெரும்பாலோர் — அதிலும் நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்த எண்ணிறந்தவர்கள் பொருளாதாரத் துறையில் நலம் பெறுவார்கள்.

நண்பருடைய இரண்டாவது கேள்வி ரஸமானது. இவருக்குக் கண் பார்வையில் குறைபாடு ஏதுமில்லையாம். தூரப் பார்வை கிட்டப் பார்வை யாவும் சரியாகவே உள்ளன. கண்ணாடி அணிய வேண்டிய அவசியமில்லை! [போச்சு! போச்சு! கண்ணாடி அணிய வேண்டிய அவசியமில்லை என்று விட்டு விட்டால் 'பாஷன்' என்னாவது!]

"எனினும்......" என்று தொடங்குகிறார் நண்பர். ("அதுதானே கேட்டேன்!") எனினும், புஸ்தகத்தைப் படிக்கும்போது (3-4- நிமிஷங்கள் கழித்து) எழுத்துக்களின் மேல் 'Over impression' தென்படுகிறது. குட்டிஞலா அல்லது படிக்கும் விதத்தில் ஏதாவது குறை இருப்பதிஞலா? தயவுசெய்து விளக்கவும். அரை மணி ஒரு மணி நேரப் படிப்புக்குப் பின் கண்களும் தளர்ச்சியடைகின்றன. தங்கள் பதிலை...

ரொம்ப சரி. கேள்விகளுக்குப் பதில் நேரில் எழுத வேண்டிய விதம் எழுதி விடுகிறேன்.

படிக்கும்போது எழுத்துக்கள் ஒன்றின் மேல் ஒன்ருகத் தென்படுவதற்கு....

1. தூக்கவேளையில் படிப்பதால் இருக்கலாம்...

2. படுத்துக் கொண்டே படிப்பது - ஒருபுறம் சரிந்து படுத்துப் படிப்பது போன்ற காரணங்களாலும் இருக்கலாம்.

3. பொதுவாகவே கண்ணுக்கு ஒரு வகை அயர்வு ஏற்படவும், கண்ணீர் முட்டவும் நேரிடுமாஞலும் இவ்வித அனுபவம் ஏற்படலாம்.

4. வெளிச்சம் போதாத நிலையில் படிப்பதாலும் ஏற்படலாம்.

ஆஞல், "அரைமணி ஒரு மணி நேரம்" படிக்கும்போதே கண்களுக்குத் "தளர்ச்சி" ஏற்படுவதாக எழுதுகிருரே! அது எதனல்?

தளர்ச்சியல்ல. ஒருவித அயர்வு. தளர்ச்சி என்பது நிரந்தரமாக ஏற்படும். அயர்வு என்பது தாற்காலிகமாக ஏற்படும்; சிறிது ஓய்வுக்குப் பிறகு தீர்ந்து விடும். நண்பருக்கு ஏற்படுவது அயர்வு தானே யொழியத் தளர்ச்சியல்ல.

இவ்வயர்வு ஏற்படக் காரணம் என்ன? அதுவும் இளம் பிராயத்தில்?

கடிதத்தில் வேளெரு பகுதியில் இதற்கு விளக்கம் கிடைக்கிறது. அது என்ன தெரியுமா? நண்பர் ஏதோ அசுவாரஸ்யமாக எழுதியுள்ள விவரம்... "எண்ணெய் தேய்த்துக் கொள்ளும் பழக்கத்தை நிறுத்தி 7-8 வருஷங்களாகின்றன" என்பதுதான் அவ் விவரம்.

பழகிப் போனதை [அது அஹிதமான பழக்கமாஞலும் - உடனடியாக] நிறுத்தக் கூடாது. [நற்பழக்கமாஞல்... சொல்லவும் வேணுமா?] அதிலும் எண்ணெய்க்குளி நம் நாட்டினருக்கு மிகவும் அவசியமானது.

எண்ணெய்க் குளியைத் தினந்தோறும் செய்து வருமாறு வைத்திய நூல்கள் தெரிவிக்கின்றன. எண்ணெய்க் குளியைப்பற்றிக் கட்டுரை 10—14-4-57 கல்கி இதழில் விஸ்தாரமாக எழுதியுள்ளதை இந் நண்பருக்கும்- ஏனைய நேயர்களுக்கும் நினைப்பூட்டுகிறேன். கட்டாயமாக அதை ஒரு முறை நேயர்கள் படித்துப் பார்க்கவும். அங்கு, "தினசரி எண்ணெய்க் குளியிஞல் உடம்பிலுள்ள அலுப்புச் சலிப்புகள் தீர்ந்து, உடலிலுள்ள வலியும் போகும். மூப்பின் லட்சணங்களான நரை திரை முதலியவை இளவயதிலேயே ஏற்படுவது தடுக்கப்படும்; [இதைப் பிரஸ்தாபக் கடிதம் எழுதிய நண்பர் கவனிக்கவும்] பலதரப்பட்ட நரம்பைப் பற்றிய வியாதிகள் அணுகா. கண் தெளிவுபடும். [பிரஸ்தாபக் கடிதம் எழுதிய நண்பர் கவனிக்கவும்] உடல் வன்மையும் சருமத்துக்கு மினுமினுப்பும் உண்டாகும்; சகிப்புத் தன்மை அதிகரிக்கும்; ஆயுள் நீடிக்கும் என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. தலையிலும் உள்ளங் காலிலும் தாராளமாக எண்ணெய் தேய்த்துக் கொள்ள வேண்டும். காதுகளிலும் சில துளிகளை விடுவது அவசியம் என்று பிரத்யேகமாகவும் சாஸ்திரம் சொல்கிறது..."

இதையேதான் நண்பருக்குத் தெரிவிக்கிறேன். 7, 8 வருஷங்களாக விட்டு விட்ட எண்ணெய்க் குளியைச் சிறிது சிறிதாகப் பழக்கத்துக்குக் கொண்டுவர வேண்டியது அவசியம். "வைத்தியனுக்குக் கொடுப்பதை வாணியனுக்குக் கொடு" என்ற பழமொழியையும் நண்பருக்கு நினைவூட்டுகிறேன்.

திரிபலாதி தைலத்தை எண்ணெய்க் குளிக்கும், நீலிப்ருங்காதி தைலத்தைத் தினசரி தடவி முடி சீவிக் கொள்ளவும் உபயோகித்து வருவது நலம்.

திரிபலா சூர்ணத்தில் ½ டீஸ்பூனளவை எடுத்துச் சில துளி தேனும் 1-2 டீஸ்பூன் உருக்கிய நெய்யும் சேர்த்துக் குழைத்து இரவு படுக்கப் போகும் முன் சாப்பிட்டுப் படுப்பது, கண்களுக்கு விசேஷமான பலத்தைக் கொடுக்குமென்று சாஸ்திரம் சொல்லும். இதையே நண்பர் செய்வது தான் முறை.

(தொடரும்)

வேங்கையின் மைந்தன்

அகிலன்

பதினேழாம் அத்தியாயம்

## பெண்ணும் பேழையும்

அந்த மாய மோகினி எங்கே, எப்படி, ஏன் மறைந்து போனாள்?–இளங்கோவின் மனத் தவிப்பு குறையவில்லை; விநாடிக்கு விநாடி அதிகரித்துக் கொண்டிருந்தது.

கூடத்தின் கதவைத் திறந்து கொண்டு அவனும் வந்தியத்தேவரும் உள்ளே நுழைந்தபோது, அதற்குள் மூன்று பெண் மணிகள் இருந்தனர். ஒவ்வொருவராக அந்த மூவரையும் உற்றுப் பார்த்தான் இளங்கோ. அவர்களில் ஒருவர்கூட அந்த மாயமோகினியைப் போல் இல்லை.

"முன்பு இதற்குள் எத்தனை பேர்கள் இருந்தார்கள், தெரியுமா?" என்று கேட்டார் வல்லவரையர்.

"வெளியில் நின்றுகொண்டே அவளைப் பிடித்துத் தள்ளினேன், தாத்தா! நான் உள்ளே நுழைந்து சென்று பார்க்கவில்லையே!" என்று பதறினான் இளங்கோவேள்.

அங்கிருந்த மூவரில் ஒருவர் பட்டமகிஷி என்பது அவருடைய தோற்றத்தால் விளங்கியது. அரசிக்கு உரிய ஆடை அணிகள் அவரை அலங்கரித்திருந்தன. குனிந்த தலைநிமிராமல் சோகமே உருவாகக் கண்ணீர் உதிர்த்துக் கொண்டிருந்தார் அவர். வல்லவரையரையும் இளங்கோவையும் அவர் ஏறிட்டுக் கூடப் பார்க்கவில்லை.

பட்டமகிஷியின் காலடியில் உட்கார்ந்து தலைவிரிகோலமாக அழுது புலம்பிக் கொண்டிருந்தாள் மற்றொரு மாது. மகிஷியைப் போலவே நடுத்தர வயதிருக்கும் அவளுக்கு. அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்குரிய அலங்காரங்கள் ஏதும் அவளிடம் இல்லை. முகத்தைத் தூக்கி வெறுப்புடன் அவள் இளங்கோவை ஒருமுறை பார்த்துவிட்டு உடனே திரும்பிக் கொண்டாள்.

மறுமுறை பார்க்கக் கூடிய முகமாக அது இல்லை. நெற்றியிலும் கன்னங்களிலும் சுருக்கங்கள் கோடிட்டிருந்தன. கண்களுக்குக் கீழே இரு கரு வளையங்கள்; கண்களோ ஒன்றரைக் கண்கள்!

அந்த ஒன்றரைக் கண்களைக் கண்டு திகைப்புற்ற இளங்கோ தன் இரண்டு கண்களையும் மூன்றாவதாக நின்ற பணிப் பெண்ணின் பக்கம் திருப்பினான். பதினைந்து பதினாறு வயதிருக்கும் அவளுக்கு. மிரள மிரள விழித்துக் கொண்டே அவள் நடுநடுங்கினாள்.

அவளிடம் அந்தப் பெண்ணைப் பற்றி விசாரித்துப் பார்த்தான் இளங்கோ. அவன் பேசிய தமிழ் அவளுக்குப் புரியவில்லை. அவன் பேசிய சிங்களம் அவளுக்கு விளங்கவில்லை. வல்லவரையருக்குச் சிங்களம் நன்றாகத் தெரியும். என்றாலும் அவள் பயத்தால் ஏதேதோ உளறிக் கொட்டினாளே தவிர, உண்மை அவளிடமிருந்து வெளிவருவதாயில்லை.

மற்றப் பெண்களிடம் கேட்ப

இலும் பலனில்லை என்ற முடிவுக்கு வந்தார்கள் அவர்கள். நிலவறைப் பாதைகள் எங்காவது தென்படக் கூடுமென்று தேடிப் பார்த்தான் இளங்கோ. தரை, சுவர்கள், மேல்தளம் எங்கெல்லாமோ அவன் கண்ணோட்டம் விட்டான். எங்குமே ரகசியப்பாதை இருப்பதற்கான சுவடு தென்படவில்லை.

“சரி இளங்கோ! அவள் போனால் போகட்டும்; வந்த வேலையைக் கவனி” என்று அவன் காதருகில் மெதுவாய்ச் சொன்னார் வல்லவரையர். பெண்ணைத் தேடிக் களைத்தவன் அடுத்தபடியாக அரசுரிமைப் பொருள்களைத் தேடுவதில் முனைந்தான். அவனும் வல்லவரையருமாகச் சேர்ந்து பிறைகள், மாடங்கள், கூடத்தின் மூலைமுடுக்குகள் முதலிய இடங்களைச் சோதனையிட்டார்கள்.

பட்டமகிஷி உட்கார்ந்திருந்த ஆசனத்துக்கு வலது புறம் ஒரு பெரிய மரப் பேழை இருந்தது. பூட்டிக் கிடந்த அதைத் திறப்பதற்காகப் பணிப்பெண்ணிடம் திறவுகோலைக் கேட்டார் வந்தியத்தேவர். பணிப்பெண் பயந்துகொண்டே பட்டமகிஷியை நோக்கினான். மகிஷியோ கீழே குனிந்து தம் ஆசனத்துக்கு அடியில் கிடந்த திறவுகோலைத் துழாவி எடுக்கப் போனார்.

சீறிக்கொண்டு அரசியின் கரங்களைப் பற்றினான் அவருக்கு அருகில் இருந்த அந்த ஒன்றரைக் கண் மங்கை. பேழையின் சாவியை அரசியின் கையிலிருந்து பற்றிப் பிடுங்கிக் கொள்ளப் பார்த்தாள். அவளை மெல்ல ஒதுக்கித் தள்ளி விட்டுச் சாவியை வல்லவரையரிடம் வீசி எறிந்தார் மகிஷி.

“சுக்கிராச்சாரியின் கதை உங்களுக்கு நினைவிருக்கிறதா, தாத்தா?” என்று கேட்டுச் சிரித்தான் இளங்கோ. “கொடுத்ததைத் தடுக்கப் போனதால் அவருக்கு ஒற்றைக் கண் போய் விட்டதாம். இவளுக்கு ஏற்கனவே ஒன்றரைக் கண். அதாவது பத்திரமாக இருக்க வேண்டாமா?”

வல்லவரையர் பேழையைத் திறந்தார். அரை ஆள் உயரத்துக்கு மேல் இருந்த அதற்குள் ஒரு பக்கம் சிறு அறைகளில் பொன்னாபரணங்கள் பளிச்சிட்டன. விலை உயர்ந்த வண்ண வண்ணப் பட்டாடைகள் மறுபக்கம் குவிந்திருந்தன. அவ்வளவும் பெண்களின் உடைகள்; ஆபரணங்கள்; அணிகள்.

அவற்றைத் தன் கரத்தால் தொடுவதற்குத் தயங்கிய இளங்கோ பரிதாபமாக வல்லவரையரின் முகத்தைப் பார்த்தான். அவரும் கிழவரானாலும் ஆண்பிள்ளையல்லவா? பேழையின் மூடியைத் தாங்கிக் கொள்ளும் பாவனையில் அந்த வேலையிலிருந்து விலகிக் கொண்டு, “உம், ஆகட்டும்; தேடிப் பார்!” என்று இளங்கோவுக்குக் கட்டளையிட்டார்.

ஆபரணங்களை எடுத்து, ‘நீயே வைத்துக்கொள்!’ என்று சொல்வதுபோல் அந்தப் பெண் பிள்ளையின் முன்னால் வீசினான் இளங்கோ. உடைகளைக் கைகளால் தொடாமல் தன் உடைவாளால் ஒவ்வொன்றாக எடுத்து வெளியில் போட்டான். ‘என் விருப்பத்துக்கு மாறான வேலையைச் செய்யச் சொல்கிறீர்களே!’ என்று அவன் விழிகள் வல்லவரையரிடம் கெஞ்சின. அதற்கு அவர் தம் விழிகளாலேயே, ‘என்ன செய்வது? பேழைக்குள் ஒருவேளை மணிமுடி இருந்தாலும் இருக்கலாம் அல்லவா? நன்றாய்த்தேடிப் பார்!’ என்று பதில் அளித்தார்.

ஆடை அணிகளைத் தவிர இன்னும் பெண்களுக்குவேண்டிய பல்வகை அலங்காரப் பொருள்களும் அதற்குள் தென்பட்டன. வாசனைத் திரவியங்கள், மைச் சிமிழ்கள், வண்ணச் சாந்துகள், வாடிய பிறகும் வாசம் உமிழும் மகிழம்பூ மாலைகள் இன்னும் என்னென்னவோ விசித்திரப் பொருள்கள்.

இளங்கோ பாதிப் பொருள்களை வெளியேற்றுவதற்குள் சலிப்படைந்து விட்டான். “நீங்கள் தேடிப் பாருங்கள், தாத்தா! நான் சிறிது நேரம் பேழையின் மூடியைப் பிடித்துக் கொள்கிறேன்!” என்று கூறிவிட்டு மூடியைப் பற்றிக் கொண்டான்.

வல்லவரையர் பெட்டிக்குள்ளே குனியப் போகும் சமயத்தில் திடீரென்று ஒரு பெண் புலி உறுமத் தொடங்கியது. அந்த ஒன்றரைக் கண் மங்கை, இன்னும் தன் முகத்தைக் கோரமாக வைத்துக் கொண்டு கீச்சுக் குரலில் கத்தினாள்.



“நீங்கள் தேடுகிற, பெண்ணை நாங்கள் ஒன்றும் பேழைக்குள்

போட்டு மூடி வைக்கவில்லை. வேறு ஏதாவது வேலை இருந்தால் போய்ப் பாருங்கள்!''

"இதுதான் எங்கள் வேலை'' என்றான் இளங்கோ.

"வெட்கமாக இல்லை உங்களுக்கு? இது தானா வீரர்களின் லட்சணம்? பெண் பிள்ளைகள் இருக்குமிடம் தேடிப் பகற் கொள்ளையிடவா வந்திருக்கிறீர்கள்? இருங்கள்; உங்கள் சக்கரவர்த்தியிடம் சென்று முறையிட்டு உங்களைத் தண்டிக்கச் சொல்கிறேன்!''

இளங்கோ இப்போது நன்றாக அவள் முகத்தை ஊடுருவி நோக்கினான். அவள் குரலைத் தெளிவாக உற்றுக் கேட்டான். வியப்பால் அவன் முகம் மலர்ந்தது.

அவளுடைய விகாரமான முகத்துக்குப் பின்னால் மறைந்து கொண்டிருந்த சந்திரவதனம் இப்போது தன் குளுமை நிறைந்த கிரணங்களைச் சிறிது சிறிதாக வீசத் தொடங்கியது. அவளுடைய கீச்சுக் குரலுக்குப் பின்னால் ஒளிந்து கொண்டு ஒரு பூங்குயில் இன்னிசைப் பண்ணொலித்தது. அவளுடைய ஒன்றரைக் கண்கள்—கண்களா அவை!

இளங்கோ வல்லவரையரிடம் தன் கண்களால் எதையோ மிகவும் ரகசியமாய்த் தெரிவித்தான். கிழவரின் கண்களும் அவன் கூற்றைப் புரிந்து கொண்டவைபோல் சுருங்கிச் சிரித்தன.

இதற்குள் அவள் சூறாவளியெனச் சீறிக் கொண்டெழுந்து விட்டாள். நெருப்புத் துண்டுகள்போல் சுடு சொற்கள் காற்றில் பறந்து வந்தன. "இங்கிருந்து உடனே போய் விடுங்கள்! இதெல்லாம் அக்கிரமம், அநியாயம், அதர்மம்! போகிறீர்களா, இல்லையா?—போங்கள்; போய் விடுங்கள்!''

அவளுடைய பேய்க் கூச்சலைக் கேட்டு வந்தியத்தேவரே கதிகலங்கி விட்டார். நிலைமை விபரீதமாகப் போய் விடும் என்று அஞ்சி, "வா, இப்போது போய் விட்டு, மறுபடியும் திரும்பி வருவோம்'' என்று இளங்கோவை அழைத்தார்.

"இவளுக்குப் பயந்து கொண்டா வரச் சொல்கிறீர்கள்? முடியவே முடியாது! இருங்கள்; நொடிப் பொழுதில்



நானே பேழை முழுவதையும் தேடிப் பார்த்துவிட்டு வந்து விடுகிறேன்."

இளங்கோ பேழையின் பக்கமாகத் திரும்புவதற்குள், ஏற்கனவே வெளியில் எடுத்துப் போடப்பட்ட ஆபரணங்கள் மீண்டும் அதற்குள் வந்து விழுந்தன. தொடர்ந்தாற்போல் துணிமணிகளையும் எடுத்து வீச முற்பட்டாள் அவள். இளங்கோவின்மீது முதலில் அணிகளும், பிறகு ஆடைகளும் வந்து விழத் தொடங்கின.

தோல்வியை ஒப்புக் கொள்வதைத் தவிர இளங்கோவுக்கு வேறு வழியில்லை. வல்லவரையர் அவன் தோளைப் பற்றி வெளியே அழைத்துக் கொண்டு வந்தார். அவனை நிதானமாக நடந்து கொள்ளும் படி வற்புறுத்தினார்.

"தாத்தா! அந்தப் பேழைக்குள்தான் மணிமுடி இருக்கிறது. அது வேறெங்கும் போகவில்லை. அவள் துடிக்கும் துடிப்பைப் பார்க்கும்போதே தெரியவில்லையா?"

வல்லவரையர் சிரித்தார். "மணிமுடி இருக்கிறதோ இல்லையோ, நீ தேடி வந்த பெண் இங்கேதான் இருக்கிறாள். மிகவும் பொல்லாதவள்தான்!"

"அதே பெண்தான் இவள் என்பதை முதலில் நம்பவேமுடியவில்லை, தாத்தா!"

"இதோ பார், இப்போதைக்கு நீ அவளைத் தெரிந்து கொண்டதாகக் காட்டிக்கொள்ள வேண்டாம். அந்தப்பேழையில் ஏதாவது இருந்தாலும் அதை நாம் மெதுவாய்க் கைப்பற்றிக் கொள்ளலாம். அதுவரை சிறிது பொறுமையாக இரு."

அரண்மனைக்கு மறு புறத்திலிருந்த பெரிய மாளிகையில் சக்கரவர்த்தி வந்து இறங்கியிருப்பதாக அவர்களுக்குச் செய்தி வந்தது. இளங்கோவை அங்கேயே நிறுத்தி வைத்து விட்டு மாளிகைக்கு விரைந்தார் வந்தியத்தேவர். ஒரு நாழிகைப் பொழுதை அவரும் மாமன்னரும் அந்தரங்க ஆலோசனைகளில் கழித்தனர். பிறகு மாளிகையை விட்டு வெளியில் வந்தார் வல்லவரையர்.

அன்றைக்கு அமாவாசை. பொழுது கவிந்து எங்கும் இருள் படர்ந்து கொண்டிருந்தது. சுவர்களிலும் தூண்களிலும் இணைக்கப்பட்டிருந்த தீவர்த்திகளை ரோகணத்து வீரர்கள் ஏற்கனவே அகற்றி விட்டிருந்தனர். புதிய பந்தங்களைப் பொருத்தி இருளை விரட்டச் செய்து விட்டு, காவலர்களை விழிப்புடன் இருக்கச் செய்தார்.

"அரண்மனை, பெரிய மாளிகை, கோட்டை மதில்கள் இவற்றில் பலமான காவல் போடுங்கள்; இப்போது அந்தப் புரத்தில் காவல் காத்து நிற்பவர்களையும் உங்களிடம் அனுப்புகிறேன்" என்று காவலர் தலைவரிடம் கூறிவிட்டு, இளங்கோவிடம் வந்தார் வல்லவரையர்.

அவருடைய கட்டளை இளங்கோவுக்கு வியப்பூட்டியது. 'எதற்காக அந்தப்புரத்துக் கட்டுக் காவலைக் கலைத்து அனுப்பி விடுகிறார் இவர்?'

"அரண்மனைப் பெண்களை அச்சுறுத்தும் வகையில் திரும்பிய பக்கமெல்லாம் வீரர்களை நிறுத்த வேண்டாமென்று மாமன்னர் கருதுகிறார்" என்றார் வந்தியத்தேவர். "நீயும் நானும் தான் மிகவும் விழிப்போடிருக்க வேண்டும். பட்டமகிஷியை இங்கு விட்டுச் சென்றிருப்பதால், வெளியில் இருப்பவர்கள் எப்படியாவது அவருடன் தொடர்பு வைத்துக் கொள்ள முயல்வார்கள். மன்னர் மகிந்தனோ, அமைச்சர் கீர்த்தியோ இப்போது அமைதியுடன் இருக்க மாட்டார்கள். அவர்கள் அனுப்பும் ஒற்றர்களை எதிர்பார்த்து நாம் எதற்கும் சித்தமாக இருக்க வேண்டும்."

"இந்தப் பெண்களையும் அவர்கள் பின்னோடு அழைத்துக் கொண்டு போயிருந்தால் நமக்குத் தொல்லைகள் குறைந்திருக்கும் அல்லவா?" என்றான் இளங்கோ.

"தொல்லை கொடுப்பதற்குத்தானே இந்த வழியைக் கடைப்பிடித்திருக்கிறார்கள்!—ரோகணத்து மக்களுக்கு நம்மீது வெறுப்பை வளரச் செய்வதற்கென்றே இப்படிச் செய்திருக்கிறார்கள். பட்டமகிஷியை நாம் கொடுமைப்படுத்துகிறோம் என்ற வதந்தியை வெளியே பரப்ப வேண்டாமா? நமக்கு எதிராக உணர்ச்சியைக் கிளறி விடுவதற்கு அவர்களுக்குக் காரணம் வேண்டாமா?"

"அமைச்சர் கீர்த்தி பெரிய ராஜதந்திரிதான்" என்றான் இளங்கோ.

"யார் கண்டார்கள்? உன் கண்ணெதிரே மன்னர் மகிந்தனின் மகனைக் கடத்திக் கொண்டு சென்றவர் அவராகவே இருக்கலாம்."

"என்ன?"

இளங்கோவின் திகைப்பு நீங்குவதற்குள், மற்றொரு வியப்புத் தரும் செய்தியை வெளியிட்டார் அவர். "இளங்கோ! உன்னிடமிருந்து தப்பி ஓடியவன் மகிந்தனின் மகன் காசிபன்; அவனைக் கடத்திச் சென்றவர் கீர்த்தி; அவன் தப்புவதற்கு உடந்தையாக இருந்தவள் மன்னரின் மகள் ரோகிணி!"

"தாத்தா!"

"வியப்படையாதே; நீ சாதாரணப் பெண்ணிடம் ஏமாறவில்லை; இளவரசியிடம்தான் ஏமாந்திருக்கிறாய்!"

வல்லவரையர் அருகில் இல்லாதிருந்திருந்தால் மின்னலைப் போல் கூடத்துக்குள் நுழைந்து, அவளை வெளியே

செப்டம்பர் வெளியீடு



நீலாவின்

# யானை வளர்த்த வானம்பாடி

வனப்படம்





ஸ்ரீராம் • M.N.நம்பியார் • D.பாலசுப்ரமணியம்..
பிரண்ட் ராமசாமி • S.P.பிள்ளை • M.S.கருப்பையா
திக்குறிச்சி • பகதூர் • மிஸ் குமாரி • S.D.சுப்புலக்ஷ்மி
K.V.சாந்தி • C.K.சரஸ்வதி மற்றும் பலர்...

பேட்ஸோ (ஆங்கிலப் படத்து நட்சத்திரம்)வும் பீமா என்ற யானையும் இன்னும் பல காட்டு மிருகங்களும் நடிக்கின்றன

கதை நீலா • வசனம் சோமசுந்தரம்
நடனம் தங்கப்பன் • சங்கீதம் பிரதர் லக்ஷ்மணன்
டைரக்ஷன் சுப்ரமணியம் • ஸ்டுடியோ மெர்ரிலாண்ட்



விவரங்களுக்கு:
மெஸர்ஸ் ஸிட்டி தியேட்டர்ஸ் (பிரைவேட்) லிமிட்டெட்
தபால் பெட்டி 51. திருவனந்தபுரம்-1

## நான்கு மருந்துகள் சேர்ந்துள்ள

# 'அனஸின்'

## தலைவலி, ஜலதோஷம், ஜுரம் மற்றும் தசைவலிகளுக்கு

## *சிறந்தது*

ஞாபகத்தில் வையுங்கள்! ஒரே மருந்து கலந்துள்ள எந்த வலி நிவாரண மருந்தும், டாக்டரின் குறிப்பிற்கு ஒப்பான, விஞ்ஞான முறையில் தயாரித்துள்ள நான்கு மருந்துகளின் கலவையான 'அனஸினைப்' போல் துரிதமாயும் . . . அபாயமின்றியும் நிச்சயமாயும் குணமளிக்க இயலாது. லட்சோப லட்சம் ஜனங்கள் 'அனஸின்' தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைவலிகளிலிருந்து, துரிதமாயும், பூரண நிவாரணமளிப்பதிலும் சிறந்தது என்பதை அறிவார்கள். எப்பொழுதும் வீட்டில் 'அனஸின்' வைத்திருங்கள்.






GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD. REGISTERED USER.

K. 68 (R) TAM.

---

பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தீசஞ்சீவி

குழந்தைகளின் ஈரல். குலைக் கட்டிகளுக்கு.

எங்கள் மாதாந்திர சுற்றுப் பிரயாணம் வழக்கம்போல் நடைபெறுகிறது. தங்கும் இடம், நேரம் வழக்கம்போல். ஆயுர்வேத முறைப்படி எல்லா வியாதிகளுக்கும் சிகிச்சை அளிக்கப்படும். விவரங்களுக்கு எமக்கு எழுதவும்:

**எங்கள் ஸ்பெஷல் மருந்துகள்**

1. குமாரசஞ்சீவி - வாயு பவுடர். குழந்தைகளுக்குக் கட்டி வராமல் தடுக்கக் கூடியது.
2. குக்குட சஞ்சீவி - கக்குவான் இருமல் மருந்து.
3. மயூர சஞ்சீவி - மாந்த எண்ணெ.
4. நாக சஞ்சீவி - பிரளி வாயு எண்ணெ.
5. கண்டசக்தி ரஸாயனம் - தொண்டை சதை வளர்ச்சியை ஆபரேஷனில்லாமல் குணப்படுத்தக் கூடியது.

## ஸ்ரீ சக்தி விலாஸ வைத்யசாலை, கரூர்

கிளை ஆபீஸ்கள்

1. கணேஷ் பில்டிங்ஸ், 2/2, லிங்க் ரோடு, மல்லேஸ்வரம், பெங்களூர் - 3
2. 94, டவுன் ஹைஸ்கூல் ரோடு, கும்பகோணம் (தஞ்சை ஜில்லா)

இழுத்து வந்து, அவள் வேஷத்தைக் கலைந்திருப்பான் இளங்கோ. கெண்டை மீன்களெனத் துள்ளிப் பாயும் விழி வேல்களை அவள் எதற்காக ஒன்றரைக் கண்களாக மாற்றிக் கொள்ள வேண்டும்? ஏன் இப்படியெல்லாம் அவள் தன்னைத்தானே அவலட்சணப்படுத்திக் கொண்டிருக்கிறாள்? முன்பே தெரியாமல் போய் விட்டதே! இளவரசி ரோகிணியா அவள்!

இதற்குப் பிறகு இளங்கோ அடித்து வைத்த கருங்கற்சிலையாக மாறிவிட்டான். அவனுடைய நினைவு எங்கேயோ பறந்து கொண்டிருந்தது. வல்லவரையர் இளைஞனின் மன நிலையைக் கண்களால் அளந்துவிட்டுப் புன்னகை பூத்தார்.

"என்ன இளங்கோ, இது! நீ எந்த உலகத்தில் இருக்கிறாய்?"

"ஒன்றுமில்லை, தாத்தா!"

"'ஒன்றுமில்லை' என்ற சொல்லில் தான் எல்லாம் இருக்கிறது! உன் வயதுப் பிள்ளைகள் 'ஒன்றுமில்லை' என்று சொல்வது ஆபத்தின் ஆரம்பமாயிற்றே, தெரியுமா?"

ஓரக்கண்களால் கிழவர் இளைஞனை நோக்க, இளைஞன் அந்தக் கண்களின் பரிகாசத்தைத் தாங்க முடியாமல் தன் தலையைக் கவிழ்த்துக் கொண்டான்.

## பதினெட்டாம் அத்தியாயம்

# தீனக் குரல்

அந்தப்புரத்துப் பெண்களுக்காக அனுப்பப் பெற்ற உணவைப் பட்ட மகிஷியும் பணிப்பெண்ணும் முதலில் உண்ண மறுத்து விட்டார்கள். அவர்களைக் கட்டாயப்படுத்தி உண்ணச் சொல்லிவிட்டுத் தானும் தாராளமாக அதில் பங்கெடுத்துக் கொண்டான் அந்த ஒன்றரைக் கண் அழகி.

வந்தியத்தேவர் பட்டமகிஷியிடம் சென்று ஆறுதல் கூறி அச்சத்தை விலக்க முயன்றார். "எப்போதும்போல் தாங்கள் அந்தப்புரத்துக்குள் நடமாடலாம். தங்களுடைய ஏவலுக்கு ஆட்கள் வேண்டுமானால் தடையின்றிக் கேளுங்கள்; அந்தப்புரத்தைச் சுற்றியிருந்த காவலை இப்போது அறவே அகற்றி விட்டோம்; தங்களுக்கு ஒரு குறைவும் வராமல் பார்த்துக் கொள்ளுகிறோம்" என்றார்.

பட்டமகிஷி மறுமொழி ஒன்றும் கூறவில்லை. 'காவலை அறவே அகற்றி விட்டோம்' என்ற வல்லவரையரின் வார்த்தைகளை மாறுவேடத்திலிருந்த பெண்மணி உற்றுக் கேட்டுக் கொண்டாள். அவளுடைய சிரத்தையை வல்லவரையரும் புரிந்து கொண்டார்.

உரத்த குரலில் வீரர்களுக்கு உத்தரவுகள் பிறந்தன. "அந்தப்புரத்தை என்னிடம் விட்டுவிட்டு, அரண்மனையின் பிரதான வாயில்களுக்குச் செல்லுங்கள்" என்று காவலர்களுக்குக் கட்டளையிட்டு, "இளங்கோ! நீயும் அரண்மனைக்குப் போய் விடு!" என்று கண்களால் ஏதோ சமிக்ஞை செய்தார் வந்தியத்தேவர். "உறக்கம் என் கண்களைச் சுற்றுகிறது. பேசாமல் சிறிது நேரம் அயர்ந்து படுக்க வேண்டும்; இங்கே கூட்டம் போடாதீர்கள்!" என்றார்.

கூடத்துக்கு வெளியே தாழ்வாரத்தில் வல்லவரையருக்குப் படுக்கை சித்தமாகியது. இளங்கோ இன்னும் அவ்விடத்தை விட்டுப் போகாமல் நிற்கவே, போய்விடும்படி மீண்டும் அவனுக்குச் செய்கை செய்தார்.

அவன் அவரிடம் நெருங்கி வந்து, "தாத்தா! அந்தப் பெண்ணிடம் ஏமாந்து விடாதீர்கள்; பெரிய மாயக்காரி அவள்!" என்றான்.

"எனக்கோ வயதாகிவிட்டது; பெண்களிடம் ஏமாறுகிற பருவம் எனக்கில்லை. இரண்டு பெண்களிடம் ஏமாந்து, அவர்களிடமிருந்து தப்புவதற்காகத்தான் இங்கு வந்திருக்கிறேன். விழிப்போடு இருக்க வேண்டியவன் நீதான்; வாலிபப் பருவம் வகை தெரியாத பருவம்; கவனமாக இருந்து கொள்!"

அவரிடமிருந்து நழுவி, அரண்மனைக்குச் செல்லும் திசையில் வேகமாக நடைபோட்டான் இளங்கோ. கிழவர் தம்முடைய தேகத்தின் இரும்புச் சதைகளைச் சற்றே தளர்த்திவிட்டுப் படுக்கையில் சாய்ந்தார். இளைஞன் நடப்பதையும் கிழவர் படுப்பதையும் இரண்டு விழிகள் கூடத்தின் சாளரத்தின் வழியே கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்தன.

நாழிகை சென்றது. நகரத்துக்கு வெளியே இரத்தப் போர்வை போர்த்துக் கொண்டு உறங்கிய போர்க்களத்தின் பக்கத்திலிருந்து நானாவித ஒலிகள் எழுந்தன. ஆந்தைகளின் அலறல், கோட்டான்களின் கூவல், குள்ளநரிகளின் ஊளை இப்படிப் பலவித சத்தங்களின் பயங்கரக் கூட்டுக் களியாட்டம் அங்கே நடந்து கொண்டிருந்தது.

பிணம்தின்னும் மலைக்கழுகுகள் தங்கள் பொல்லாச் சிறகுகளை விரித்துப் பறந்து அடிக்கடி ஆனந்த ஆரவாரம் செய்து கொண்டிருந்தன.

இந்த ஒலிகளுடன் வல்லவரையர் உறக்கத்தில் எழுப்பிய குறட்டை ஒலியும் சேர்ந்து கொண்டது. அந்த ஒலியையே தமக்குத் தாலாட்டாக வைத்துக் கொண்டு, அந்த வயது சென்ற குழந்தை ஆழ்ந்த நித்திரையை அரவணைக்கப் பார்க்கிறதா?

கூடத்துக்குள் இருந்த பெண்களுக்கு ஏற்கனவே உறக்கம் வந்தபாடில்லை. அவர்களை நெருங்கி வந்த நித்திராதேவியையும் விரட்டியடித்துக் கொண்டிருந்தார் வந்தியத்தேவர். கூடத்துக்குள் சிறிது நேரம் பெண்கள் கசமுசவென்று பேசிக் கொள்ளும் சத்தம் கேட்டது; பிறகு நின்று விட்டது.

மெல்ல அடிமேல் அடிவைத்து வெளியில் வந்தது ஒரு பெண்ணுருவம். கண்ணுக்கெட்டிய தூரம் வரை நாலாபக்கமும் திரும்பிப் பார்த்தது. தீவர்த்திகள் அங்கொன்றும் இங்கொன்றுமாக ஒளி சிந்திக் கொண்டிருந்தன. வெகு தூரத்தில் அரண்மனைக்கு அப்பால் காவலர்கள் குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண்டிருந்தார்கள்.

'அந்தப்புரத்துக்குக் காவல் இல்லை என்பது மெய்தான்' என்று எண்ணிக் கொண்டாள் அவள். 'காவல் காப்பதாகப் பெயர் செய்து விட்டு, குறட்டை விட்டுக் கொண்டு விழுந்து கிடக்கிறது இந்தக் கட்டை! குறட்டையொலி இல்லாவிட்டால் இதற்கு உயிர் இருப்பதாகவே சொல்ல முடியாது.'

வான்வெளி யெங்கும் நட்சத்திரப் பூக்கள் மலர்ந்து சிரித்தன. நிலவிழந்தாலும் வானம் ஒரு புதுப் பொலிவுடன் விளங்கியது.

திரும்பவும் கூடத்துக்குள் நுழைந்து, தலையை முக்காடிட்டு மறைத்துக் கொண்டு, இரண்டு கைகளாலும் எதையோ தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு வெளியில் வந்தது அந்த உருவம். சத்தம் செய்யாமல் கதவைச் சாத்தியது. வந்தியத்தேவரைத் திரும்பிப் பார்த்து விட்டு, அடிமேல் அடி வைத்து, தாழ்வாரத்தை ஒட்டியிருந்த முற்றத்தில் இறங்கி நடந்தது.

வந்தியத்தேவரின் விழிகள் திறந்தன. அவருடைய கடைவாயில் ஒரு புன்னகை நெளிந்து மறைந்தது. குறட்டை விட்டுக் கொண்டே எழுந்து சென்று கூடத்தின் கதவைத் தாழிட்டார். தூணின் மறைவில் நின்று தம் பார்வையை அந்தப் பாவையின் பின்னால் செல்ல விட்டார்.

அந்தப்புரத்தின் கூடத்தை அடுத்து விசாலமானமுற்றமும், அதற்கு அப்பால் மேல் மாடமுள்ள மற்றொரு கூடமும் இருந்தன. எதிர்ப்புறத்துக் கூடத்துக்குச் செல்லாமல் அவள் முற்றத்தைக் கடந்து, வடக்கு வாயிலை நோக்கி நடந்தாள். வல்லவரையரின் உருவமும் இருளோடு இருளாக அவளைப் பின்பற்றிச் செல்லத் தொடங்கியது.

வடக்கு வாயில் கதவுகள் இருபுறமும் தாழிட்டுப் பூட்டப்பட்டிருந்தன. வாயிற் படிகளின் ஓரங்களில் பக்கத்துக்கொன்றாக நின்று கொண்டிருந்த கல்யானைகளை ஒரு கணம் உற்று நோக்கினாள் அவள். இடது பக்கத்து யானையின் அருகில் சென்று அதன்மேல் தான் சுமந்து வந்த சதுரமான பேழையை வைத்தாள். பிறகு யானையின் தந்தங்களை ஒவ்வொன்றாகக் கழற்றி எடுக்கலானாள்!

யானை தன் துதிக்கையை மேலே வளைத்துத் தூக்கிக் கொண்டிருந்தது. தந்தங்களை எடுத்தபிறகு, தகடு போன்ற ஒரு கருங்கல் மூடியை யானையின் கழுத்துப்புறத்திலிருந்து மெல்ல அகற்றினாள். குடவரைக் கோயிலைப் போன்று யானையின் வயிற்றுக்குள்ளே வெற்றிடம் இருந்தது. முதுகின் மேலிருந்த பேழையை யானையின் அடி வயிற்றுக்குள் பத்திரமாக வைத்தாள். மீண்டும் தந்தங்கள் பொருத்தப்பட்டன.

திரும்பி வந்து விடுவாள் என்று எதிர் பார்த்தார் வல்லவரையர். ஆனால் வடக்கு வாயில் கதவுகளின் அருகில் சென்று அவற்றைத் தடவிப் பார்த்தாள். இடது பக்கத்துப் பெரிய கதவுக்குள், ஓர் ஆள் புகுந்து செல்லக்கூடிய சிறிய கதவு ஒன்றிருந்தது. அந்தக் கதவும் பூட்டியிருக்கவே, படிகளில் இறங்கி மதிலின் ஓரமாகவே நடக்கலானாள்.

இப்போது கல் யானை வல்லவரையருக்கு மறைவிடம் கொடுத்தது. மதிலின் ஓரமாக அவள் எங்கு போகிறாள் என்பதைக் கவனித்தார்.

கீழே கருங்கல்லாலும், மேலே செங்கல் கதையாலும் ஆன புதிய மதில் சுவர் அது. கரடுமுரடாக இருந்த கருங்கல்



பகுதியைத் தொட்டுத் தொட்டுப் பார்த்துக் கொண்டே நடந்தாள் அவள். சிறிது தூரம் சென்றவுடன் அடையாளம் கண்டு கொண்டவளைப் போல் சட்டென்று நின்றாள். நன்றாகச் சோதனை செய்து, நிச்சயம் செய்து கொண்டவளைப் போல் அங்கு மண்டியிட்டு உட்கார்ந்தாள்.

முழங்கால் உயரத்தில் சுவரில் பதிக்கப் பட்டிருந்த நீண்ட கருங்கல்லை அவளுடைய கரங்கள் அசைக்கத் தொடங்கின! வல்லவரையருக்குச் சிரிப்பு வந்தது. 'பெண்ணுக்கு ஆத்திரம் வந்து விட்டால் இப்படிக்கூடச் செய்வாளா? இவளுடைய வலிமையென்ன? மதில் சுவரில் பதிந்திருக்கும் கல்லின் கனமென்ன?— கண்டெலி மலையைச் சுரண்டி அசைத்து விடவும் பார்க்கிறதே!'

அவள் ஆத்திரத்தோடு எதையும் செய்யவில்லை; அறிவின் துணைகொண்டு தான் மதிலோடு போராடினாள். அவளுடைய அறிவுக்குப் பணிந்து கொடுத்துக் கொண்டிருந்தது அந்த மதில். எந்தக் கல்லை அவள் பற்றிக்கொண்டு அசைத்தாளோ, அது அசைந்து கொடுப்பதை வல்லவரையரே தம்முடைய கண்களால் கண்டார்.

சிறிது நேரம் அதனுடன் போராடிய பிறகு, மெல்ல மெல்ல அதை வெளியே இழுத்து, சத்தம் செய்யாதபடி அதைச் சரிவாகக் கீழே இறக்கினாள். நீண்ட சதுரமான முழுக்கல் இல்லை அது; கல்லைப் போல் தோற்றமளித்த ஒரு தகடு. கல்லால் செய்யப்பட்டதோ, அல்லது மரத்தால்செய்யப்பட்டுச் சாயம் பூசப் பெற்றதோ!

இனியும் பொறுத்துக் கொண்டிருப்பதில் பயனில்லை என்று தோன்றியது அவருக்கு. இதற்குள் மேல்மாடக் கூடத்தில் ஏதோ ஓசை கேட்கவே, அந்தப் பக்கம் அவருடைய கவனம் திரும்பியது. ஒரு கணம் யோசனை செய்தார் வல்லவரையர். இவளைக் கண்காணிப்பதா? அல்லது மேல்மாடத்துக்குச் சென்று பார்ப்பதா?

என்ன சத்தம் அது?

மேல் மாடத்துக்கு ஏறி வருவதற்குள் அங்கே எழுந்த ஒலி முற்றிலும் அடங்கி விட்டது. எந்தத் திசையில் திரும்பித் தேடுவதென்று அவருக்கு விளங்கவில்லை. மாடத்துச் சாரளத்தின் வழியாக மதில் சுவரை எட்டிப் பார்த்தார். பெண்ணின் உடல் மட்டும் வெளியே தெரிந்தது; தலை மதிலுக்குள் போய்விட்டது!

சிறிது சிறிதாக அவளுடைய உடலும் மறையவே, வல்லவரையரின் கைகால்கள் பதறத் தொடங்கின. பெரிய பெரிய போர்க்களங்களையும், அவற்றில் வீர சாகசம் புரிந்தவர்களின் பேராற்றல்களையும் நேரில் கண்டவர் வல்லவரையர். அவற்றையெல்லாம் விட இந்தப் பெண் மணியின் விசித்திரமான துணிவு அவருக்கு வியப்பைத் தந்தது.

நொடிப் பொழுதில் அவர் அவளைத் தடுத்து நிறுத்தியிருக்கலாம். ஓங்கி ஒரு முறை கையைத் தட்டினால், ஒன்பது வீரர்கள் சிட்டெனப் பறந்து வந்து கூடியிருப்பார்கள். அவர் எழுப்பும் குரலுக்கே அவளை மயக்கி வீழ்த்திவிடும் சக்தி உண்டு.

இவற்றில் எதையும் வல்லவரையர் செய்யவில்லை. 'இளங்கோவை மட்டுமாவது அழைத்துக் கொண்டு வந்திருக்கலாம்' என்று ஒரே ஒரு கணம் நினைத்தார். அடுத்த கணத்தில் அந்த நினைவும் மறைந்தது. 'அவனுடைய துடிப்பால் காரியம் கெட்டுப் போய்விட்டால்......?'

இளங்கோவை அவர் அரண்மனைக்கு அனுப்பவில்லை. அரண்மனைக்குச் செல்வதாகப் போக்குக் காட்டி விட்டு அருகிலேயே மறைந்திருந்து கண்காணிக்கச் சொல்லியிருந்தார். காவல் காக்க வேண்டியவன் காதல் கனவு கண்டு கொண்டிருக்கிறான் போலும்! பாவம், சிறு பிள்ளை!

நினைத்துக் கொண்டு நிற்க நேரமில்லை அவருக்கு. இதற்குள் ரோகணத்துப் பெண்ணெலி தான் தேடி வந்த வளைக்குள் நன்றாகப் புகுந்து கொண்டது. கீழே இறங்கிப் போய் மதிலோடு மதிலாக ஒட்டிக் கொண்டு நகர்ந்தார். பிளவுக்கு அருகில் சென்று, மெல்லக் கீழே குனிந்து உள்ளே நோக்கினார்.

முதலில் இருளில் ஒன்றுமே தெரியவில்லை. பிறகு அவள் உருவம் குப்புறப் படுத்தபடியே ஊர்ந்து செல்வது மங்கலாகத் தெரிந்தது. தம்மை அவள் கவனித்துவிடக் கூடாதென்பதற்காகச் சிறிது நேரம் மூச்சைப் பிடித்துக் கொண்டு ஒதுங்கி நின்றார்.

வெளிப்புறத்துப் பாறைத் தகட்டை அவள் அசைக்கும் ஓசை கேட்டது. களைப்பின் மேலீட்டால் சில விநாடிகள் ஓய்வெடுத்துக் கொண்டு மீண்டும் அசைத்



தான். சரசரவென்று அந்தத் தகடு வெளியில் சரியும் சத்தம் எழுந்தது.

இப்போதுகூட அவர் அவளைப் பிடிக்க முயற்சி செய்யவில்லை. இதைப் போல் இன்னும் எத்தனை ரகசியப் பாதைகளை அவள் கடந்து செல்லப் போகிறான்? அந்தப் பாதைகள், அவள் போக விரும்பிய இடம், அதன் காரணம் யாவும் அவருக்குத் தெரிந்தாக வேண்டும்.



இரண்டாவது முறையாக அந்த வழியே உற்றுப் பார்த்த வல்லவரையரின் விழிகள் சுழலத் தொடங்கின! சரிந்து விழுந்த மதில் சுவரின் தகடுகளைப் போல் அவர் இட்டங்கள் மனத்திற்குள் மள மளவென்று சரிந்தன. பெண்ணெளிவி பெரிய எளிதான் போலும்!

பினவுக்கும் அப்பால் மின்னலைப்போல் இரண்டு கால்கள் தோன்றி மறைந்தன. ஆனால் வல்லவரையரின் கண்கள் அவற்றைக் கண்டு விட்டன. 'இவளுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டு யாரோ சுவருக்கு வெளியில் தயாராகக் காத்து நிற்கிறார்களே!'

அவளைப் பின்பற்றி அப்போதே அந்தப் பாதைக்குள் நுழைந்து விடத் துடித்தார் வல்லவரையர். பனை மரத்தில் பாதி இருந்த அவரது உயரமும், அவருடைய உறுதி பெற்ற உடற்கட்டின் சுற்றளவும் அவரைச் சற்றே தயங்க வைத்தன. நுழைந்து விடலாம்; ஆனால் வெளியில் நிற்கும் உருவத்தை எதிர்த்துத் தாக்குவதற்கோ, தற்காப்புடன் அவர்களைப் பிடிப்பதற்கோ ஏற்ற வழியில்லை அது.

மேலும், இந்த நள்ளிருளில் ஓர் இளம் பெண்ணைப் பின்பற்றிச் சென்று பிடிப்பதென்றால், அது அவருடைய பெருமைக்குச் சோதனை தரும் விஷயம்தான். அவள் கூச்சலிடத் தயங்க மாட்டாள்; பழி வாங்குவதற்கு அஞ்ச மாட்டாள். மாபெரும் சோழ சாம்ராஜ்யத்தின் சாமந்தநாயகர், முதுமையின் எல்லை கண்ட பெரியவர், ஒரு சிறுமியின் முன்பு தலை குனிந்து நிற்பதா?

வந்தவழியே திரும்பிச் சென்று, கீழ் வாயிலைத் திறந்து கொண்டு, சந்தடியில்லாமல் வெளிப்புறத்துக்கு வந்தார் வந்தியத்தேவர்.

அங்கே நிற்பது ஓர் ஆண் உருவம் என்றுமட்டிலும் தெரிந்தது. அமாவாசை இருளில் வேறொன்றும் சரியாகத் தெரியவில்லை. வலது கரத்தால் உடைவாளை இறுகப் பற்றிக் கொண்டே, சுவரோடு சுவராக ஒட்டிக் கொண்டு நகர்ந்தார்.

மதிலை விட்டு வெளியே வந்த அந்தப் பெண் திடுக்கிட்டு அதே இடத்தில் நின்று விட்டாள். வெளியே நின்ற ஆண் மகனை அவள் எதிர்பார்க்கவில்லை போலும்! அவனை நெருங்கிச் சென்று, அவளுடன் நேருக்கு நேர் நின்று, தன் உடை வாளை மெல்ல உருவினான் அவன். அதைக் கண்டவுடன் வல்லவரையரின் நெஞ்சம் ஒரு கணம் நின்று விட்டுப் பிறகு துடித்தது.

முதலில் தன் உடை வாளால் அவள் முகத்தை மறைத்திருந்த மென்திரையை விலக்கினான் அவன்.

அடுத்தாற் போல் அவனுடைய வாளின் கூர்முனை அந்தப் பெண்ணின் கழுத்தை நோக்கிச் செல்வது போல் வல்லவரையருக்குத் தோன்றியது.

'ஆ!' என்று எழுந்தது அந்தப் பெண் மணியின் ஈனக் குரல். அங்கே மூடியிருந்த கனத்த இருளைக் கிழித்துக் கொண்டு அந்த ஈனக் குரல் வல்லவரையரின் செவிகளை எட்டியது. **(தொடரும்)**




# "விடை கொடு, தாயே!"

**காந்தன்**

**கா**வியத்திலும், ஓவியத்திலும், நாடகத்திலும், சினிமாப் படத்திலும் புரட்சிகரமான கருத்துக்களைச் சேர்த்துக் கலையுலகத்தில் ஒரு புதிய சூழ் நிலையை ஏற்படுத்த வேண்டும் என்னும் ஆர்வம் கலைஞர்களிடையே எத்தனையோ காலமாக இருந்து வருகிறது. அந்த ஆர்வம் காரணமாகத்தான் புதிய கருத்துக்களை ஆதாரமாகக் கொண்ட நாடகங்களுக்கும் சினிமாப் படங்களுக்கும் வரவேற்பு இருந்து வருகிறது.

ஆனால் எத்தகைய புரட்சிகரமான கருத்துக்கள் தேவை என்பதைப் பற்றி நாம் சிறிது சிந்திக்க வேண்டியது மிக மிக இன்றியமையாததாகும்.

வளர்ந்து வரும் மனித சமுதாயம் மேலும் வளர்ந்து செழிக்க உதவும் புரட்சி, உயர விரும்பும் மனித இனத்தை மேலும் உயர்த்த உதவும் புரட்சி, எல்லாவற்றுக்கும் மேலாக மனிதனை மனிதனாக வாழ வைக்கும் புரட்சி-இத்தகைய புரட்சியே இப்பொழுது நம் நாட்டுக்குத் தேவை.

குடியின்கேட்டை விளக்குவதாகச்சொல்லிக் கொண்டு குடிகாரனின் திருவிளையாடல்களையே நாடகம் முழுவதும் காட்டி விட்டு, கடைசிக் காட்சியில் அவன் சீர்திருந்தி நல்வாழ்வு வாழ்வதாகக் காட்டுவது சரியல்ல. அது களைந்தெறியவேண்டிய தீமைக்கு ஆக்கம் அளித்து, நன்மைக்கு நாடறியப் பிரிவுபசாரம் கூறி அனுப்புவதாகவே முடியும்.

கற்பின் பெருமையை விளக்கும் நாடகம் கற்பைக் களவாடும் கயவர்களைப் பற்றிக் கலங்கரை விளக்கம் போல் உயர்த்திக் காட்டுவதும், கள்வனொருவன் களவுகள் பல புரிந்தும் போலீஸ் கையில் அகப்படாமல் சாமர்த்தியமாக 'டிமிக்கி' கொடுத்துக் கடைசிக் காட்சியில் தண்டனை அடைவதாகக் காட்டுவதும் சாதாரணமாக நாம் நாடக மேடைகளிலும் சினிமாப் படங்களிலும் வழக்கமாகக் கண்டு வரும் காட்சிகளாகும். கடைசி வரையில் கற்புக்குப் பயங்கர சோதனைகளைத் தொடர்ச்சியாக ஏற்படுத்தி விட்டால், பார்ப்பவர்கள் உணர்ச்சி வசப்படலாம். ஆனால் கற்பென்னும் இன்மை காற்றில் கலந்து விடும். மேற்படி சோதனைகள்தான் நாடகம் பார்ப்பவர்கள் மனத்தில் தங்கியிருக்கும்.

**பா**ண்டியன் நாடக மன்றத்தார் 9-8-59 அன்று சென்னை திருவல்லிக்கேணி பார்த்தசாரதி சபா ஹாலில் ''விடை கொடு, தாயே!'' என்ற ஒரு சமூக நாடகத்தை நடத்தினார்கள். அந்நாடகத்தில் இலேசாகப் புரட்சி புகுந்திருந்தது. புரட்சி என்றால் பழமையைப் பரிகசித்துப் புதுமையையும் புகைக்க வைத்து, புரட்டிப் புரட்டிப் புடைக்கும் புரட்சியல்ல. பாடுபடும் மக்களைப் பாடாய்ப் படுத்தி வைக்கும் பணதாசர்களின் படாடோபத்தைப் படுக்க வைக்கும் புரட்சி. கையில் காசில்லை என்ற காரணத்தால், எந்தக் காரிகையும் தன் கற்பைக் கடைச் சரக்காக்கத் துணிய

மாட்டாள் என்பதைக் கடுமையான சூழ் நிலையில் எடுத்துக் காட்ட முயலும் புரட்சி.

வட்டிக்கு வட்டி வாங்கித் திட்டமாகத் துட்டுக்களை ஈட்டும் வன்னெஞ்சம் வாய்ந்தவன் வைரம். அவனிடம் கடன்பட்டு விடுகிறான் நித்தியானந்தம்.

பட்ட கடனைத் தீர்க்க நித்தியானந்தம் இரவு பகல் ஓய்வு ஒழிவு இல்லாமல் ஆலையில் வேலை செய்து விபத்தில் ஒரு காலை இழக்கிறான். தாங்கொணு வறுமையினுல் நித்தியானந்தத்தின் ஓங்கிய அறிவு குன்றி அவனைக் குடிகாரனுக்குகிறது. மனம் இல்லாமல் வைரத்துக்கு மாலையிட்டுத் தன் குடும்பக் கஷ்டத்தைப் போக்க முயல்கிறுள் தேவி. ஆனுல் வைரம் மங்கைக்கு மாலையிட விரும்பவில்லை; பெண்மையைப் பேய்த்தனமாகச் சூறையாடினுன். பெண்மை அழிந்த தேவி பெருந்துக்கத்துக்கு ஆளாகிறுள்; சிற்றன்னையின் சிறுமதியும் இறுதியில் நன்மதி பெற்று விடுகிறது. இடையில் தேவியைக் காதலிக்கிறுன் செல்வன். வைரம் கொலை செய்யப்படுகிறுன்.

கொலை செய்தது யார்?

இதுதான் நாடகத்தின் 'சஸ்பென்'ஸாகக் கடைசி வரையில் நிற்கிறது.

இந்த நாடகத்தில், உயிர்த் துடிப்பும் உத்வேகமும் கொண்ட பாத்திரம் தேவி. தேவியின் பாத்திரத்தை ஏற்ற மனேரமா தான் அந்தப் பாத்திரத்துக்கு ஏற்றவர் என்பது அவரது உணர்ச்சிப் பிரவாகமான நடிப்பின்மூலம் நன்கு வெளியாயிற்று. மேடையில் கண்ணீரும் கம்பலையுமாக அவர் துடித்துத் தவித்த காட்சி என் கண்ணெதிரே நிற்கிறது. வைரத்தினிடம் அகப்பட்டு, மந்தி கையில் சிக்கிய மலராகத் தவித்த போதும், பாசமற்ற சிற்றன்னையிடம் பரிவு காட்டிய போதும் கண்ணீருக்கிடையில் காதல் கீதம் கேட்டு, செல்வனுடன் சேர்ந்துகொண்ட போதும் மனேரமாவின் நடிப்பு என் மனத்தில் படிந்து விட்டது.

அடுத்தபடி மிக நன்ருக நடித்தவர்களில் வைரத்தின் கணக்குப்பிள்ளையாக நடித்த எஸ். ஆர். கோபால் என் கண்முன் நிற்கிறுர். அவரைப் பார்த்தால் மேடையில் நடிக்க வந்திருப்பதாகவே தோன்றவில்லை. தத்ரூபமான கணக்குப்பிள்ளையாகவே தோன்றியது. மேடையில் அவர் தோன்றிய ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஒரு பாட்டைப் பாடிய படியே உள்ளே சென்றது பிரமாதமாயிருந்தது. அதை ரஸிகர்கள் நன்கு ரஸித்தனர்.

சிகாமணியாக நடித்த எம். என். கிருஷ்ணனும், அவர் காதலி காவேரியாக நடித்த நிர்மலாவும் நன்ருக நடித்ததுடன், நாடகத்தின் சுவாரஸ்யமான அம்சங்களுக்கு உறுதுணையாக விளங்கினர்.

நித்தியானந்தம் ஒரு நல்ல பாத்திரம். வறுமையில் வாடி, குடும்பத் தொந்தரவினுல் குன்றி, கடுமையான கடன் கஷ்டத்தில் கரைந்து, கடைசியில் குடிகாரனுக மாறின வரையிலும் அந்தப் பாத்திரத்தை ஏற்ற செந்தாமரை பிரமாதமாக நடித்தார்.

நாடகத்தின் வில்லன் வைரமாக நடித்த எஸ். ஏ. ஜி. சாமி பிரமாதமாக நாடக வசனங்களைப் பேசினுர். ஆனுல் அத்தனை விறைப்பும், மிடுக்கும், இரைச்சலும் தேவை தானு என்று கேட்கத்தோன்றியது. அவற்றுக்குப் பதிலாக அந்தத் தோழர், நடிப்பில் சிறிது கவனம் செலுத்தினுல் நன்ருயிருக்கும்.

தேவியின் சின்னம்மாளாக நடித்த கப்புலட்சுமியின் நடிப்பும் பொருத்தமாயிருந்தது.

கதாநாயகன் செல்வனுக வந்த இளம்பரிதி மேடையிலும் இளம்பரிதியாகத்தான் தோன்றினுர். அவர் பாத்திரத்தோடு ஒன்றி நடிக்கப் பயிற்சி பெற வேண்டும்.

இந்த நாடகத்தில் முக்கியமாகப் பாராட்டப்படவேண்டிய அம்சம் வசனம்தான். அடுக்கு மொழித் தொடரும், விறுவிறுப்பும் கொண்டு வசனம் மேடையில் மிடுக்கு நடைபோட்டது. அடுக்குத் தொடர் என்று கூறியதும் பல்லை



உடைக்கும் வெறும் சொல்லடுக்கு என்று நினைக்க வேண்டாம். நாடகத்தில் கொஞ்சம் அலுப்புத் தட்டிய சந்தர்ப்பங்களிலெல்லாம் வசனம் சிலிர்த்தெழுந்து கை கொடுத்தது. இந்த நாடகத்துக்குக் கதை, வசனம் அமைத்தவர் "முரசொலி" சொர்ணம்.

பெற்ற அன்னையை வறுமையில் வாடாமல் காக்க, முதலில் அவளிடம் விடைபெற்றுச் செல்கிறுன் செல்வன்; கடைசியில் வைரத்தைக் கொன்றவன் என்ற குற்றச் சாட்டோடு, "விடை கொடு, தாயே!" என்று கேட்டு விடைபெற்றுச் சிறை செல்கிறுன். களங்கமடைந்த தேவியைக் கரம் பற்ற அவன் சிறையிலிருந்து வரப் போவதாகக் காட்டி நாடகத்தை உயிர்த் துடிப்புடன் முடித்திருப்பது பாராட்டுக்குரியது.



சிரிப்புடன் ஊரை விட்டுத்தாண்டவ மாடிக் கொண் டிருந்தான்.

கூதலும் சாரலும் உடலைக் குலுக்கி எடுத்தன. விறகுகள் அடுப்புக்குள்ளிருந்து கரும் புகையைக் கக்கினவே ஒழியத் தீப்பற்றவில்லை. பச்சை மூங்கிலுடன் விறகின் மணமும் கரும்புகையுமாக நஞ்சம்மையின் கருவிழிகளில் நீரை வருவித்தன. தேநீருக்காக வைத்த பாத்திரம் சூடுகூடப் பிடிக்கவில்லை. வீட்டுத் தலைவன் சற்றைக்கெல்லாம் வந்துவிடுவானே!

நீர்ப் பாத்திரத்தை எரிந்து கொண்டிருந்த கணப்பின் மேல் கொண்டு வந்து வைத்தாள்.

அவள் அடுப்பை ஊதிக் கொண்டிருக்கையி லேயே ஈரக் கம்பளியை உதறிக் கொண்டு, முரட்டுச் செருப்பொலிக்க, ஜோகி—வீட்டுக் குடையவன்—அவளுடைய மணாளன்வந்தான்.

'என்ன மழை! என்ன மழை! ஒரேயடி யாகக் கொட்டுதே? கிழங்கு நோவு விழுந் திடுமோ என்னமோ?—சுடு தண்ணி வச்சிருக் கிரியா, பெண்ணே?''

' மழை, கிழங்கு, மண்...இவைகளைத் தவிர என்ன நினைவு? வானைப் பார்த்து, மண்ணைப் பார்த்து, இது ஒரு வாழ்வா? பணம்...பணம் அன்னும் அந்த வாழ்வு அல்லவோ வாழ்வு!'' பெருமூச்சுடன் அவள் தேநீருக்காக வைத்த சுடுநீரைக் கொண்டு வந்து அவனிடம் நீட்டினாள்.

மலை ரோஜாவை நினைப் பூட்டும் அம்முகம் புகையிலே கன்றி யிருந்தது.

'' விறகு வைக்குமிடத்துக்குக் கூரை போட்டுவிடலாம், பெண்ணே! மழை கொஞ் சம் விடட்டும். எங்கே தேவகி, ராமன்... சத்தமே காணுமே?''

இந்தக் கேள்விக்காகவே காத்துக் கொண் டிருந்தவர்கள் போல் குழந்தைகள் ஓடி வந்தார்கள். கோட்டுப் பைக்குள்ளிருந்த பெரிய பொட்டலத்தைப் பிரித்து, ஜோகி ஆளுக்கு இரண்டாக போண்டாக்களை எடுத் துக் கொடுத்தான்.

'' இந்தா பெண்ணே! நல்லா யிருக்குதா பார்!'' என்று சொல்லியவாறே நஞ்சம்மை யிடமும் இரண்டைக் கொடுத்தான்.

''பள்ளத்துப்பூமி போனது தான். திரும்பிப் பணம் தான் வருமாம். ஏக்கருக்கு இரண்டு நூறு போட் டிருக்காங்களாம். தேநீர்ச் செடி ஒன்னுக்கு மூனு ரூபா தேறுமாம்...''

சுரத்தில்லாமல் அவன் அளித்த இந்தச் செய்தி நஞ்சம்மைக்கு, எந்த விதமான உணர்ச்சியையும் கொடுக்கக் கூடியதாக இல்லை.

எல்லாம் அவர்கள் மனசு போல்தான் நடக் கிறது! அவர்களுக்கென்று நீங்கிய பூமி அது. அவர்கள்தான் இந்த மலையையும் மண்ணையும் உதறிவிட்டுப் போய்விட்டார்களே? அவர் களுக்குப் பூமி எதற்கு? அலையில் முழுகு... தென்றும், போகட்டும் என்று இரட்டி மகிழ்ச்சியுடன் பணத்தை வாங்கிக் கொள் வார்கள். விரலில் அழுக்குப் படாமல் வாழு கிறார்கள். ஐந்து வருஷங்களுக்கு மூன்று குழந்தையாயிற்று. இப்போது நாலாவது... மகன் பிறப்பான்...

எண்ணக் கொடிகள் அத்திசையில் ஓட ஓட ஆற்றாமை அவளுக்குப் பொங்கி வந்தது. ஒத்தையில் ருக்மிணியின் அம்மா வீட்டில் கொழித்த நாகரிகக் காட்சிகள் நினைவில் தாபம் போடுவதுபோல் மின்னின. பக்கத் துக்குப் பக்கம் மேசை, நாற்காலி, கட்டில் மெத்தை, விரிப்புக்கள், இனுகினுசான புடவைகள், பொன் மாலைகள், பெரிய கார், பணியாட்கள்...குழந்தைகள் உடம்பில் அழுக் கேது, ஈரமேது?

பணமாகப் பலன் கிடைக்கும்பொழுது மண்ணைப் பார்த்து, வானைப் பார்த்துப் பணத்தைக் கணக்குப் போட வேண்டாமே!

நஞ்சம்மை பெருமூச்சு விட்டாள்.

அவள் மனசை அறியாமல் ஜோகி பேசினான்:

'' வர பணத்தைக் கொண்டு எப்படியும் பூமி கொஞ்சம் வாங்க வேணும். ரங்கனுக்கும் பிள்ளைங்களில்லையா?''

நஞ்சம்மைக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது.

'' அவுங்களுக்குப் பூமி எதற்கு? நம்மைப் போல் இந்த மண்ணுக்கு அவங்க வர மாட் டாங்க. பொண்ணுகளை நல்லாப் படிச்சவங்க ளாப் பார்த்துக் கட்டுவாங்க. பையன் பிறந்தால் படிக்க வச்சுக் காசாகக் கையிலே வாங்குவாங்க.''

'' அதொரு நிச்சயமா? பகலெல்லாம் நெனைப்பில்லாமப் பறந்தாலும் குருவி ராவிலே கூட்டுக்குத்தானே வரும்? ரங்கன் பிறந்த சீமையை அப்படி மறந்திட மாட்டான். அந்த வெய்யில். இப்ப ஏதோ வயித்துப் பிழைப்புக்கு. எனக்கு என்னைக்கும் அவன் பேரிலே அனுதாபம்தான், பாவம்...''

நஞ்சம் மைக்கு ஆத்திரம் பீறிட்டுக்கொண்டு வந்து விடும் போல் இருந்தது. அவர்களால் லவோ அண்ணன் மீது அனுதாபம் காட்ட வேண்டும்?

அன்றிரவெல்லாம் நஞ்சம்மைக்குத் தூக்கம் வரவில்லை. எலி கிழங்குக் கூடையில் புகுந்து

குடைந்து கொண்டிருந்தது. நெஞ்சைப் பிடிக்கும் குளிர். சரசரவென்று தூற்றல் ஓய்வில்லாச் சங்கீதமென விழுவதும், காற்று 'சோ'வென்று கருதி கூட்டுவதுமாக இரவு நீண்டு கொண்டேயிருந்தது. தாயின் சிறகுக்குள் ஒண்டிக் கொள்ளும் குஞ்சுகள் போல் அந்தப் பெரிய நார் மெத்தையில் குழந்தைகள் நால்வரும் அவனுக்கும் அவளுக்குமிடையே ஒண்டியிருந்தார்கள். கறுப்புக் கம்பளிக்குள் தோலி இவ்வுலகச் சிந்தனையில்லாத உறக்கத்திலே ஆழ்ந்திருந்தான். இருவரையும் ஒட்டி வைக்கும் சின்னப் பெண்ணையும், ராமனையும் நஞ்சம்மை கைகளால் தொட்டுப் பார்த்தாள். நடுவே தேவகியும் போஜனும். தேவகியின் மீது எல்லோருக்கும் எத்தனை ஆசை! குட்டித் தங்கை இல்லையா?

குழந்தைகளைத் தொட்டதுமே, அவளுடைய உடலில் புல்லரிப்பு உண்டாயிற்று. வீடு, கணவன், குழந்தைகள், மாடு, மனை... ஒரு குறையும் அவளுக்கு இல்லை. போஜனும் சின்னப் பெண்ணும் அக்கா பெற்ற குழந்தைகள். தேவகியும் ராமனும் அவளையே கொண்டு அவள் பெற்ற செல்வங்கள். வெளி உலகம் அறியாத அந்த மலைச்சீமையினர் பார்த்துப் பொறாமைப்படத் தக்க விதத்தில் அவள் என்னவோ நிறைவு உடையவள்தான்.

ஆனால்......

வருஷங்கள் ஒவ்வொன்றாக உருண்டோடின. பத்து வருஷங்கள் கீழ்ச்சீமையில் படித்துவிட்டு, அந்தப் பட்டணத்திலே நூறு நூறாக வாங்கக் கூடிய ஓர் உத்தியோகத்தையும் தேடிக் கொண்டு, புது உடையும், புது நடையும், புது மெருகுமாக, அந்த 'ஹட்டி'க்குள் ஒரு புரட்சியையே கொண்டு வந்து விட்டான் ரங்கன். அவன் தட்டுக்கும் தன் தட்டுக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் என்பது பேதைக்கு அப்போது புரியவில்லையே?

சின்னப் பெண்ணைப் பெற்றெடுத்துக் கொண்டு அக்காள் வந்த புதிது. அக்காளோடு அவனும் வந்திருந்தான்.

ரங்கனுக்காக, வாசலில் இறுங்கு சேமிக்கும் சிறு அறை புது உருவெடுத்திருந்தது. அழகான கட்டிலும், மெத்தையும், மேஜையும் நாற்காலியும் அறைக்குள் படித்த நாகரிக மனிதர்களை வரவேற்கத் தயாராக இருந்தன. புது வெள்ளைப்பூச்சு. சுவரெங்கும் ரங்கனும் அவன் கல்லூரி நண்பர்களுமாக ஆண்டுக்கொருமுறை எடுத்துக் கொண்ட நிழற் படங்கள். வீட்டில் எண்ணெய்த்திரி விளக்குப் போய், முதன் முதலாக, அந்தக் குடியிருப்பிலே விசையைத் தட்டினால் ஒளி பரவும் விளக்கு வந்திருந்தது.



நஞ்சம்மை பார்த்தது பார்த்தபடி வாய் பிளந்துதான் நின்றாள். வயதுக்குரிய நாணம் கடிவாளமிட்டு அடிக்கடி வீட்டுக்குள் அவளை இழுத்தாலும், வாசற்புறம் அவள் ஓடி ஓடி வந்து நின்றாள்.

கார்த்திகை மாசத்து வெய்யிலிலே நீல வானை நோக்கி புகம்புகமாக நிற்கும் பழக்கப் பட்ட மலைச் சிகரங்களையும், பசுமை போர்த்த சரிவுகளையும் பார்க்கையிலே அவளுக்கு அப்போது அலட்சியமே உண்டாயிற்று. இம் மலைகளுக்கு அப்பால் இருக்கும் வெளி உலகுக்கு, விநோதமான நிறங்களை உடைய புது உலகுக்கு, இன்பமூட்டும் வெதுவெதுப்பான விந்தை உலகுக்கு ரங்கனோடு போக அவள் உள்ளம் குதியாய்க் குதித்தது.

அந்தக் கனவுகள் தாம் எத்தனை வண்ண விசித்திரங்கள் வாய்ந்தவை! அவளுடைய அக்காள் சேலை உடுத்தும் நாகரிகத்துக்குள் புகாதவள். ஆனால் அவளோ, விவரம் அறிந்து முண்டு உடுத்தவில்லை. சொருகுடன் சேலை உடுத்துக் கொண்டு, பவுடர் சாந்து உபயோகிக்கக் கற்றுக் கொண்டு, கூந்தலை இழைய இழைய வாரி, நீளமாகப் பின்னல் போட்டு நாடா முடிந்து கொண்டு தனக்கு நிகரில்லை என்றுதான் வளைய வந்தாள்.

ஆனால், பாவம்! ரங்கனின் உள்ளத்தைக் கவர்ந்து விட்டவள் வேறொருத்தி இருக்கிறாள், இருக்கக் கூடும் என்பதைக்கூட அவள் அப்போது அறிந்து கொள்ளவில்லை.

மாமன் போய் ஒத்தையில் பெண் கேட்டு வந்த விவரத்தைக் கூட அவள் அறியாள்.

ஊருக்குள் ருக்மிணியின் தாயும் தந்தையும் வந்து போன அன்றுதான் எத்தனை பரபரப்பு!

கல்லும் முள்ளுமாக இருந்த மேல் சாலையில் பளபளக்கும் கார் வந்து நின்றது. குண்டு குழிகள், சரிவு என்றிருந்த பாதையைக் கடந்து, ரங்கன் கூட வர, அவர்கள் வந்தார்கள். பட்டுச்சேலை பாங்காக உடுத்தி, வலைக் கொண்டையும் வைர அணிகளுமாக வந்த ருக்மிணியின் தாயைச் சுற்றி, அந்தக் குடியிருப்புப் பெண்மணிகள் எப்படிச் சூழ்ந்து கொண்டார்கள்! வழி நெடுகிலும் வரவேற்பு, உபசார வார்த்தைகள். அவர்கள் வகுப்பிலேயே முதன்முதலாகக் கடல் கடந்து வெளி நாடு சென்று, டாக்டர் பட்டம் பெற்று, மேற்கத்திய நாகரிகத்தில் முழுகி ஒத்தையோடு ஒன்றி விட்ட கணவனல்லவா? சாமானியமா? அவர் மகள் ருக்மிணிதான் ரங்கனைக் கொண்டவனாகக் கொள்ளக் காத்திருந்தாள்.

வீட்டில் விருந்தும் சிரிப்பும் கலகலப்புமாக இருக்கையில் நஞ்சம்மை புகைபட்ட மலர் போல் உள்ளே அடைந்து கிடந்தாள். அந்தத் தடவை கோத்தகைக்குச் சென்றவள், ஆசையாக அக்காள் வீட்டுக்குக் குழந்தையைப் பார்க்கக் கொஞ்சி விளையாட வரவேயில்லை.

ருக்மிணிக்கும், ரங்கனுக்கும் கல்யாணம் *ஹட்டியில்தான் நிகழ்ந்தது. ஆயிரம் ஆயிரமாய்ப் பெண் வீட்டார் வாரி இறைத்து ஒத்தையில் கல்யாண விழா நடத்தினார்கள். கல்யாணத்தன்று அவள் குந்தைக்குப் போகவில்லை. புதுப் பெண்ணும், ரங்கனுமாகப் பட்டணம் செல்வதற்கு முன் ஊருக்கு வருகிறார்கள் என்று தெரிந்த அன்றுதான் அவள் அக்காள் வீட்டுக்கு வந்தாள். அந்த ருக்மிணியை ஒருதரம் பார்க்கவேண்டும் என்ற ஆவலே அவளைத் தள்ளி வந்தது. அவள் மட்டுமா? ஊரேயல்லவா பெண்ணையும் மாப்பிள்ளையையும் காணக் காத்திருந்தது.

பகல் பன்னிரண்டு மணி சுமாருக்குக் கார் வந்தது. கடிமணம் புரிந்தவர் மட்டுமே இறங்கி வந்தனர். குதிகால் செருப்பணிந்த குமரி, முகம் சுளிக்க, "ரோடு கிடையாதா?" என்று கேட்க, ரங்கன் அவள் தளிர்க் கையைப் பிடித்துச் சரிவில் அழைத்து வர வேண்டியிருந்தது. குஞ்சு குழந்தைகளிலிருந்து பெரியவர்கள்வரை வியப்புடன் புதுத் தம்பதியரை நோக்கினர்.

அத்தையும் மாமனும் ஜோகியும் வரவேற்று அவர்களை வாசல் அறைக்கு அழைத்துச் சென்றனர்.

முன்புறம் நின்று பார்த்த நஞ்சம்மையின் நெஞ்சம் பொருமியது.

அவள் அறைக்குள் சென்ற போது, ரங்கன் கேலிக் குரலில் "என்ன சின்னப்பெண்ணே!" என்று சிரித்தான்.

அவள்தான் எத்தனை அழகு! நிலவு பூத்தாற் போன்ற வட்ட முகம், காப்பிப் பழத்தின் நிறம் கொண்ட இதழ்கள், வளைவான இரட்டைப் பின்னல், கொண்டையில் சேலை நிறத்திலே பெரிய ரோஜாப் பூவை அவள் செருகியிருந்த சொருகு—நஞ்சம்மைக்கு இன்றைக்கெல்லாம் படித்தாலும் வராத வித்தையாகத் தோன்றியது.

சிவப்பு வெல்வெட் சோளியிலே மயில் பதக்கத்துடன் வைர மாலை ஒன்று 'டால்' அடித்தது. உள்ளித் தோலி போன்ற அந்தச் சேலையைத்தான் எத்தனை நேர்த்தியாக அவள் உடுத்தியிருந்தாள்!

அத்தனை பேரும் முண்டியடித்துக் கொண்டு அச்சிறு அறையில் வீற்றிருந்த அழகுக் கோலத்தைப் பார்த்தார்கள். ரங்கனின் பெருமை அடங்காப் பேச்சை வாய் பிளந்த வண்ணம் கேட்டு ரசித்தார்கள்.

அத்தை அவர்களுக்குப் பணியாரமும் காப்பியும் கொண்டு வந்து உபசரித்தாள்.

எத்தனை வற்புறுத்தியும் அவர்கள் விருந்துண்ண நேரமில்லை என்று எழுந்துவிட்டார்கள். கார் காத்திருக்கும் என்று உடனே கிளம்பியும் விட்டார்கள்.

ரங்கன் மனைவியுடன் சென்னைக்குக் கிளம்பும் முன், அக்காள்தான் கணவனுடன் ஒத்தைக்குப் போய் வந்தாள்.

அப்புறம் எங்கே இந்தப் பக்கம் வருவதற்கு?

இந்த ஆறு வருஷங்களுக்குள் வீட்டில் எத்தனை எத்தனை மாறுதல்கள் ஏற்பட்டு விட்டன? அக்காள் பிரசவித்து இறந்ததும் ஊர் சுற்றப் போன அத்தையும் மாமனும் ரயில் விபத்தில் இறந்ததும், ஒரே வருஷத்திலா நேர வேண்டும்? ரங்கன் மட்டும் ஒரு தரம் வந்து தலைகாட்டி விட்டுப் போனான். ஒத்தைக்கு ருக்மிணி பேறு காலத்துக்கு வருவதுண்டு. ஆனால் அக்காளின் இடத்தில் வந்து வீட்டின் தலைமைப் பொறுப்பை ஏற்றுக் கொண்ட நஞ்சம்மைக்கு ஏது ஒழிவு?

---

*ஹட்டி: நீலகிரி மக்கள், படகர் குடியிருப்பு — கிராமம்.

# மபத்லால் வாயில்ஸ்




# மபத்லால் பைன்

**தி மபத்லால் பைன் ஸ்பின்னிங் & மான்யு. கம்பெனி லிமிடெட், நவஸாரி.**

MF 29

அவளுடைய கணவன்தான் அவ்வப்போது செய்தி கொண்டு வருவான்.

ஒத்தைப் பங்களாவிலும் முன் போல் இப்போது செழிப்பு இல்லை. டாக்டர் சென்ற ஆண்டில் தேர்தலுக்கு நின்று பணத்தை வாரி இறைத்து விட்டுத் தோல்வியில் பதுங்கி விட்டார். சென்ற கோடையின்போது கூட ருக்மிணி குழந்தைகளுடன் வந்திருந்தாளாம். முதலில் மூன்றும் பெண் குழந்தைகள். நான்காவதும் பிறக்க இருக்கிறதென்பதை அவர்கள் அறிவார்கள்.

நாட்கள் ஓடின: மாதங்கள் இரண்டும் தேய்ந்து விட்டன.

ஜோகி கால்கள் தேயத் தேய அலைந்திட்ட அலுவலகத்துக்கு நடந்து கொண்டிருந்தான். தம்பிக்குப் பூமி பற்றிய விவரத்தை அவன் விரிவாக எழுத வில்லை. தம்பி எத்தனைதான் படித்துப் பெரியவனாக ஊர் மதிப்பில் உயர்ந்தாலும் அவன் வரைக்கும் குழந்தைப் பையன் தானே? தனக்கு எது வேண்டும், வேண்டாம் என்பது அவனுக்குத் தெரியாது. நாளுக்கு நாள் பழமை தேயப் புது உருவாகி வரும் இந்த மண்ணின் இயல்பான குளிர்ச்சியை நாடி மலையின் பசுமையை நாடித் தம்பி வருவான். அவனுக்கென்று பூமி வேண்டும் என்பது ஜோகியின் அசைக்க முடியாத நம்பிக்கை.

புரட்டாசி மாதம். வானம் மூடுவதும் தூற்றல் மலர்களின் மகரந்தமெனப் பொலபொலத்து விழுவதும், உடனே வெய்யில் அடிப்பதுமாக இருந்தது.

நஞ்சம்மை வீட்டு வாசலில் கூந்தலை விரித்துச் சிவிக் கொண்டிருந்தாள்.

பிற்பகல் மூன்று மணி இருக்கும். தேயிலைத் தோட்டத்துக்குச் சென்றிருந்த ஜோகி கையில் கடிதத்துடன் வந்தான்.

"ரங்கனும் ருக்மிணியும் இங்கே பிள்ளைங்களோடு வராங்களாம்!"

சீப்பு அவள் கையிலிருந்து நழுவியது.

"இங்கேயா...? என்ன பிள்ளே, ஆனு?"

"அதெல்லாம் ஒண்ணுமே எழுதலை. ரெண்டு மாசம் லீவு எடுத்துக்கிட்டு வரோமின்னுதான் எழுதியிருக்கிறான்."

அவளுக்கு என்ன உணர்ச்சி மேலிட்டது என்பது அவளுக்கே புரியவில்லை. இத்தனை நாட்களாக வராதவர்கள் இங்கே வரப் போகிறார்கள். ஏன்?

ஜோகியோ தலைகால் புரியாமல் வீட்டைத் துப்புரவு செய்வதில் முனைந்தான்.

நஞ்சம்மைக்கு வீட்டுக்குள் வேலையே ஓடவில்லை. வாசலிலேயே நின்றிருந்தாள். தம்பியை அழைத்து வர ஜோகி போயிருந்தான். சூரியனின் ஒளி மலைச் சிகரங்களில் பட்டு, அவள் நின்றிருந்த இடத்தை வந்து தொட்டு இன்பமாக்கியது. வீட்டோரத்துச் சரிவெல்லாம் சிறியதும் பெரியதுமாகப் பல வண்ணப் பூக்கள், பசும்புல்லுக்கிடையே, ஒளிந்து கள்ளச் சிரிப்புச் சிரிக்கும் சிறுவர் சிறுமியரைப்போல் பூத்துச் சிரித்தன. புதிதாகக் கன்றுபோட்ட மாடுகள் சற்றைக்கொரு முறை கன்றை நக்கி அரவணைக்கும் இன்பக் காட்சி. போஜனும் சின்னப் பெண்ணும் ராமனும் பள்ளிக்குச் சென்றிருக்கத் தேவகி அவளுக்கே



வடுகச்சேரி இரு ரங்கராமானுஜம் அவர்களின் புதல்வி குமாரி சௌந்தரவல்லியின் நடனம் தாஸப்பிரகாஷ் ஹோட்டலில் சமீபத்தில் அதிவிமரிசையாக நடைபெற்றது.

உரித்தான மழலைச் சொற்களை மிழற்றிப் புற்சரிவில் சரிந்து உருண்டு சில்லென்ற நீர், உடுப்பை நனைக்க விளையாடிக் கொண்டிருந்தாள். பக்கத்திலே 'கோல்டன்' தொழிற்சாலையிலிருந்து தேயிலை வறுக்கும் இனிமையான வாசனை சுவாசத்தில் கலந்து ஓர் இனிய புத்துணர்வை உண்டாக்கியது.

நின்றுகொண்டே ஒவ்வொரு நிமிஷமும் ஏறும் ஆவலைக் கட்டுப்படுத்த முடியாமல் தவித்த அவள் பரபரத்து நாலெட்டு நகர்ந்து சென்று பார்க்க, மேட்டோரம் வளைவில் அவர்கள் தென்பட்டுவிட்டார்கள்.

ஆளொருவன் சாமான்களைச் சுமந்துவர ஜோகி ஒரு குழந்தையைத் தூக்கி வந்தான். ரங்கன் ஒரு குழந்தையைத் தூக்கி வந்தான். பெரிய பெண் குழந்தை தாயின் கையைப் பிடித்துக் கொண்டு நடந்து வந்தாள்.

ருக்மிணியா இவள்? அந்தச் செழுமை எப்படி இப்படி வெளுத்து உலர்ந்தது? அந்த பெரிய கொண்டை அடர்த்தி, எப்படி இப்படி வெறும் போலி வட்டம் தெரியக் குறைந்து போயிற்று? பிரசவித்து. குழந்தை...? அருகே வந்து விட்டார்கள்.

ஜோகி தூக்கி வந்த குழந்தைக்குத் தலை, முகமெல்லாம் கட்டி வந்து சீழ் ஆறிய தழும்புகள். ரங்கன் வைத்திருந்த பெண் குழந்தைக்கு வயிறு முன்னுக்குக் கவிழ்ந்து தூக்கிக் கொண்டிருந்தது. இரண்டு விரல்களை வாயில் விட்டுக் கொண்டு பரிதாபமாகக் காட்சி அளித்தது. பெரிய பெண்ணும் சின்னப் பெண்ணையோ, தேவகியையோ போல் கன்னம் சிவக்கக் கொழு கொழு வென்றில்லை.

அதிருக்கட்டும், ரங்கனுக்குத் தலைமுடி எப்படி இப்படி வெண்மையாயிற்று? அவனை விடப் பத்தாண்டு மூத்த அண்ணனுக்கு ஓர் இழை கூட நரைக்கவில்லையே?

இப்போது 'சின்னப் பெண்ணே!' என்று அழைக்கக் கூச்சம் போலும்! "சுகமா?" என்று கேட்டுக்கொண்டே ரங்கன் சிரித்தான். வீட்டுக்குள் அவர்கள் நுழையு முன் குடியிருப்பே அந்த வாசலில் கூடி விட்டது.

பரபரப்பைச் சொல்ல வேண்டுமா?

ரங்கனைப் பற்றிய வண்ணவண்ணக் கற்பனைகளில் ஆழ்ந்திருந்த அண்டை அயலாரின் ஏகோபித்த அனுதாபக் குரல்கள்.

குழந்தை எட்டு மாசத்தில் உயிரில்லாமல் பிறந்து, அவள் பிழைத்ததே மறு பிறவியாகிறதாம். ஒத்தைப் பங்களாவை வாடகைக்கு விட்டு விட்டு, டாக்டர், குன்னூரில் சிறிய இடமாக மாறி விட்டாராம். வாழ்வும் தாழ்வும் மாறி மாறி வருபவை அன்றோ?

உள்ளே வந்து குழந்தையைக் கீழே இறக்கிய ரங்கன், "அப்பா...! என்ன வெயில் அங்கே? ஜீவன்களுக்குத்தான் ஆகிறதே யில்லே. நூறு ரூபாய் வாடகை கொடுக்கிறேன், இவங்களுக்கு ஓடி விளையாட மண், புல் உண்டா? டாக்டர், மருந்து மட்டும் மாசம் இரு நூற்றுக்குக் குறையாமல் சாப்பிடுகிறது..." என்றான் அலுப்புடன். ஜோகி ஆள் கொண்டுவந்த சாமான்களை வாங்கி வைத்து விட்டுக் குழந்தைகளை மடியில் வைத்துக் கொண்டு உட்கார்ந்தான். ரங்கன் வாசல் அறையில் ருக்மிணிக்குப் படுக்கை விரித்து விட்டு வந்தான்.

"மூணு மாசமாப் படுக்கைதான். இந்தத் தடவை, நல்லா ஆகும் வரை இங்கேதான்னு தீர்மானிச்சிட்டேன்."

"இந்தக் காத்துப் பட்டாலே சரியாகும்" என்றான் அண்ணன்.

நஞ்சம்மை எல்லோருக்கும் காப்பியைக் கலந்து எடுத்து வந்தாள். சகோதரர்களுக் கிடையே பாத்திரத்தோடு காப்பியையும் இரண்டு தம்ளர்களையும் வைத்து விட்டு, ஒரு தம்ளரில் காப்பியுடன் அவள் வாசல் அறைக்குச் சென்றாள்.

படுத்திருந்த ருக்மிணி, "உங்களுக்குத்தான் கஷ்டம், அண்ணி!" என்றாள்.

"கஷ்டமென்ன? இத்தனை நாளைக்கப்புறமேனும் வந்தீங்களே!" என்றாள் நஞ்சம்மை.

"இந்தத் தடவை இவ்வளவு மோசமா விடும்னு நானே நினைக்கலே. பிறந்தது ஆண்."

தரையைப் பார்த்த ருக்மிணிக்குக் கண்ணீர் துளும்பியது.

நஞ்சம்மைக்குத் தொண்டையில் மெழுகு கரைவது போலிருந்தது.

"போவுது, நாம் வருத்தப்பட்டுப் பலன் என்ன? என்னமோ, நீ பிழைச்சுக்கிட்டே, நல்லபடியா. இனிமேல் தேவர் கிருபை இருந்தால் அடுத்த வருசமே ஆண் குழந்தை பிறக்காதா? அவர் கருணை, வருத்தப்படாதே, ருக்கு!" என்று ஆறுதல் கூறினாள்.

வெகு நாட்கள் பழகினாற் போன்ற சகஜ பாவம் எப்படித் தனக்கு வந்ததென்று நஞ்சம்மைக்கே புரியவில்லை. ஆனால் அவளுடைய ஆறுதல் மொழிகள் ருக்மிணியைத் தேற்றி விடவில்லை. மாறாகத் துயரம் பெருகி வந்தது. பொல பொலவென்று முத்துக்கள் உதிர்ந்தன.

"ருக்கு? செச்சே! தேவர் கருணை இருக்கிற துன்னு மனசைத் தைரியப்படுத்திக்கம்மே!"

வெளுத்துச் சோகையிழந்த ருக்மிணியின் இதழ்கள் துடித்தன.

"இனிமே...இனிமே....ஆணும் இல்லே, ஒண்ணுமில்லே."

அவள் என்ன சொல்லுகிறாள் என்பது நஞ்சம்மைக்கு முதலில் விளங்க வில்லை. அவள் அந்த மலைகளுக்கு அப்பால் போய் அறியாதவள்; வெளி உலகமும், இயந்திரயுக நாகரிக வாடையும் உணர்ந்து அறியாதவள். இயற்கையின் மடியிலே கள்ளங்கபடில்லாமல் தவழும் குழந்தை உள்ளம் கொண்டவள். இயற்கையின் ஆணைக்குட்பட்டு, அந்த வரம்புடனே வாழ்க்கையை நடத்தும் வழியையே அவள் அறிவாள்.

"எனக்கே தெரியாது. ஆபீஸ் வேலே, பம்பாய்க்குப் போறேன்னாங்க; பத்து நாட்கள் கழிச்சு வந்தாங்க. வருஷா வருஷம் கஷ்டப்படுறியே, வேணான்னு முடிவு செஞ் சேன்னாங்க" என்று ருக்மிணி கண்ணீரை ஆறாகப் பெருக்கிய வண்ணம் இரகசியத்தை விண்டபோது நஞ்சம்மை திடுக்கிட்டாள்.

இப்படியும் உண்டா? அந்த வெளி உலக நாகரிகத்தில் இதுவும் ஒன்றா? வாழ்க்கை பாடுபட்டுப் பலன் காணுவதற்கு இல்லையா? அநுபவிக்க மட்டும்தானா? காலில் விழுந்து பெரியவர்களைப் பணிந்தால், "நிலத்தில் ஒன்று போட்டால் ஒன்பது விளையட்டும்; பெற்றுப் பெருகிச் சுகமாக வாழுங்கள்" என்றுதானே வாழ்த்துவார்கள்? நிலம் போயிற்றென்றால், இப்படியும் உண்டா? எல்லாம் பொய்த்ததா? இந்த மலைகளுக்கு அப்பாலுள்ள வண்ணங்களெல்லாம் கானல் நீரான பொய்த் தோற்றம்தானா? மண்ணோடு பொருந்தாத, பண வாழ்க்கையிலே, உயிருக்கு இடமில்லையோ?

"சாப்பாடு வைக்கிறியா, பெண்ணே? கிழங்குத் தோட்டத்துப் பக்கம் போக வேணும்" என்று ஜோகி வாசற்படிக்கு வெளியிலிருந்து குரல் கொடுத்தான்.

பள்ளிக்கூடத்திலிருந்து குழந்தைகள் எல்லோரும் வந்து விட்டார்கள். ரங்கனின் சிரிப்பும், குழந்தைகளின் சிரிப்புமாக வீடே கலகலத்தது. நஞ்சம்மை விடுபட்டவளாக வெளியே வந்தாள்.

பெரிய வட்டிலை வைத்துச் சோறும் குழம்பும் இட்டாள். கட்டித் தயிர் வைத்தாள். ஜோகி குழந்தைகளை வட்டமாகச் சூழ உட்கார வைத்துக் கொண்டு தானும் அமர்ந்தான்.

தம்பியின் குழந்தைகளோ புதுமையாகப் பார்த்தனர். பழக்கப்பட்ட குழந்தைகளோ கருவிழிகள் பளபளக்கத் துருதுரு வென்று வட்டிலைக் காலியாக்கப் போட்டியிட்டார்கள். கோழிக் குஞ்சை அணைப்பதுபோல் அணைத்துக் கொண்டு தம்பி குழந்தையின் பிஞ்சுக்கரங்களில் உணவை வைத்த ஜோகி, "குழந்தைகளை இங்கேயே விட்டுப் போகச் சொல்றேன், பெண்ணே!" என்றான்.

அவன் குரலில் பெருமிதம் தொனித்தது.

நஞ்சம்மையின் நெஞ்சு நிறைந்து விம்மியது. பளபளக்கும் கருவிழிகள் நீரைச் சிந்தி விடாதபடி, முகத்தைத் திருப்பிக்கொண்டு, சோற்றைப் பெயர்த்து வைத்துத் தாராளமாகக் குழம்பையும் ஊற்றினாள்.

## அத்தியாயம் 5

# கனவு பலித்தது

அன்று பகல் ஒரு மணிக்கே வீணா புங்கனூற்று டிஸ்பென்சரிக்குக் கிளம்பி விட்டாள். வழக்கமாக அவள் பிற்பகல் மூன்று மணிக்குத்தான் வீட்டிலிருந்து புறப்படுவாள். நாலு மணிக்குள்ளே புங்கனூற்றுக்கு வந்து சேருவாள். ஆறு, ஆறரை, அதிகமாகப் போனால் ஏழு மணிக்கு மேல் அங்கே தங்க மாட்டாள். ஆறு மணிக்கு மேல் ஆயிற்றென்றால் பெரும்பாலும் மாடசாமியை வண்டியைக் கட்டிக் கொண்டு ஊர் செல்லும் படி கூறி விட்டுச் சுந்தரத்தின் காரில் தான் வீடு திரும்புவாள். ஆனால் இன்று அவள் ஒரு மணிக்கே டிஸ்பென்சரிக்குக் கிளம்பியதற்குக் காரணம் இருந்தது.

இன்று காலையில் அவள் ஒரு நோயாளிக்கு ஆபரேஷன் ஒன்று செய்து முடித்தாள். அவன் புங்கனூற்று அணைஸ்தலத்தில் கூலியாக இருப்பவன். அங்குள்ள டிஸ்பென்சரியில் இம்மாதிரிப் பெரிய ஆபரேஷன்களைச் செய்யப் போதிய வசதி இல்லாமையால் அந்த நோயாளியைக் கேசவபுரத்துக்கு வரச் செய்து ஆபரேஷன் செய்தாள். ஆபரேஷன் முடிந்த பிறகு, நோயாளிக்கு ஜுரம் வந்து விட்டது. நோயாளிகள் ஆஸ்பத்திரியிலேயே தங்கிச் சிகிச்சை செய்து கொள்ள வசதியாகக் கேசவபுரத்தில் நாலைந்து கட்டில்கள் போட்டு வைத்திருந்த போதிலும், வீணா இதுவரையில் உதவிக்காக நர்ஸ் யாரையும் அமர்த்திக் கொள்ளாததால், இந்த நோயாளியை ஜுரத்துடன் புங்கனூற்றுக் காலனியிலுள்ள அவனுடைய வீட்டுக்கு அனுப்பி வைக்க வேண்டியதாயிற்று. பெரிய ஆபரேஷன்களைச் செய்து முடித்ததும், சில சமயம் சில நோயாளிகளுக்கு ஜுரம் வருவதுண்டு. ஆயினும் அந்த ஜுரத்தோடு நான்கு மைல் கட்டை வண்டிப் பிரயாணம் மேற்கொள்ள வைத்ததால் அவனுடைய நிலை என்ன ஆயிற்றோ என்ற கவலை வீணாவை வாட்டத் தொடங்கியது. அதனால்தான் அவள் இன்று பகல் சாப்பாடு முடிந்ததுமே, புங்கனூற்றுக்குப் புறப்பட்டு விட்டாள்.

காலனிக்கு வந்து, விகாஸின் உதவியுடன் அந்த நோயாளியின் வீட்டை விசாரித்துக் கொண்டு சென்று, அவனுக்கு ஆபத்தான நிலை ஒன்றும் இல்லை என்பதைப் பரிசோதித்து அறிந்து கொண்ட பிறகுதான் அவளுக்கு மன நிம்மதி ஏற்பட்டது.

அவளும் விகாஸும் அந்த நோயாளியின் வீட்டிலிருந்து புறப்பட்டபோது மணி இரண்டரைதான் ஆகியிருந்தது. டிஸ்பென்சரி நேரமோ மாலை நாலு மணிக்குத்தான். எனவே, விகாஸ் அவளைத் தன் வீட்டுக்கு வருமாறு அழைத்தான்.

“வேண்டாம், விகாஸ்! அதிகாலையில் ஐந்து மணிக்கு, நல்ல தூக்கம் வரும் வேளையில் நாள்தோறும் எழுந்து வேலைக்குச் செல்லும் நீ, பகலில் சிறிது நேரம் தூங்கி ஓய்வெடுத்துக் கொள்ளுவாய். அந்த ஓய்வு நேரத்தில் பாதியை இன்று நான் ஏற்கெனவே கெடுத்து விட்டேன். மீதி நேரத்தையும் கெடுக்க விரும்பவில்லை. நீ வீட்டுக்குப் போய்த் தூங்கி விட்டு வழக்கம் போல் நாலு மணிக்கு டிஸ்பென்சரிக்கு வா. நான் டிஸ்பென்சரியிலே இருக்கிறேன்; இல்லா விட்டால்



இன்ஜினீயர் வீட்டுக்குப் போய்ச் சியாமளி மாமியுடன் பேசிப் பொழுதைத் தள்ளிக் கொள்ளுகிறேன்” என்றாள் வீணா.

“இல்லை, வீணா! நீ அவசியம் என் வீட்டுக்கு வரத்தான் வேண்டும். உன்னிடம் முக்கியமான விஷயம் ஒன்று பேச வேண்டும்” என்றான் விகாஸ்.

“உறக்கத்தைக் கெடுத்துக் கொண்டாவது பேச வேண்டிய அவ்வளவு அவசரமான விஷயமா அது?” என்று வீணா சிரித்துக் கொண்டே கேட்டாள்.

“உறக்கமா? என் உறக்கம் பறிபோய் இன்றைக்குச் சரியாக ஏழு நாட்களாகின்றன, வீணா! அந்தப் பிரச்னை இரண்டில் ஒன்றாகத் தீர்ந்தாலன்றி எத்தனை நாட்களானாலும் என் கண்கள் உறக்கம் கொள்ள மாட்டா.”

விகாஸின் பேச்சில் என்றுமில்லாத தீவிரம் ஒலித்ததைக் கண்ட வீணா அவன் முகத்தைக் கூர்ந்து நோக்கினாள். அம் முகத்தில் நிலவிய குழப்பம் அவன் கூற்றுக்குச் சான்று தந்தது. “என்ன விஷயம், விகாஸ்?” என்று அவள் பரபரப்புடன் வினவினாள்.

“அதைச் சொல்லத்தானே உன்னை அழைக்கிறேன். வா, போகலாம்” என்று அவன் அவளைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றான்.

விகாஸின் வீட்டுத் திண்ணையில் அவனை எதிர்பார்த்துக் கொண்டு ஒரு பெண்

உட்கார்ந்திருந்தாள். வீணாவைக் கண்டதும் அப் பெண் அவளுக்கு வணக்கம் தெரிவித்து விட்டுப் பேசாமல் வீட்டின் பின் கட்டுக்குச் சென்றுவிட்டாள்.

"இவள்தான் உன் வீட்டில் வேலைசெய்து வரும் முத்தம்மாள் என்ற பெண்ணா? பரவாயில்லை. அழகாகத்தான் இருக்கிறாள். பரமசிவம் பாக்கியசாலியே!" என்று கொல்லைப் புறம் சென்றுகொண்டிருந்த அந்தப் பெண்ணை நோக்கியவாறு வீணா சொன்னாள்.

"இல்லை, இல்லை; இவள் முத்தம்மாள் இல்லை. வேறொரு பெண்."

"ஏன், மணம் செய்து கொண்ட பிறகு முத்தம்மாள் வேலையை விட்டு விட்டாளா, என்ன?"

"இல்லையே! அவள் வேலை செய்து கொண்டுதான் இருக்கிறாள்."

"பின் இவள் யார்?"

"இவளைப் பற்றிச் சொல்லத்தான் உன்னை அழைத்து வந்தேன், வீணா! உட்கார், சொல்லு



# உறங்காவோ?

கிறேன்" என்று விகாஸ் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டு வீணாவை அமரச் செய்தான்.

மறு விநாடியே அவன் அவளைப் பற்றிச் சொல்லத் தொடங்கி விட்டான். எனினும் அந்த ஒரு விநாடி நேரத்தில் வீணாவின் மனத்தில் ஆயிரம் ஆயிரம் நினைவுகள் இழையோடி விட்டன. 'யார் இவள்? ஒரு வாரமாக இரவு பகலாக உறக்கமின்றி ஏதோ ஒரு பிரச்னை தன்னை வருத்தி வருவதாக விகாஸ் சொன்னானே, அது இவள் பிரச்னைதானா? அப்படியானால் அது என்ன பிரச்னை?'

கொதிக்கும் சூடு வந்ததும், பால் தானாகவே பொங்கி விடுவது போல் வீணாவின் உள்ளமும் இந்தக் கொதிப்பான நினைவுகளால் பொங்கியது. சில நாட்களுக்கு முன்பானால் அவள் உள்ளம் இவ்வளவு பொங்கியிராது. ஆனால் அந்தச் சில நாட்களுக்கு முன்பிருந்த வீணா வேறு; இப்பொழுது இங்கே உட்கார்ந்திருக்கும் வீணா வேறு. அந்தப் பழைய வீணா பழமையிலேயே ஊறியிருக்க விரும்பியவள்; இந்தப் புதிய வீணா புதுமையில் புகத் தொடங்கி யிருந்தவள். அவள், தனக்கும் தன்னையொத்த இதரப் பெண்களுக்கும் சமூகம் அளித்து வந்த கொடுமைகள் அநீதியானவை என்று தெரிந்திருந்தும் அவற்றை எதிர்ப்பது பாவம் என்று கருதி யிருந்தவள்; இவளோ அக்கொடுமைகளை எதிர்க்க உறுதி பூண்டிருந்தவள். ஆம், அந்தச் சில நாட்களுக்கு முன்புதான் பழைய வீணா புதிய வீணாவாக மாறினாள். அந்தச்சில நாட்களுக்கு முன்புதான் அவள் தன்னைச் சமூகப் புரட்சிக்குத் தயார்ப்படுத்திக் கொண்டாள்.

ஆனால் அந்தத் தயாரிப்பு அத்தனை சுலபமானதாக இருக்கவில்லை. பிறந்தது முதல் உடலோடு உடலாக ஒட்டிக்கொண்டிருந்த அங்கம் ஒன்றைப் பழமையானது என்று வெட்டி எறிந்துவிட்டுப் புதிதாக ஒன்றைப் பொருத்திக் கொள்ளுவது எத்தனை சிரமமோ, அத்தனை சிரமமாகத்தான் இருந்தது இந்த மனமாற்றம். ஆயினும் அவள் தன்னை அந்த மாற்றத்துக்கு உட்படுத்திக்கொள்ளத்

**மாயாவி**

தீர்மானித்து விட்டாள். அங்கத்தை வெட்டி எடுப்பது போன்ற ரண வைத்தியங்களைச் செய்யும்போது, நோயாளி அதன் வேதனையை உணராதிருக்க எத்தனை சக்தி வாய்ந்த மயக்கமருந்தைப் பயன்படுத்துவாளோ, அவ்வாறே தன்னுடைய மனமாற்ற ரண சிகிச்சைக்கும், அவள் கடுமையான மயக்க மருந்து ஒன்றைச் செலுத்திக் கொள்ள வேண்டியிருந்தது. அந்த மயக்க மருந்து என்ன, தெரியுமா? வாழ்க்கை—இனி இப்பிறவியில் இல்லையெனக் கருதியிருந்த இல்லற வாழ்க்கை! அந்த மயக்கம் ஊட்டப்பட்டதும் அவள் மிக எளிதாக வேறு வீணாவாக மாறிவிட்டாள்!

ஆனால் அந்த மயக்க நிலையிலும் அவள் நிதானத்தை இழந்து விடவில்லை. கிட்டாத பெரு வாழ்வு கிட்ட வேண்டுமென்றபேராவலில் எதையும், யாரையும் பொருட்படுத்தாமல் திடீரென்று செயல்படத் தொடங்கி விடவில்லை. அமைதியுடன் மேலே எடுக்க வேண்டிய நடவடிக்கைகளை அலசி ஆராய்ந்தாள். எப்பொழுது மறுவாழ்வு பெறத் தீர்மானித்து விட்டாளோ, எப்பொழுது அந்த மறு வாழ்வு தரப் போகும் இன்ப-துன்பங்களைச் சமமாக ஏற்கத் துணிந்து விட்டாளோ, எப்பொழுது அந்த மறுவாழ்வு மூலம் விதவைச் சமூகத்துக்கு வழிகாட்டுவது என்ற உறுதி கொண்டு விட்டாளோ, அப்பொழுது அவள் முதல் முதலாகத் தன்னுடன் அந்த மறு வாழ்வில் இணையப் போகிறவரைத் தீர்மானிக்க வேண்டியிருந்தது; அப்படி இணையப் போகிறவர் அந்த இணைப்பின் விளைவாக ஏற்படும் இன்ப-துன்பங்களை இறுதி வரையில் பகிர்ந்து கொள்ளுவார் என்பதை உறுதி செய்துகொள்ள வேண்டியிருந்தது; வெறுமனே கடன் இழவுக்காக, தன்னைக் கட்டிக் கொண்டு விட்டதற்காக, அந்த இன்ப - துன்பங்களைப் பகிர்ந்து கொள்பவராக இல்லாமல், தான் விதவைச் சமூகத்துக்கு வழிகாட்டியாக விளங்கப் போவது போல், அவரும் அவரையொத்த இளைஞர்களுக்கு வழிகாட்டியாக விளங்குவார் என்பதைச் சந்தேகத்துக்கு இடமின்றித் தெரிந்து கொள்ள வேண்டியிருந்தது.

அதைத் தெரிந்துகொள்ளுவது, அத்தகைய நபரைக் கண்டுபிடிப்பது அவளுக்குச் சிரமமாக இருக்கவில்லை. அவளுடைய மனமாறுதலுக்கு வித்திட்ட இரண்டு இளைஞர்கள், விகாஸும்-சுந்தரமும் இந்த நினைவு எழுந்ததுமே அவள் மனக்கண் முன் வந்து நின்றனர்.

இப்பொழுது வீணாவுக்குப் புதிய பிரச்னை ஒன்று ஏற்பட்டது. அவர்கள் இருவருமே அவள் எதிர்பார்த்த தகுதிகளைப் பெற்றவர்கள்தாம். இளமை, எழில், அறிவு, துணிச்சல், தியாக மனப்பான்மை யெல்லாம் அவ்விருவரிடமும் கிட்டத்தட்டச் சரிசமமாக இருந்தன. அதை அவள் கடந்த இரண்டு மூன்று மாதப் பழக்கத்தில் நன்கு அறிந்து கொண்டிருந்தாள். எனவே, இவர்களில் யாரைத் தான் துணை சேர்த்துக் கொள்ளுவது? யாரோடு இணைந்து தனது சமூகப் போராட்டத்தைத் துவக்குவது?

இதர விஷயங்களை மளமளவென்று முடிவுறுத்தியதுபோல் இவ்விஷயத்தில் அவளால் ஒரு முடிவு காண முடியவில்லை. இருவருமே அவளுடைய மனத்துக்கு இனியவர்கள். இருவருமே அவள்மீது அன்பைச் சொரிந்து வருபவர்கள். இருவருமே அவளுக்காகத் தங்கள் உயிரை கொடுக்கத் தயங்காதவர்கள். ஆதலால் இவர்களில் யாரை அவள் தேர்ந்தெடுப்பது? யாரை ஏற்பது? யாரை ஒதுக்குவது?

இந்தச் சிலநாட்களாக அவள் இதைத் தான் தீவிரமாக ஆலோசித்து வந்தாள். தன் மனப் போராட்டத்தை வெளிக் காட்டிக் கொள்ளாமலே அவ்விருவருடனும் சமமாகப் பழகி வந்தாள். ஆனால் ஒன்று அவளுக்கு நிச்சயமாகத் தெரிந்தது. அது தவிர்க்க முடியாதது என்பதையும் அவள் உணர்ந்துகொண்டாள். அதாவது, இந்த இருவரில் எந்த ஒருவரைத் தேர்ந்தெடுத்தாலும் மற்றவர் மனம் புண்படும். அவருடைய வாழ்வு வருங்காலம் எல்லாம் ஒரே ஏமாற்றமாகப் போகும். ஏனென்றால் அவர்கள் இருவரும் தங்கள் இன்ப வாழ்வைத் தியாகம் செய்துவிட்டு, லட்சியத் தீயில் குதிக்கச் சித்தமாக இருந்தபோதிலும் அவர்களுடைய உள் மனத்தின் அடித்தளத்தில் தன்னோடு இணைசேர்ந்து அந்த வேள்வித் தீயில் குளித்தெழ வேண்டும் என்ற நினைவு இல்லாமல் இல்லை. அதைச் சுயநலம் என்பதானால் அந்த அளவுச் சுயநலம் அவ்விருவரிடமும் இருக்கிறது என்பதை அவள் அறிவாள்.

தான் மனமாற்றத்துக்கு உட்படாமல் முன்பு இருந்த வீணாவாகவே இருந்திருந்தால், பிரச்னையே இல்லை. அவர்கள் இன்னும் சில காலம் தன் மனம் மாறும் என்று காத்திருந்து பார்த்து விட்டுப் பிறகு தங்கள் போக்கில், தங்கள் லட்சியத்துக்கு ஏற்ற வேறொரு பெண்ணை இணையாகச் சேர்த்துக்கொண்டு தியாக வாழ்வில் ஈடுபட்டிருப்பார்கள். ஆனால் இப்பொழுது தன் மனம் மாறிவிட்டது. மீண்டும் பழைய வீணாவாகிவிட முடியாத அளவுக்கு அது உரம் பெற்று விட்டது. கைக்கு எட்டும்படியாக இருக்கும்

இருமலுக்கு வீட்டிலேயே குணம் அளிப்பது

*Alembic*

# க்ளைகோடின்
# டெர்ப் - வசாகா

குழந்தைகளும் இதை விரும்பிச் சாப்பிடுகிறார்கள்

அலெம்பிக் கெமிகல்
வர்க்ஸ் கம்பெனி லிமிடெட்,
பரோடா—3

Alembic
170 ml. (6 Fl. Ozs. approx.)
GLYCODIN
TERP VASAKA
TRADE MARK
COUGH SYRUP

GTV-59-9-C.TM

EVEREST

கவியை விட்டு விட்டுப் பிறகு கொட்டாவி விட்டுக் கொண்டிருக்க கூடாது என்ற தீர்மானம் வரையில் வந்தாயிற்று. ஆகையால், இனி அதிலிருந்தும் பின் வாங்க முடியாது.

அப்படியானால் இவ்விருவரில் யாரைத் தான் தேர்ந்தெடுப்பது? விகாஸும் சுந்தரமும் ஒரே சமயத்தில் தன் முன் நின்று, "என்னை ஏற்றுக்கொள், விஜு! என்னை ஏற்றுக்கொள், விஜு!" என்று இறைஞ்சுவது போலிருந்தது அவளுக்கு.

இப்படிப்பட்ட நீண்ட மனப் போராட்டத்துக்குப் பிறகு நேற்றிரவு தான் அவள் ஒரு முடிவுக்கு வந்தாள். விகாஸையே ஏற்றுக் கொள்ள வேண்டும்!

அவள் இந்த முடிவுக்கு வர முக்கிய காரணம் ஒன்று இருந்தது. எப்பொழுது புரட்சியில் இறங்கத் தீர்மானித்து விட்டாளோ, அப்பொழுது சமூகத்தின் ஏச்சுப் பேச்சுக்களை ஏற்பதுடன், தன்னையும் தன்னை மணக்கப் போகிறவரையும் சார்ந்தவர்களுக்கு பலத்த அதிர்ச்சியை அளிக்க வேண்டியிருக்கும்; அவர்களுடைய நீடித்த தூற்றல், நிரந்தர ஒதுக்கல் ஆகியவற்றைத் தாங்க வேண்டியிருக்கும் என்பதையும் அவள் உணர்ந்து தான் இருந்தாள். எப்படி, விகாஸ், சுந்தரம் இவ்விருவரில் ஒருவரை ஏற்பதன் மூலம் மற்றவருக்கு ஏற்படும் துன்பத்தையும் ஏமாற்றத்தையும் தவிர்க்க முடியாதோ, அவ்வாறு இவைகளையும் தவிர்க்க முடியாது என்றும் அவளுக்கு நன்றாகத் தெரியும்.

ஆனால் விகாஸை ஏற்பதன் மூலம், இந்த மூன்று தாக்குதல்களில் ஒன்றையேனும் தவிர்க்க முடியும். ஏனென்றால் அவன் ஏற்கெனவே புரட்சியில் ஈடுபட்டுப் பெற்றோரைத் துறந்து வந்திருப்பவன். மகன் தங்களைப் பிரிந்து ஏறக்குறைய ஓராண்டு ஆகியும் அவனைத் தேடும் முயற்சியில் இறங்காமல், கையைக் கழுவிவிட்ட நிலையிலேயே ரகுசந்திர மாமாவும் அஹல்யா மாமியும் இருக்கின்றனர். எனவே, அவனைத் தான் இனி சேர்த்துக் கொள்ளுவதால் அவர்களின் தாக்குதல் இராதென்று கருத இடம் இருக்கிறது. ஒருகால் இருந்தாலும் அது ஓரளவுக்குள்ளாகத்தான் இருக்கும். நிச்சயமாகச் சுந்தரத்தை ஏற்றுக் கொண்டால் புஷ்பவன மாமாவிடமிருந்தும் மரகத அத்தையிடமிருந்தும் எழும்பும் சுடுசரங்களின் வேகம் இதற்கு இருக்காது. கசப்பு மாத்திரையில் மூன்றை விழுங்கிப் போக்கிக் கொள்ள வேண்டிய நோயை, இரண்டே மாத்திரைகளில் குணப்படுத்திக் கொள்ள முடியுமென்றால் அதை நாடுவதே சிறந்ததல்லவா?

இந்த முடிவுடன்தான் அவன் விகாஸையே ஏற்றுக் கொள்ளுவது என்ற தீர்மானத்துக்கு வந்தாள்.

அந்தத் தீர்மானத்தை நிறைவேற்றுவதிலும் அவள் நிதானத்தையே கடைப்பிடிக்க விரும்பினாள். 'காலை பெற்றது; கயிறை எடு' என்ற கதையாக உடனடியாகத் தன் முடிவை அவனிடம் சிந்தி விடத் துடிக்கவில்லை. சமயம் வரும்; வாய்ப்பு ஏற்படும். எங்கேயாவது, ஏதாவது விஷயத்தில் விகாஸ் மீண்டும் தனது துடிப்பைக் காட்டுவான்; கோபத்தை இரைப்பான்; "எல்லாவற்றையும் சகித்துக் கொண்டு கல்லுப் பிள்ளையாராக இருக்கிறாயே, வீணு!" என்று சுந்தரத்தைப்போல் ஒருநாள் கொதிப்பான். அப்பொழுது, "இல்லை, இந்தக் கல்லுப் பிள்ளையார் உயிர் பெற்றுவிட்டது; உரம் பெற்று விட்டது" என்று தொடங்கித் தனது தீர்மானத்தை வெளியிட வேண்டுமென்று அவள் கருதியிருந்தாள்.

ஆனால் இது என்ன? தன் பிரச்னையில் வேறொரு பிரச்னை குறுக்கிட்டு விட்டது போல் காணப்படுகிறதே! ஒருகால் இந்தப் பெண் விகாஸுக்குக் கால் கட்டாக வந்து சேர்ந்திருப்பாளோ? அதனால்தான் அவனை ஒரு வாரமாக உறங்க விடாமற் செய்த பிரச்னை தோன்றியிருக்குமோ? இல்லை; இராது; அப்படியிருக்க முடியாது. ஒரு விதவையைத்தான் மணந்து கொள்ளுவேன் என்ற உறுதியுடன் பிறந்த மண்ணையும், பெற்று வளர்த்தவர்களையும் துறந்து வந்துள்ள அவன்.....?

வீணுவின் நினைவு முறிந்தது. விகாஸ் பேச ஆரம்பித்து விட்டான். "இவள் ஒரு விதவை, வீணு!" என்று ஆரம்பித்து வீணுவின் எண்ணத்தில் மண்ணை அள்ளிப் போட்டுவிட்டு மேலே தொடர்ந்தான்: "அதோடு எங்கள் மொழி பேசுபவள்; எங்கள் சாதி....."

வீணுவின் எண்ணத்தின் மீது மற்றோர் இடி விழுந்தது!

"போதாக் குறைக்கு...வீணு? என்ன வீணு? என்ன செய்கிறது உனக்கு?" அவள் தலையை அயர்வுடன் நாற்காலியில் சாய்த்ததைக் கண்டு பதறிக் கொண்டு எழுந்தான் விகாஸ்.

ஆனால் அதற்குள் வீணு தன்னைச் சமாளித்துக்கொண்டு விட்டாள். 'சீ! இது என்ன பேதைமை! இதைவிடப் பெரிய இடிகளைத் தாங்கச் சித்தமாகிவிட்ட நான் இந்த ஏமாற்றத்தை அறிந்து மருள்வதா?'

"ஒன்றுமில்லை, விகாஸ்! வெய்யிலில் நடந்து வந்தோமல்லவா? அந்த அயர்வு" என்றாள் அவள்.

"வேண்டுமானால் சிறிது நேரம் படுத்துக் கொள்ளுகிறாயா? பெண்களின் மென்மையை அறியாத மடையன் நான். உன்னை இந்த மண்டையைப் பிளக்கும் வெய்யிலில் நடத்திக் கூட்டி வந்தேனே!"

"வேண்டாம், விகாஸ்! அது கண நேர அயர்வுதான். இப்பொழுது சரியாகி விட்டது. மேலே சொல்."

விகாஸ் தன் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு தொடர்ந்தான்: "அவள் பெயர் ஸொப்னா. உண்மையிலேயே அவள் ஒரு கனவு மங்கைதான். கல்லூரியில் படித்து வந்தபோது ஓர் ஏழை மாணவன்மீது காதல் கொண்டு, பெற்றோரின் விருப்பத்துக்கு மாறாக அவனை மணந்தாள். அவனுக்குச் சென்னையில் ஒரு கம்பெனியில் வேலை கிடைத்தது. இருவரும் தமிழ் நாட்டுக்கு வந்து இனிது வாழ்ந்து கொண்டிருந்தார்கள்.

"ஆனால் ஏழெட்டு மாதங்களுக்கு முன் அவர்கள் வாழ்வில் விதி விளையாடி விட்டது. ஸொப்னாவின் கணவன் மாரடைப்பால் இறந்து விட்டான். அந்தப் பசுந் தளிர்க் கொடி வாடிய பைங்கொடியாகமாறி விட்டது. பெற்றோர் அவள் முகத்தையே காண வெறுத்தனர். கணவரைச் சார்ந்தவர்களும் யாரும் கிடையாது. சென்னையில் சில மாதங்கள் பிழைக்க வழியின்றித் திண்டாடி விட்டு, யாரோ சொன்னார்களென்று இங்கே அணை ஸ்தலத்தில் ஒரு கூலியாக வந்து சேர்ந்திருந்தாள். சென்னையில் சில ஆண்டுகள் வசித்ததால் நல்லவேளையாக அவளுக்குத் தமிழ் நன்கு தெரியும். அவளுடைய நடை, உடை, பாவனைகளெல்லாம் தமிழ்ப் பெண்ணைப் போல் இருந்ததால்தானே நீ அவளை முத்தம்மாள் என்று சந்தேகித்து விட்டாய்.



"நான் அவளைத் தற்செயலாக அணை ஸ்தலத்தில் சந்தித்தேன். அவளுடைய வாழ்க்கைக் கதையைக் கேட்டபோது என் உள்ளம் நெட்டுயிர்த்தது. இந்த வயதில் ஓர் இளம் பெண்ணுக்கு வயிறு நிரம்பினால் மட்டும் போதாது; வாழ்வும் நிரம்ப வேண்டும் என்று கருதும் நான் அவளைக் கட்டாயப்படுத்தி, அதற்காக என் வீட்டுக்கு அழைத்து வந்தேன்...."

வீணா அவனை இடைமறித்தாள்: "புரிந்தது, விகாஸ்! அவளை மணந்து கொள்ளலாமா என்று என்னிடம் ஆலோசனை கேட்கிறாய். அப்படித்தானே?"

"இரு வீணா, இரு; அவசரப்படாதே. நான்தான் சொல்லிக்கொண்டு வருகிறேனே! அவளுக்கு மணம் செய்து வைப்பதுதான் என்னுடைய நோக்கம். ஆனால் நான் அவளைக் கல்யாணம் செய்துகொள்ள முடியாது."

"ஏன் விகாஸ்?" வீணாவின் ஆயாசமெல்லாம் வெய்யிலைக் கண்ட பனிபோல் கரைந்து போயிற்று. 'இதோ விகாஸின் வாயிலிருந்து, கொதித்திருக்கும் என் உள்ளத்தைக் குளிர வைக்கும் வார்த்தைகள் வரப்போகின்றன! "ஏனென்றால் வீணா, என்னால் உன்னையன்றிப் பிறிதொரு பெண்ணை நினைக்க முடியவில்லை" என்ற அமுததாரை பொழியப் போகிறது' என அவள் ஆவலுடன், அவன் முகத்தைக்கூட இல்லை, வாயைக் கூர்ந்து நோக்கினாள்.

விகாஸின் இதழ்கள் பிரிந்தன; வார்த்தைகள் உதிர்ந்தன. ஆனால் அவை வீணா எதிர்பார்த்த சொற்களல்ல. "ஏனென்றால் வீணா, அவள் என் ஒன்று விட்ட தங்கை! ஜோதிஷ்நகரில் நான் தங்கிப் படித்து வந்தேனே, அந்த என் சித்தியின் இரண்டாவது மகள் ஸொப்னா!"

இருந்தாலும் இச் செய்தி வீணாவுக்கு முற்றிலும் ஏமாற்றம் அளித்துவிடவில்லை. அவள் எதிர்பார்த்தபடி அவன் அவளைக் காதலிப்பதாகக் கூறவில்லை யெனினும், அந்தப் பிரச்னையை அவன் முன் எழுப்பும் வாய்ப்பு அவளுக்கு அடியோடு இல்லாமற் போய்விடவில்லையல்லவா? எனவே, அவள் முன்போல் பரபரப்பு அடையாமல் பேசினாள்: "ஓ! அப்படியா? அதை முன்பே சொல்லாமல் என்னைக் குழப்பி விட்டாயே!"

"அதைச் சொல்லத்தான், 'போதாக் குறைக்கு......' என்று ஆரம்பித்தேன், வீணா. அதற்குள்ளாக நீ மயங்கி விட்டவன் போல் சாய்ந்து விட்டாய்; பேச்சுத் திசை திரும்பி விட்டது."

"சரி, அப்படியானால் உன் பிரச்னைதான் என்ன?"

"ஸொப்னா உன்னைப் போன்றவளாகவே இருக்கிறாள். அவளால் சமூக

நியதிக்குப் புறம்பாக எதையும் செய்ய முடியாதாம். நண்பர் சுந்தரம் சொல்வதுபோல், என்று உங்களுக்கு இந்தப் பைத்தியம் நீங்கித் துணிவு ஏற்படுகிறதோ, அன்றுவரை உங்கள் துன்பமும் ஒழியாது.''

வீணாவுக்குத் தன் மனமாற்றத்தைக் கூறச் சரியான வாய்ப்புக் கிடைத்து விட்டது. ''என்னைப் போல் என்று இனிச் சொல்லாதே, விகாஸ்! நான் மாறி விட்டேன். புரட்சி வாழ்வுக்குத் தயாராகி விட்டேன். அதற்கு என்னுடன் இணை சேரப் போகிறவர் யார், தெரியுமா? இந்த விகாஸ் சந்திரர் தான்!''

''வீணா!'' என்று வியப்புடன் கத்தினான் விகாஸ். ''ஐயோ! இது என்ன வீணா, இப்படித் தகாத வார்த்தைகளைப் பேசுகிறாய்!''

அவள் நகைத்தாள். ''ஒரு மாதத்துக்கு முந்தைய வீணாவுக்கு அவை தகாத வார்த்தைகளாகவே இருந்தன. ஆனால் இன்று இதோ உங்கள் முன் (அவளை அறியாமலே இந்தக் கௌரவப் பன்மை வந்துவிட்டது!) உட்கார்ந்திருக்கும் வீணாவுக்கு அல்ல. நான் துணிந்து விட்டேன், விகாஸ்!''

''உன் துணிவைப் பற்றிப் பேசவில்லை, வீணா. அதை நான் பாராட்டுகிறேன்; வரவேற்கிறேன். ஆனால் என்னை இணைசேர்த்துக் கொள்ள விரும்புவதாகச் சொன்னாயே, அது''

''அது...?'' அவள் குழப்பத்துடன் அவன் முகத்தை நோக்கினாள்.

''நீ எனக்கு மற்றொரு லொப்னா, வீணா! அன்றும், இன்றும், என்றும் உன்னை என் சகோதரியாகக் கருதியிருப்பவன் நான்!''

வீணாவுக்கு மீண்டும் ஓர் ஏமாற்றம். ஆனால் இது அவளுக்கு அதிர்ச்சியளிக்கவில்லை. கண் மூடியிட்ட குதிரையைப் போல் விகாஸின் போக்கை ஒரே நோக்குடன் கண்டு வந்ததால் விளைந்த தவறு இது. ''அப்படியானால்...?'' இந்தக் கேள்வி அவளுடைய நிதானத்தையும் மிஞ்சிக் கொண்டு உதட்டிலிருந்து துள்ளி விழுந்தது.

விகாஸ் ரத்தினச் சுருக்கமாகப் பதிலளித்தான். ''என் நண்பர் சுந்தரத்தின் கனவு பலித்தது!''

'ஆம், அவர் கனவு பலித்துத் தான் விட்டது!' என்றது வீணாவின் உள்ளம். இனி அவள் கசப்பான மாத்திரைகள் மூன்றையும் விழுங்கித் தான் தன் நோயைக் குணப்படுத்திக் கொள்ள வேண்டும்! (தொடரும்)




## என்ன துணிச்சல்!

''இந்த திராவகத்தில் இதோ என் ஒரு ரூபாய் நாணயத்தைப் போடுகிறேன். இது கரையுமா, கரையாதா சொல்லுங்கள்?''

''கரையாது சார்!''

''ஏன்?''

''அப்படிக் கரையுமானால் நீங்கள் துணிந்து உங்கள் சொந்த நாணயத்தைப் போடுவீர்களா?''

## பாட்டிகள் ஜாக்கிரதை

வீட்டில் செல்லக் குழந்தைகள் மோசமாக நடந்து கொள்வதற்குக் காரணம் அவர்களுடைய பாட்டிமார்களை அடிக்க முடியாமலிருப்பதுதான்.

## பொறுத்துப் பார்!

கோபம் வரும்போது சற்று யோசனை செய்ய வேண்டும். சற்று யோசித்தால் எதிராளியை வைவதற்குப் பொருத்தமான வார்த்தைகள் அகப்படும்.

## வியாக்கியானம்

வேலைக்காரி என்பதற்கு ஒரு வியாக்கியானம்:

''நீங்கள் சம்பளம் கொடுத்து வேலை செய்தால் அவள் வேலைக்காரி, உங்கள் சம்பளம் முழுவதையும் எடுத்துக் கொண்டு வேலை செய்தால் அவள் மனைவி.''

## ஆடாதே தம்பி......!

ஒரு மனிதன் சூதாட்டத்தைத் தன் வாழ்க்கையில் இரண்டு சந்தர்ப்பங்களில் ஆடக்கூடாது. ஒன்று தன்னிடம் பணம் இல்லாத போது. மற்றொன்று, இருக்கும் போது.

## வாங்க வாரீர்!

எங்கள் வீட்டிலிருந்து ஒரு வெள்ளி ஜாடியை யாரோ எடுத்துப் போய் விட்டார்கள். மூடிமட்டும் உபயோகமில்லாமல் இருக்கிறது. ஜாடியை எடுத்துப் போனவர் தயவு செய்து மூடியையும் வாங்கிச் செல்லவும். —ஒரு விளம்பரம்

## மொழிப்பிரச்னை

தமிழ்த் தம்பதிகள் தங்களுக்குக் குழந்தை இல்லை என்று, ஒரு வயது நிரம்பிய தெலுங்குக் குழந்தை ஒன்றை வளர்த்தார்கள். தம்பதிகள் தெலுங்கு வாத்தியார் வைத்துத் தெலுங்கு கற்றுக் கொண்டார்கள்...ஏனென்று கேட்டதில், 'குழந்தை பெரிதாக வளர்ந்ததும் அதனுடன் தெலுங்கில் பேசச் சௌகர்யமாக இருக்குமல்லவா?' என்றார்கள்.

# நீரிழிவு

## நோயாளிகளுக்கு

## இலவச ஆலோசனை



சிறு நீருடன் சர்க்கரை வெளியானால் அதற்கு டயாபெடிஸ் மெல்லிடஸ் (Diabetes Mellitus) என்றும் சர்க்கரை இன்றி அடிக்கடி சிறு நீர் கழித்தால் அதற்கு டயாபெடிஸ் இன்ஸிபிடஸ் (Diabetes Insipidus) என்றும் பெயர். இந்த வியாதியால் அவதியுறும் நோயாளிகள் அதிக தாகம், பசி, தேகமெலிவும் வலி, சரீர உழைப்பு அல்லது மன சிந்தனை வேலை ஆகியவற்றைச் செய்ய விருப்பமின்மை, நாளுக்கு நாள் எடை குறைதல், சொறி, சர்ம வியாதிகள், மந்தமான கல்லீரல், பல மற்ற மூத்திரக் காய்கள், முற்றும் பழுதுள்ள பாங்கிரியால் ஆகிய கஷ்டங்களுக்கு இலக்காவர். இந்த வியாதியைக் கவனிக்காவிட்டால் முடக்கு வாதம், சாவேஸ்வரம் தாங்க முடியாமை, ராஜப் பிளவை, தேகம் மற்றும் மன வலிமை குறைதல், தேக ஓய்ச்சல் அதிகக் களைப்பு மற்றும் பொதுவாக தேகத் திடமின்மை ஆகியவை ஏற்படக்கூடும். இஞ்செக்ஷன் ஏதுமின்றி, பட்டினி மற்றும் பத்தியமின்றி இந்த அபாயகரமான வியாதியை ஒழித்து, என்றென்றும் வாலிப வனப்புடனும் தேக திடத்துடனும் உழைப்பில் ஈடுபட, இலவச வைத்திய ஆலோசனைக்கு எமக்கு எழுதும்படி இந்த நோயினால் அவதியுறுபவர்கள் வேண்டப்படுகின்றனர். காலம் கடக்கு முன் உடனே தயவு செய்து எழுதவும்.



**வீனஸ் ரிசர்ச் லாபரடரி (K. M.)**

**தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா**



# வேலூர் ஜலகண்டேஸ்வரர்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

பாண்டிய மன்னனின் அமைச்சராய் அமைந்த வாதவூரர் மன்னவன் படைக்குக் குதிரைகள் வாங்கத் திருப்பெருந்துறை செல்கிறார். அங்கு குருந்த மரத்தடியில், இறைவன் தன் சீடர்களுடன் எழுந்தருளியிருப்பதைக் கண்டதும் வந்த காரியத்தை மறந்து அங்கேயே உட்கார்ந்து விடுகிறார். கொண்டு வந்த பணத்தை எல்லாம் திருக்கோயில் கட்டுவதிலே செலவு செய்கிறார். மன்னன் விடுத்த ஏவலாளர் வந்து வாதவூரரை அழைத்துச் செல்ல, இறைவன் அவருக்காக நரிகளைப் பரிகளாக்கிக் கொணர்கிறார். பின்னர் பரிகளையே நரிகளாக்கிப் பெரிய 'கலாட்டா' செய்கிறார். வாதவூரர் இதனால் எல்லாம் துயர் உற்றபோது அவருக்காக மண்சுமந்து பாண்டியனிடம் பிரம்படி படுகிறார். இத்தனை அனுபவமும் பெற்றபின் வாதவூரர் திருவாசகம் பாடுகிறார். **மணிவாசகர்** எனப் புகழ் பெறுகிறார். அவர் வாழ்க்கையில் நடந்த இத்தனை காரியங்களும் அரிய அற்புதங்கள் தானே. வாழ்க்கைக் கடலில் சிக்குண்டு கலங்கிய தன்னை இறைவன் ஆட்கொண்டு அற்புதங்கள் நிகழ்த்தியதை எல்லாம் நினைக்கிறார்; பாடுகிறார்:

வணங்கும் இப்பிறப்பு இறப்பு இவை
  நினையாது, மங்கையர் தம்மோடும்
பிணைந்து, வாயிதழ்ப் பெரு வெள்ளத்து
  அழுந்தி நான், பித்தனாய்த்திரிவேனை
குணங்களும் குறிகளும் இலாக்
  குணக்கடல் கோமளத் தொடும்கூடி
அணைந்து வந்து எனை ஆண்டுகொண்டு
  அருளிய அற்புதம் அறியேனே.

என்றே வியக்கிறார் மணிவாசகர். இந்தப் பாட்டைப் பாடிக்கொண்டே வேலூர் சென்ற எனக்கு, இன்னும் என்ன என்னவோ அதிசயங்கள் அங்கே காத்துக் கிடந்தன. நீர் இல்லாத ஆறும், மரங்களே இல்லாத மலையும் கோமகன் இல்லாத கோட்டையும், அதிகாரம் இல்லாத போலீசும் (இன்னும் மற்றவற்றையும் சொன்னால் வேலூர் மக்கள் கோபித்துக் கொள்வார்களே) என்று அதிசயங்களை அடுக்கிக்கொண்டே போவார்கள் அங்கு இருப்பவர்கள். இத்தனை அதிசயங்களையும் தூக்கி அடிக்கும் வகையில், அங்குள்ள கோட்டைக்குள்ளே கோயில் உண்டு. ஆனால் மூர்த்தி இல்லை. தமிழ் நாட்டில் எத்தனையோ கோயில்கள் இடிந்து பழுதுற்றுக் கிடக்கின்றனதான், என்றாலும் அந்த இடிந்த கோயில்களுக்கு உள்ளே கூட ஒரு மூர்த்தி நின்று கொண்டிருப்பார், பூசை புனஸ்காரம் இல்லாமல். ஆனால் **மூர்த்தி இல்லாக் கீர்த்தியை** உடைய கோயில் இந்த வேலூர் ஜலகண்டேஸ்வரர் கோயில் ஒன்றுதான்.

**ஜலகண்டேஸ்வரர்** ஜாதகம் நிறையக் கண்டங்கள் நிறைந்த ஜாதகம். ஏரிக்கு நடுவிலே ஒரு தீவு. அந்தத் தீவிலே ஒரு புற்று. அந்தப்புற்றிடத்திலே ஒரு சிவலிங்கம். அந்தச் சிவலிங்கத்தைச் சுற்றி ஒரு ஐந்து தலை நாகம். அந்த நாகத்திற்குப் பாலூட்டுகிறது ஒரு பசு. இதையெல்லாம் அறிந்த அந்த நாட்டு மன்னர் **பொம்மி ரெட்டி** புற்றினை அகற்றி, புற்றிடம் கொண்ட பெருமானுக்கு ஒரு கோயில் கட்ட முனைகிறார். கோயில் கட்ட அடிகோலியது, சாலிவாகன சகாப்தம், கலிய வருஷம் (கி.பி. 1274) பங்குனி மாதம் பத்தொன்பதாம் தேதி. வடநாட்டுச் சிற்பி பத்ரிகாசி இமாம் கோயில் கட்டும்பணியில் ஈடுபடுகிறான். கட்டி முடிய ஒன்பது வருஷங்கள் ஆகின்றன. ஜலகண்டேஸ்வரர் (ஆம், கண்டம்வரை ஜலத்துக்குள்ளேயே இருந்த மூர்த்தி அல்லவா?) அகிலாண்டேஸ்வரி பிரதிஷ்டையும் நடக்கிறது சிறப்பாக. ஆனால், கோயில் கட்ட அடிகோலிய நாள் நல்ல நாள் இல்லை என்று கண்டு சொல்லச் சிற்பி மகன் சிற்பியே வரவேண்டியிருக்கிறது பின்னால். அதனால் மனங்கலன்ற மன்னன் கோயிலைக் காப்பாற்ற கோயிலைச் சுற்றியே ஒரு நல்ல அழகிய மதிலையும் கட்டுகிறான். இதனால் கோயிலைக் காப்பாற்ற முடிந்ததே ஒழிய மன்னனுக்கு, கோயிலில் உள்ள மூர்த்தியை நிலை நிறுத்த முடியவில்லை. பொம்மி ரெட்டிக்குப் பின்னால் தெங்கனிக் கோட்டை **வேங்கட தேவ மகா ராயலு** வேலூர் வட்டத்தை ஆளுபவனாக அமைகிறான். அவன் சந்ததியினர் பத்துப்பேர் இந்த ராயவேலூரில் இருந்து அரசாண்டிருக்கிறார்கள்.

பதினேழாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வேலூரைப் பீஜப்பூர் சுல்தான்கள் கைப்பற்றி இருக்கின்றனர். கான்கானும், அவனுடைய மகன் மகம்மதுகானும் ஆண்டு வந்த காலத்தில் கோயிலுக்குப் பழுது நேரவில்லை. ஆனால் முகம்மது கானுக்குப் பின் வந்த அப்துல்லாவிடம், யாரோ மூர்த்தியின் பீடத்தின்கீழ் உயர்ந்த ரத்தினங்கள் இருப்பதாகச் சொல்லி விருக்கிறார். பிடித்தது சனி ஜலகண்டேஸ்வரரை. அவர் பீடத்திலிருந்து அகற்றப்பட்டிருக்கிறார்; அகழியில் எறியப்பட்டிருக்கிறார். பீஜப்பூர் சுல்தானின் ஆட்சிக் காலம் அதிக காலம் நீடிக்கவில்லை. மராத்திய



வேலூர் கோட்டையும் அகழியும்

மன்னர் ஆதிக்கம் பெற்றபோது 1676ல் துக்கோஜி ராவ் வேலூர் கோட்டையை முற்றுகையிட்டு வெற்றி பெற்றிருக்கிறார். கோட்டையைக் கைப்பற்றியவர்கள் ஜலகண்டேஸ்வரரை அகழியில் இருந்து எடுத்துத் திரும்பவும் பிரதிஷ்டை செய்து பூஜையை எல்லாம் ஆரம்பித்திருக்கிறார்கள். ஆனால் ஜலகண்டேஸ்வரர் தான் கண்டங்களுக்கு உட்படுபவர் ஆயிற்றே. ஆதலால் இரண்டு வருஷம் கழியுமுன்பே சுல்தான்கள் திரும்பவும் படை எடுத்து மராத்திய மன்னன் துக்கோஜியின் குமாரன் சிங்கோஜியை வெற்றி கண்டு கோட்டையைக் கைப்பற்றி இருக்கிறார்கள். அவ்வளவுதான் ஜலகண்டேஸ்வரரது அபிஷேக ஆராதனைகள் நின்றிருக்கின்றன. இப்படியே அன்ன ஆகாரம் இல்லாமல், அபிஷேக அலங்காரம் இல்லாமல் இருந்திருக்கிறார் இருபத்து ஒரு வருஷம்.

இப்படி உபவாசம் இருந்த போதும் அவர் சும்மா இருக்கவில்லை. பழையபடி மராத்திய மன்னர்களை அழைத்திருக்கிறார். மராத்திய மன்னர் ஸ்ரீனிவாச ராவ் கோட்டையை முற்றுகை இட்டுக் கோயிலைக் கைப்பற்றி இருக்கிறார். இவரும் இவர் மகன் ராமராவும் ஆண்ட முப்பது வருஷகாலம் ஜலகண்டேஸ்வரருக்கு யோக ஜாதகம். அதன்பின்தான் தகராறு. 1708ல் தாவூத்கான் மராத்தியர்களைத் திரும்பவும் முறி அடித்து வேலூரைக் கைப்பற்றி இருக்கிறார். ஆர்க்காட்டு நவாபுகளான சதாதுல்லாகான், குலாம் அலிகான், பாக்கர் அலி முதலியவர்களின் ஆட்சிக் காலத்திலும் பூஜை நிற்கவில்லை. என்றாலும் அப்போது இருந்த மகம்மதிய அரசிளங்குமாரன் அழகில் சிறந்த உருத்திரகணிகை ஒருத்தியை விரும்பி அவளைக் கோயில் பிராகாரத்திலேயே சந்தித்துப் பலாத்காரம் பண்ணியிருக்கிறான். அழகியாக இருந்த ஆரணங்கு நல்ல வீரமகளாகவும் இருந்திருக்கிறாள். அரச குமாரனது உடைவாளையே உருவி அவன் நெஞ்சில் பாய்ச்சி இருக்கிறாள். தன்னையுமே மாய்த்துக் கொண்டிருக்கிறாள். அன்று இந்தப் பிராகாரத்தில் படிந்த ரத்தக் கறையை, முழுக்க முழுக்க ஜலத்துக்குள்ளேயே இருந்த ஜலகண்டேஸ்வரராலும் கழுவித் துடைக்க முடியவில்லை. அந்த அவமானம் தாங்க மாட்டாமலோ என்னவோ, அன்று கோயிலை விட்டு ஓடியவர்தான் இன்னும் திரும்பவில்லை. வேலூருக்குப் பக்கத்திலே உள்ள சின்னஞ் சிறிய ஊரான **சத்துவாச்சேரியிலே**, கோயிலுக்கே வர மாட்டேன் என்று சத்தியாக்கிரகமே செய்து கொண்டிருக்கிறார் இன்னும்.

இதுவரை சொன்னதில் எவ்வளவு கர்ண பரம்பரை, எவ்வளவு சரித்திர உண்மை என்று அறுதி இட்டு உரைக்க முடியாது. கோயில், கோட்டைக்குள் இருப்பது நிதரிசனம். கோயிலுக்குள் மூர்த்தி இல்லை என்பதும் கண்கூடு. யார் காலத்தில் யாரால் வெளியேற்றப்பட்டார் என்பதற்குப் போதிய சரித்திரச் சான்றுகள் கிடைக்கவில்லை. சுமார் இருநூறு வருஷங்களாக, ஆங்கிலேயர் ஆட்சி நடந்த காலம் முழுவதும், அதற்கு முன்னும் பின்னும் கோயிலுக்குள் மூர்த்தி இருக்கவில்லை என்பதுமட்டும் பிரசித்தமாயிருக்கிறது. இந்த மூர்த்தியைத் திரும்பவும் கோயிலுக்குள் எழுந்தருளப்பண்ண எவ்வளவோ முயற்சிகள். வேலூரில் உத்தியோகம் ஏற்றிருந்த பொழுது என்னால் இயன்றதை எல்லாம் நானும் செய்தேன். திரு. ராதாகிருஷ்ணன், திரு ஹுமாயூன் கபீர் முதலியவர்களை எல்லாம் அழைத்தேன். கோயிலைக் காட்டினேன். ஜலகண்டேஸ்வரருக்கு 'வக்காலத்து' வாங்கிப் பேசினேன். பலன்தான் இல்லை. நாளும் கிழமையும் வரவேண்டாமா? ஜலகண்டேஸ்வரரே மனம் வைக்க வேண்டாமா!

கண்டத்தில் விடமும், கையினில்
மழுவும், காதினில்
துலங்கும் நாக
குண்டலத்து அழகும், தலையில்
வெண்மதியும், குரைகழல்
சிலம்பும், நன்னுதலில்
புண்டரத்து அழகும், பொருப்பன
மார்பில் புனைநல
மாலையின் சிறப்பும்
கண்டு அகமகிழ்ந்து களிக்கும் நாள்
உளதோ? கருணைசேர்
ஜலகண் டேஸ்வரனே

என்று பாடுகிறார் இன்றைய கவிஞர் ஒருவர். அதுவேதான் வேலூர் வாசிகளின் பிரார்த்தனை. ஏன், தமிழ்மக்கள் பிரார்த்தனையும் அதுதானே.

வேலூர் ஜலகண்டேஸ்வரர் கோயில் மிகவும் அழகான கோயில். கோயில், கோயிலைச் சுற்றியிருக்கும் கோட்டை, கோட்டையைச் சுற்றியிருக்கும் அகழி எல்லாம் விஸ்தாரமாக அமைந்தவை. கோயில் வாச

லில், ராஜ கோபுரத்துக்கும் வெளியே நிற்கிறார்கள் துவார பாலகர்கள் இருவர். ராஜ கோபுரத்தைக் கடந்து உள்ளே சென்றால் பெரிய வெளிப் பிராகாரம். அந்தப் பிராகாரத்திலே, தென்பகுதியிலே உலகப் பிரசித்தி பெற்ற **கல்யாண மண்டபம்.** மண்டபம் முழுவதும் ஒரே சிற்பச் செல்வம். மண்டபத்தின் முகப்பிலே ஆறு பெரிய கல் தூண்கள். ஒவ்வொரு தூணிலும் குதிரை மீது வரும் வீரர்கள் சிறுத்தை வேட்டையாடும் காட்சி. தூண்களுக்கு மேலே தவழ்ந்துதாழும் போதிகை. மண்டபத்திலே அடுக்கடுக்காக நாற்பது தூண்கள். பெரிய தூண்கள் இருபத்தி நான்கு. உயர்ந்திருக்கும் உள் மண்டபத்திலே பதினாறு தூண்கள். ஒவ்வொரு தூணிலும் மூன்று தளங்கள், தளம் ஒன்றுக்கு நான்கு பட்டைகள் அப்படித் தூண் ஒன்றுக்கு பன்னிரண்டு சிற்பங்கள். கணக்குப் போட்டுத் தான் பாருங்களேன். நானூறுக்கு மேற்பட்ட சிற்ப வடிவங்கள் அல்லவா? மூஞ்சூறு வாகனப் பிள்ளையாரும், மயிலேறும் கோலக் குமரனும் பல நிலைகளில், ஊர்த்துவ தாண்டவர், பிக்ஷாடனர், கஜசம்ஹாரர், திரிபுராந்தகர், தக்ஷிணாமூர்த்தி என்று எண்ணரிய திருக்கோலங்களில் சிவபிரான், விஷ்ணுவின் அவதாரத் திரு உருவங்கள், கண்ணன் லீலைக் காட்சிகள் எண்ணற்ற பெண்கள் எழில் நிறைந்த வண்ணங்களில் எல்லாம் அங்கே உருப் பெற்றிருக்கிறார்கள். தூண்களை விட்டு விதானத்தை நோக்கினால் விரிந்த தாமரை மலர்கள், அந்த மலர்களின் இதழ்களைக் கொத்திக் கொண்டிருக்கும் கிளிகள் - எல்லாம் கல்லிலே உருவாயிருக்கின்றன.



கல்யாண மண்டபம்

பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே ஆங்கிலேயர்கள் ஒருவனும் இக்கலைப் பொருள்களைக் கண்டு கழிபேருவகை எய்தி இருக்கிறான். இந்த மண்டபத்தையும், மண்டபத்தில் உள்ள சிற்பச் செல்வம் அத்தனையையும் அப்படியே பெயர்த்து எடுத்து, ஆங்கில நாட்டுக்கு அனுப்பி, அங்கே **பிரைட்டன்** என்னும் பட்டணத்திலே ஒரு கலைக் கூடத்தையே நிர்மாணித்துவிட முனைந்திருக்கிறான். மண்டபத்திலே உள்ள கற்கள், அக் கற்களைத் தாங்கும் தூண்கள் அத்தனைக்கும் நம்பர் போட்டு, பெயர்த்து எடுத்து, கப்பலில் ஏற்றி எடுத்துச் சென்று பிரைட்டன் நகரிலே திரும்பவும் மண்டபத்தை ஒன்றித்து விடுவது என்பது அவனது திட்டம். அதற்கென்று ஒரு பெரிய கப்பலையே கொண்டுவரச் செய்திருக்கிறான் லண்டனில் இருந்து. ஆனால் ஜலகண்டேஸ்வரர், எவ்வளவுதான் அந்தர்யாமியாக இருந்தாலும், தனக்கும் தன் துணைவி அகிலாண்டேஸ்வரிக்கும் திருமணம் நடத்த பொம்மி ரெட்டி கட்டிய கல்யாண மண்டபத்தை இழந்துவிட விரும்பவில்லை. என்ன பண்ணினாரோ, ஆலத்திலேயே ஒரு கண்டம் கப்பலுக்கு நேரும்படி செய்திருக்கிறார். கடலில் மிதந்த கப்பல் மூழ்கி இருக்கிறது. மண்டபம் பெயர்வது தடைப்பட்டிருக்கிறது. தமிழ் மக்கள் பண்ணிய புண்ணியவசமாக. எவ்வளவோ ஜாதகக் கோளாறு உடையதுதான் இந்தக் கோயில் என்றாலும், இங்கேயே நிலைத்து நிற்கிறது மண்டபம்.

கல்யாண மண்டபத்தைப் பார்த்த பின் வேறு ஒன்றையுமே பார்க்கத் தோன்றாது நமக்கு. பார்க்க வேண்டியதும் அதிகம் இல்லைதான். என்றாலும் கோயிலின் உட்பிராகாரத்துக்கும் செல்லலாம். ஜலகண்டேஸ்வரரும் அவரது துணைவி அகிலாண்டேஸ்வரியும் கோயில் கொண்டிருந்த (ஆனால் அந்தச் சுவடே இல்லாமல் காலியாய் வெற்றிடமாய் இருக்கும்) கர்ப்பக்கிருஹத்தை எல்லாம் பார்க்கலாம். கர்ப்பக்கிருஹத்தின் வெளியே உள்ள ஒரு மண்டபத்திலே ஒரு சுரங்கப் பாதை. அந்தப் பாதை விரிஞ்சிபுரம் வரை செல்கிறது என்று சொல்வார்கள் மக்கள். ஆனால் அப்படிச் சென்று பார்த்தவர்கள் ஒருவரும் இல்லை. அதைப்பற்றி நாமும் அதிக அக்கறை காட்ட வேண்டியதில்லைதான்.

தமிழ்நாட்டில் உள்ள கோட்டைகளில் எல்லாம் மிகவும் அழகுடையது **வேலூர்க் கோட்டைதான்.** செஞ்சிக் கோட்டை அளவிலும், உறுதியிலும் உயர்ந்ததுதான். ஆனால் இக் கோட்டையில் உள்ள அழகு அங்கு இல்லை. கோட்டைச் சதுர வடிவமானது. கோட்டை மதிலில் இரண்டு அடுக்குகள். கீழ்த்தளத்தில் அர்த்தசந்திர வளைவுகள். கோட்டைச் சுவரின் மேல் தளத்திலே ஒரு கார் செல்லக்கூடிய அளவுக்கு வீதி. கோட்டையைச் சுற்றி அகழி. கோட்டைக்குள்ளே வட ஆர்க்காடு மாவட்டத் தலைமைக் காரியாலயங்கள். அங்கேயே போலீசார் பயிற்சிப் பள்ளி. இவைகளைத் தவிர, கோட்டைக்குள்ளேயே ஒரு மசூதி, ஒரு கிறிஸ்துவக் கோயில் எல்லாம். எம்மதமும் சம்மதம் என்ற சமரச சன்மார்க்கத்தையே அல்லவா பறை சாற்றுகிறது இக் கோட்டை. கோட்டையைப் பார்ப்பதற்காகவே வேலூருக்குப் போகலாம் ஒரு தடை. அங்கு நடந்த சிப்பாய் கலகம்-**வேலூர் புரட்சி** இயக்கம் இவைகளையும் தெரிந்து கொள்ளலாம் கோட்டைக்குள் சென்றால். கோட்டைமீது வானளாவிப் பறக்கும் நாட்டுக் கொடிக்கு வணக்கம் செலுத்தி விட்டுத் திரும்பலாம்.

# பழமைக் கொள்கைகள் மேலான வாழ்க்கைக்கு இடையூறாக இருக்கின்றனவா?



இக்காலத்து மனிதர்கள் என்று தற்பெருமை பேசும் பலர் உண்மையில் பழமைக் கொள்கைகளையும் தப்பெண்ணங்களையும் விடாப் பிடியாகப் பிடித்துக்கொண்டு வாழ்க்கையை மேம்படுத்த தங்களுக்குக் கிடைக்கும் சந்தர்ப்பங்களை மறுத்துக்கொள்கிறார்கள்.

சமையல் கொழுப்பு விஷயத்தையே உதாரணமாக எடுத்துக் கொள்ளுங்களேன். எவ்வளவோ பேர்கள் சொல்லுகிறார்கள்: "வனஸ்பதியால் சமைத்த சாப்பாட்டை நான் தொடுவதே கிடையாது. செயற்கையாகத் தயாரிக்கப்பட்ட கொழுப்பல்லவா அது! இயற்கையான கொழுப்புக்கு ஈடாகுமா?". ஆனால் உண்மை என்னவென்றால் வனஸ்பதியைப் பொறுத்த வரையில் இயற்கைக்கு மாறாக எதுவுமே கிடையாது. உற்பத்தி செய்கையில் மேற்கொள்ளும் கறாரான கட்டுப்பாட்டை வேண்டுமானால் குறையாகச் சொல்லலாம்!

**உற்பத்தியின்போது கறாரான கட்டுப்பாடு**

வனஸ்பதி தூய்மையான தாவரக் கொழுப்பு. அது வேர்க்கடலை எண்ணெய் மற்றும் நல்லெண்ணெயை சுத்தப்படுத்தி தயாரிக்கப்படுகிறது. மிகுந்த கண்காணிப்பின் கீழ் கடுமையான நிபந்தனைகளுக்குட்பட்டு சுகாதார சுத்தமான நவீன தொழிற்சாலைகளிலே அது தயாரிக்கப்படுகிறது. வனஸ்பதி மிகவும் சுத்தமானது மட்டுமல்லாமல் எளிதில் ஜீரணிக்கக்கூடியதாயிருக்கிறது. அது சகல சமையலுக்கும் சாலச் சிறந்தது. ஏனெனில் அது உணவுப் பொருள்களின் சுவையை பரிமளிக்கச் செய்கிறது. மேலும், வனஸ்பதியின் ஒவ்வொரு அவுன்ஸும் பூர்ண போஷாக்கு வாய்ந்ததாயிருப்பதால் அதை வாங்குவதிலும் உபயோகிப்பதிலும் சிக்கனமேற்படுகிறது.

**ஆரோக்கியமான வாழ்வுக்கு அவசியமானது**

நிரந்தரமாகவும் ஆரோக்கியத்துடனும் இருக்க ஒவ்வொருவருக்கும் சராசரி நாளொன்றுக்கு குறைந்தது இரண்டு அவுன்ஸாவது கொழுப்புச் சத்து தேவைப்படுகிறது என்பது விஞ்ஞானிகள் நிரூபித்துள்ள உண்மை. இந்த அளவு கொழுப்புச் சத்தை தூய்மையாகவும், சிக்கனமாகவும், சுவைக்கூட்டுவதாகவும் வனஸ்பதி அளிக்கிறது. ஆரோக்கியம் நிறைந்த, வாழ்வு வளம்பெற நீங்களும் இன்றுமுதல் வனஸ்பதியை உபயோகிக்கத் தொடங்கலாமே!

**வனஸ்பதி — இல்லாளுக்கு வரப்பிரசாதம்**

தி வனஸ்பதி மான்யுபாக்சரேர்ஸ் அஸோஸியேஷன் ஆப் இந்தியா
ஸ்தாபனத்தினால் வெளியிடப்பட்டது

# கலைக் களஞ்சியம்

பெ. நா. அப்புஸ்வாமி

சென்னையில் நிறுவப்பட்ட தமிழ் வளர்ச்சிக் கழகம் பல வகையான தமிழ்ப் பணிகளில் ஈடுபட்டிருப்பது பலரும் அறிந்ததே. இக்காலத்திய புதிய கருத்துக்கள் உட்பட, எல்லா வகையான கருத்துக்களையும் நன்கு வெளியிடக் கூடிய மொழியாகத் தமிழை ஆக்குவிப்பதும், சிறந்த நூல்களைத் தமிழில் வெளியிடுவோர்க்குப் பரிசு அளித்து ஊக்குவிப்பதும், அது செய்துவரும் பணிகளில் சில. இவற்றைக் காட்டிலும் மேலான பணியாகக் கருதத் தகுவது கலைக் களஞ்சியம் ஒன்றைத் தமிழில் இயற்றி அமைத்துச் சிறந்த முறையில் வெளியிட அது முன் வந்திருப்பதேயாகும்.

## அறிவுத் தொகுதி

அறிவு என்பதே அழகு. அதுவே ஆற்றல், அதுவே மருந்தும், அதுவே எல்லாச் செல்வங்களும். இந்த உண்மையை எல்லா நாடுகளிலும், எல்லா மொழிகளிலும் அறிஞர்கள் வற்புறுத்தி வந்திருக்கிறார்கள். தமிழில் கவிதைத் திரட்டுகள், பழையவையும் புதியவையுமாக, பல உள்ளன. தோத்திரப் பாடல் திரட்டுகளும் அவ்வாறே. அறிவைத் திரட்டும் முயற்சி தமிழுக்குப் புதிது அன்று; எனினும், அம்முயற்சிகள் பலவாக இல்லை. இக் காலத்திலே, பொங்கி வரும் கடல் போல, அறிவு பெருகி வருகிறது. அந்த அறிவைத் திரட்டித் தமிழில் வெளியிடுவதே இந்தக் கலைக்களஞ்சிய முயற்சி. இது மிக விரிவானது, காலத்தை ஒட்டியது, அளவிறந்த நன்மை பயப்பது, பலருக்கும் உதவுவது, தமிழை வளர்ப்பது.

## ஆர்வமும் விடாமுயற்சியும்

பெரு முயற்சிகள் பல தொடக்கத்தில் ஆர்வத்தோடு தொடங்கப்படுவதும், நாளடைவில் அவற்றில் கருத்துக் குறைந்து, சோர்வு மிகுந்து, இடையூறுகள் குறுக்கிட, அவை தடைப்பட்டு நின்று போவதும், நம் நாட்டில் நாம் பல முறை வருத்தத்தோடு காணும் காட்சி. ஆனால், இந்தப் பெரு முயற்சிக்கு 'விலைவாசி ஏற்றம், காகிதப் பஞ்சம், ஊழியர்களின் உடல் நலக் குறைவு, இன்னும் பல தொந்தரவுகள்' ஆகியவை இடையூறாகத் தோன்றிய போதிலும், திரு. தி. சு. அவிநாசிலிங்கம் அவர்களைத் தலைவராகவும், திரு. ம. ப. பெரியசாமித் தூரனை ஆசிரியராகவும் கொண்ட கலைக்களஞ்சியக் குழுவினர் சோர்வுபடாமல், பெரிய பொறுப்பை முறையாக நடத்தி வருகின்றனர்.

## இதில் அடங்கியவை

இந்த நூலின் ஆறும் தொகுதி 'திருகணு' என்னும் சொல்லோடு தொடங்கிப் 'பரீட்சை' என்னும் சொல்லோடு முடிவடைகிறது. இதில் மொத்தம் 1285 தலைப்புக்கள் உள்ளன. அவற்றுள் எத்தனையோ வகையான பொருள்களைப் பற்றிய கட்டுரைகளை 243 அறிஞர்கள் எழுதியிருக்கிறார்கள். பற்பல வகையான இலக்கியக் கட்டுரைகளும், நூற்றுக்கணக்கான துறைகளாகக் கிளைத்துப் பெருகிய விஞ்ஞானக் கட்டுரைகளும், பல்வேறு விதமான கலைகளைப் பற்றிய கட்டுரைகளும், இதில் இடம் பெறுகின்றன. இதில் மொத்தம் 850 படங்களுக்கு மேல் இருக்கின்றன. அவற்றுள் சில மூவண்ணப் படங்கள்; ஒரு சில ஒற்றை வண்ணப் படங்கள்; வேறு பல விளக்கப் படங்கள். நீர் வண்ண ஓவியம், நெய் வண்ண ஓவியம், தஞ்சாவூர்க் கண்ணாடி ஓவியம், காங்கிரா ஓவியம், சீன ஓவியம், ஆகியவை உட்படப் பல ஓவியப் படங்கள் இதை அழகு படுத்துகின்றன. ஆகவே, கலைக் களஞ்சியமான இந் நூல் அறிவுக் களஞ்சியமாகவும், சித்திரக் களஞ்சியமாகவும் ஒருங்கே விளங்குகிறது.

## திருவின் நிறைவு

'திரு' என்று தொடங்கும் அழகிய பெயருடைய—பெயருக்கு ஏற்ற அழகும் உடைய—எத்தனையோ திருப்பதிகளின் செய்திகளை இதன் தொடக்கத்தில் காண்கிறோம். இந்தத் 'திரு' பகுதியைப் பார்க்கும்போது, எத்தனை வகைக் கோபுரங்கள் நம் நாட்டில் கட்டப்பட்டிருக்கின்றன என்பதைக் கண்டு நாம் வியக்காமல் இருக்க முடியாது.

இவற்றின் இடையே திருவள்ளுவரையும், திருமூலரையும், திருநாவுக்கரசரையும், வேறு சில நாயன்மார்களையும், ஆழ்வார்களையும், திருப்புகழையும், திருமந்திரத்தையும், திருஅருட்பாவையும், திவ்வியப் பிரபந்தத்தையும், திருவாய்மொழியையும், திருமலை நாயக்கரையும் காண்கிறோம். இவற்றின் நடுவே திருப்பு-மேடையும் (turn table) வந்து சுழல்கிறது. இன்னும் வேறிடங்களில் தொல்காப்பியம், பத்துப்பாட்டு, நாட்டியம், நாடகம், நாவல், நிழலாட்டம் முதலியவற்றைப் பற்றிய கட்டுரைகள் காணப்படுகின்றன. தமிழ் எழுத்தின் வளர்ச்சியைப் பற்றிய கட்டுரைகள் அவ் அவ் எழுத்தின் கீழே, படங்களோடு கொடுக்கப் பட்டிருக்கின்

றன. அவற்றிலிருந்து தமிழ் எழுத்துக்களின் பரிணாமம் (evolution) ஓரளவு தெளிவாகத் தெரிகிறது.

தாவர இயலிலே தென்னை, தேக்கு, தேயிலை, நிலக்கரி நீர்த் தாவரங்கள் முதலிய கட்டுரைகளைக் காண்கிறோம். உயிரியல் துறையிலே தேனீ, பட்டுப்பூச்சி, நீர் நிலம் வாழ்வன முதலியவற்றையும் நமது நாட்டிலே இயற்கையிலே காணப்படாத நீர்யானை, நீர்க்குதிரை முதலிய விசித்திரப் பிராணிகளையும் பற்றிய கட்டுரைகள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. நீர்யானை (tapir) "குதிரைக்கும் காண்டாமிருகத்துக்கும் நெருங்கிய உறவினது. இதன் மூக்கும், மேலுதடும் சேர்ந்து குட்டையான சிறு துதிக்கையாக நீண்டு இருக்கும். ஆதலால் இதற்கு ஓரளவில் இப்பெயர் பொருத்தமானது. ஆனால், நீர்க்குதிரை (hippopotamus) என்பதின் கிரேக்கப் பெயர் நீர்க்குதிரை என்று பொருள்படுவதால், இதற்கு இப்பெயரே தமிழிலும் இடப்பட்டிருக்கிறது. எனினும் இது குதிரைக் குடும்பத்தைச் சேர்ந்தது அன்று. குதிரை வகை ஒற்றைக் குளம்பின. இரட்டைக் குளம்பினதான இது பன்றிக்கு உறவானது. தரையில் வாழும் பாலூட்டிகளில் யானைக்கு அடுத்த படியான மிகவும் பருவான விலங்கு. எனினும் இயக்கப் பெறுமோ என்று ஐயுறத்தக்க மிகப் பெரிய உடம்பைப் பெற்றுள்ளது." இவைபோன்ற வரலாறுகளை இந் நூலில் சுவையோடு படித்துத் தெரிந்து கொள்ளலாம்.

தொழில் துறையில் பஞ்சாலைத் தொழில், தோல் பதனிடுதல், பட்டு, போன்ற தலைப்புக்களில் உள்ள கட்டுரைகளைக் காண்கிறோம். பரிணாமம் போன்ற பொது விஞ்ஞானக் கட்டுரைகளைத் தவிர அரிய விஞ்ஞான விஷயங்கள் சிலவற்றைப் பற்றிய கட்டுரைகளும் இதில் இடம் பெற்றிருக்கின்றன. உதாரணங்களாகத் துகள் மண்டல இயக்க இயல், படிகங்களும் படிக இயலும் என்னும் கட்டுரைகளைக் குறிப்பிடலாம்.

இத்தனை வகையான கட்டுரைகள் இருப்பதனால், படிப்பில் கருத்தும், தமது அறிவைப் பெருக்கிக் கொள்ளவேண்டும் என்ற எண்ணமும் உடைய எவரும் தத்தமக்குச் சுவை தரும் விஷயங்களைப் படித்து, பயன் பெறத்தக்க கட்டுரைகளை ஒவ்வொரு திறப்பிலும் காணலாம்.

இதில் கூறிய விஷயங்களை விளக்குவதற்காகப் பல இடங்களில் தமிழ்ச் சொற்கள் புதிதாக இயற்றி அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆயினும் பொருள், மயக்கம் இல்லாமல், எளிதாக விளங்கும் பொருட்டு, பல இடங்களில் ஆங்கிலச் சொற்களும், அவற்றின் ஆங்கில உருவத்திலேயே, வழங்கப் பட்டிருக்கின்றன. இந்த முறையைக் குறையென்று கருத வேண்டியதில்லை. பரந்த மனப்பான்மையாலும், நீண்ட நோக்காலும், தமிழ் மக்களும் தமிழ் மொழியும் சிறந்து வளர வேண்டும் என்னும் அன்பினாலும், பின்பற்றப்பட்ட ஒரு சிறந்த கொள்கை என்றே கூற வேண்டும். மிகச் சிறந்த தேசபக்தராகிய திலகருடைய வாழ்க்கையைப் பற்றி இந்த நூல் கூறுமிடத்திலே, அவருடைய கருத்துக்கள் சில எடுத்துக் காட்டாகக் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றுள் இது ஒன்று: "கணிதம், விஞ்ஞானம், பொருளாதாரம் முதலிய துறைகளை நன்கு அறிந்து கொள்ள இந்தியருக்கு ஆங்கிலக் கல்வி இன்றியமையாதது என்பதை உணர்ந்த திலகர்...1880-ம் ஆண்டு புனாவில் ஆங்கிலப் பள்ளிக்கூடம் ஒன்றை நிறுவினார்." இக்காலத்தில் விவாத விஷயமாக இருக்கும் ஒன்றைப் பற்றி நூற்றுக்கு நூறு தேச பக்தி நிரம்பியவராக உள்ள திலகரின் கருத்து சிந்திக்கத் தக்கது.

இந்நூல் பாராட்டுக்கு உரியது. ஆயினும், இதில் ஒரு சில குறைகள் காணப்படுகின்றன. அவற்றைக் குறிப்பிடுவதும் விமர்சகரின் கடமை. ஆதலால், இரண்டொன்றை இங்கே கூறுகிறேன். பச்சை வேலித் தாவரங்கள் என்னும் கட்டுரையை விளக்குவதற்காகச் சில தாவரங்களின் படங்களும் அவற்றின் பெயர்களும் 687-ம் பக்கத்தில் கொடுக்கப் பட்டிருக்கின்றன. இப் படங்களுள் இரண்டொன்றைத் தவிர மற்றவை ஒன்றிலும் அத்தாவரங்களின் உருவம் தெளிவாகத் தெரியவில்லை. நட்சத்திரம் என்னும் கட்டுரையிலே நமது நட்சத்திரக் கூட்டத்தை (galaxy) பற்றிக் கூறுமிடத்தில் 'இந்த நட்சத்திரக் கூட்டம் போல இலட்சக்கணக்கானவை உள்ளன. சூரியனைவிடப் பெரியது இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை' என்று காணப்படுகிறது (பக்கம் 288). இந்த வாக்கியம் பிழைபட அமைந்திருக்கிறது. அதே பக்கத்தில் 'ஆரைகா என்பது மிகப் பெரிய நட்சத்திரங்களில் ஒன்று. அதன் விட்டம் 240 கோடி மைல்' என்று இருக்கிறது. ஆரைகா என்பது ஒரு நட்சத்திர கணம் (constellation) எப்ஸிலன் ஆரைகாவை ஆசிரியர் குறிப்பிடுகிறார் என்று தோன்றுகிறது. தொல்காப்பியரைப் பற்றிக் கூறும் கட்டுரையில் 'இந்நூல் 8 000 ஆண்டுகளுக்கு முந்தியதாதல் ஒருவரும் மறுக்கொணா உண்மை' என்று தொல்காப்பியத்தின் காலத்தைப் பற்றிச் சற்றே மிகையான உறுதியோடு கூறுவதாகத் தோன்றுகிறது. ஆராய்ச்சியாளர்களிடையே தொல்காப்பியரின் காலம் பற்றி உறுதியான முடிவு ஏற்பட்டு விட்டதாகக் கூறுவதற்கில்லை.

ஒருசில இடங்களிலே அச்சுப்பிழைகள் காணப்படுகின்றன. 'aboriginels' (பக்கம் 879) காலவர் (பக்கம் 420) போன்றவை உதாரணங்கள். இத்தகைய நூலில் இச் சிறு பிழைகள்கூட இடம் பெறலாகாது.

பிரசுரம்: தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை.

விற்பனை உரிமையாளர்: 'ஓரியண்ட் லாங்மன்ஸ்' சென்னை-2. விலை: 25-00.

## சிறு பிள்ளையைப்போல...

## சிறு பிள்ளைத்தனமல்ல!







ஸாத்தே பிஸ்கெட் அண்டு சாக்கலெட் கம்பெனி லிமிட்டெட், பூனா-2

*Heros' 97. TAM.*

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

97

'சமநிலை' என்றால் தோல்வியைக் கண்டு துக்கத்தில் மூழ்காமல் இருப்பதும் வெற்றியை அடைந்து மதியை அழிக்கும் களிப்புக்கு இடம் கொடாமலிருப்பதுமாகும். இது முக்கியமாகத் துறவு மார்க்கத்தில் சேர்ந்ததாயினும் இல்லறத்துக்கும் அந்தச் சமநிலை உபதேசிக்கப்படுகிறது. தருமத்துக்கு விருத்தமாகாத வழியில் பொருள் தேடும் முயற்சிகளில் முக்கியமாகக் கவனிக்கத் தக்கது—இடுக்கண் வந்தபோது மனம் கலங்காமல் இருக்க வேண்டும் என்பது.

இடுக்கண் வருங்கால்
நகுக அதனை
அடுத்தூர்வது அஃதொப்பது
இல்.

இடுக்கண் கண்டு பயப்பட வேண்டாம். அதைப் பரிகசிப்பது போல் சிரித்துச் செய்ய வேண்டியதைச் செய். எதிரியைக் கண்டு நகைப்பது போல் இடுக்கண்களைக் கண்டு நகைத்து அவற்றுடன் போர் செய். 'வந்தாயா? உன்னை எதிர்ப்பதே எனக்கு மகிழ்ச்சி' என்று சொல்லி உன் போரை நடத்து. அதுவே இடுக்கண்களை அடக்கும் நல்ல வழி என்கிறார்.

அடுத்தூர்வது—அதைத் தள்ளி முன் செல்வது.

இடுக்கண் மனத்தை வருத்தும். ஆயினும் வீர மகிழ்ச்சி மேற்கொண்டு அதை அடக்க வேண்டும் வெற்றி பெறுவதற்காக.

* * *

இன்னும் சொல்லுகிறார்,

வெள்ளத்து அனைய
இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும்.

பெரும் வெள்ளத்தைப் போல் துன்பம் வரும். ஆனால் அது மெய்யறிவுடையான் உள்ளத்தில் இருந்தஇடம் தெரியாமல் தீர்ந்து போகும். அவனுடைய மெய்யறிவின் பலத்தால்.

துன்பம் எல்லாம் உரன் இல்லாத மனத்தின் குற்றம், உறுதியான உள்ளத்தில் துன்பத்துக்கு இடம் இல்லை. அடுத்த கடமை என்ன என்று ஆராய்ந்து அதில் மனத்தைச் செலுத்துவான் அறிவுடையான். வெள்ளம் போல் வந்த துன்பம் அப்போது இல்லாமற் போகும். மனத்தில் இடம் கொள்ளப் பார்க்கும் துன்பத்தை விலக்கும் வழி அடுத்துச் செய்ய வேண்டிய கருமத்தில் மனத்தைச் செலுத்துவதேயாகும்.

* * *

இலக்கம் உடம்புஇடும்பைக்கு
என்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதாம்
மேல்.

இடும்பைக்கு இலக்கம் உடம்பு; ஆன்மா அல்ல. இதை உணர்ந்து

மனத்தைத் தேற்றிக் கொண்டு அந்தத் துன்பம் உள்ளத்தைத் தீண்டிக் கலக்கம் உண்டாக்காமல் காத்துக் கொள்வார் மேலோர். உண்மையில் துன்பமே யன்று என்று கண்டு கொள்ளுவார்.

கையாறு—துன்பம் ; மேல்—மேலோர்.

துன்பம் விதியினால் உண்டாயிற்று என்று சாந்தம் அடைவார் என்னும் பொருளில் இந்தக் குறளுக்கு உரை சொல்லியிருக்கிறார்கள் பரிமேலழகரும் மணக்குடவரும். நான் ஓரளவு மாற்றிச் சொல்லத் துணிந்ததற்குக் காரணம் விதி என்று முடித்துக் கொண்டு மேலே ஏதும் செய்யாமலிருப்பது பொருட்பாலுக்குப் பொருந்தாது என்பதனால்.

*　　*　　*

தெய்வத்தான் ஆகாது
　எனினும் முயற்சி தன்
மெய்வருத்தக் கூலி தரும்.

இந்தக் குறளில் முன்னே உபதேசித்ததைச் சுருக்கமாகவும் மிகத் தெளிவாகவும் வற்புறுத்துகிறார்.

தெய்வம்—விதிவசம்.

விதிவசத்தால் ஒரு காரியம் கைகூடவில்லையாயினும் நாம் அசற்காகப் பட்ட மெய்வருத்தம் வீணாகாது. முயற்சியின் நற்பயனை அடைவோம். முயற்சியே நாம் பெறும் கூலியாகி விடும். முயற்சியின் பெருமை என்னவென்றால் அது ஒரு காரியத்தில் வெற்றிபெறும் வழி; அது முடியாது போயினும் நாம் செய்த முயற்சி நம்முடைய மனம், உடல் இரண்டின் பலத்தையும் உயர்த்தும். அது பெரிய லாபம். எந்த நல்ல முயற்சியும் நம்முடைய ஆன்மசக்தியை வளர்க்கிறது. எண்ணிய கருத்து பயன் வழியில் பெறவில்லையாயினும், ஆன்ம சக்தியை வளர்த்த பயன் உண்டு. அது பெரும் பயன். விதியின் போக்கைக் கண்டு பயப்படவேண்டாம் என்கிறார் முனிவர். இது பொருள் தேடும் முயற்சிக்கும் மனத்தை அடக்கும் முயற்சிக்கும் இரண்டுக்கும் பொருந்தும். "நான் சொல்லும் முறையில் முயற்சியே பெரிய பயனைத் தரும். சிறிய முயற்சியும் கூட பயன் தரும்" என்று கீதையில் கண்ணனும் இதைச் சொல்லியிருக்கிறான்.

வள்ளுவர் வாசகம் முற்றிற்று.

# அத்தியாயம் 41

## மனக் குறை

# தேன்கூடு

### ஆர்வி

**பூ**ம்-பூம்!" என்று வண்டியைச் சாலையில் நிறுத்தி விட்டு, குழலைப் பலமாக அழுத்தினான் குப்பன்.

இளைஞர் சங்கத்தின் கொட்டகையிலிருந்து ஒரு தலை எட்டிப் பார்த்தது; வந்திருக்கும் வண்டியைப் பார்த்து விட்டுத் தலை தெறிக்க ஓடி வந்தது.

"நல்லவேளை! பாபுவே ஓடி வரான்!" என்றான் குப்பன்.

மறந்து போயிருந்த கோபமெல்லாம் விரைந்து வர, வந்தவன் காது கேட்க, "அதிக நேரம் இங்கே இருக்க முடியாது. உடனே புறப்பட வேண்டியதுதான்!" என்றாள் உஷா.

"அவ்வளவு சீக்கிரம் போக முடியாது. இறங்கி வந்து எங்கள் சங்கத்தைப் பார்த்து விட்டுத்தான் போக வேண்டும்" என்றான் பாபு.

உஷா கோபத்தோடும் அலுப்போடும் முணுமுணுத்தவாறே வண்டியை விட்டு இறங்கி, சங்கத்துக்குள் நுழைந்தாள். "இங்கே என்ன இருக்கிறது பார்க்க? வெள்ளைப் பிள்ளையாரும் ஒலைத் தடுக்குசனும் தானே..." என்று சொல்லிக்கொண்டே வந்தவள், சட்டென்று எதையோ பார்த்து விட்டுப் பேச்சை நிறுத்தினாள்.

அங்கே பழைய காகிதக் கட்டு ஒன்று தாறுமாறாகக் கலைந்து கிடந்தது. எல்லாம் பழைய பத்திரிகைகள்! அவளுடைய நாட்டியப் படங்கள் வெளியான பக்கங்கள் மட்டும் தனியே கிழித்து வைக்கப்பட்டிருந்தன.

அவளுடைய பார்வை பாபுவின் மீது திரும்பியது. அவனோ தரையில் கிடந்த அந்தப் படங்களை அடுக்குவதில் முனைந்திருந்தான். முதல் முதல் பழைய காகித வியாபாரியாகி விட்ட பாபு முதல் முதல் வெளியான உஷாவின் படங்களைக் கொண்ட பத்திரிகைகளை வாங்க நேர்ந்தது என்ன விந்தை! அவன் கையில் தன் படங்களைப் பார்க்க உஷாவுக்குச் சிறிது லஜ்ஜையாக இருந்தது; சிறிது பெருமையாகவும் இருந்தது.

• • •

**ம**ணி ஆறு... ஆறே கால்... ஆறரை!

பாரிஸ்டர் பொறுமை யிழந்து குறுக்கும் நெடுக்குமாக, கூண்டில் அடைபட்ட கரடியைப் போலச் சுற்றிக் கொண்டிருந்தார். சொர்ணம்பாள் முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள்!

ஐந்து மணிக்கு முன்னாலேயே உஷாவை அழைத்து வரப்போன வண்டி இன்னும் ஏன் திரும்பவில்லை? பரமசிவத்துக்குக் காரணம் புரியவில்லை. கல்லூரியில் ஏதாவது நிகழ்ச்சியோ என்று போன் கூடச் செய்து பார்த்துவிட்டார். எதுவும் நடைபெறவில்லை என்று செய்தி கிடைத்தது. கல்லூரிச் சுற்றுக்குள்ளேயே வண்டி எதையும் காணோம் என்றும் விடை கிடைத்தது. அப்படியானால் வழியில் ஏதாவது கோளாறு நேர்ந்து நிற்கும்படியாகி விட்டதோ?

அப்படியும் எண்ணுவதற்கு இல்லை. குப்பன் விவரம் தெரிந்தவன். அன்று சீக்கிரம் திரும்ப வேண்டும் என்று அவர் சொல்லி வைத்திருப்பதால், பக்கத்தில் எங்கேயாவது போய் போன் செய்யாமல் இருக்க மாட்டான். உஷாதான் ஆகட்டும்; ஒரு டாக்ஸியைப் பிடித்துக் கொண்டு வந்துவிடக் கூடாதா? கல்லூரியில் படிப்பவளுக்கு இந்த யோசனை கூடவா எட்டாமல் போய்விடும்? ஒரு வேளை, வண்டிக்கே ஏதாவது விபத்து நேர்ந்திருக்குமோ? பரமசிவத்துக்குச் சிறிது கலக்கமாக இருந்தது. போலீஸுக்கோ, ஆஸ்பத்திரிக்கோ போன் செய்து கேட்கலாமா என்று கூட நினைத்தார். ஆனால் எந்தப் போலீஸ் ஸ்டேஷனுக்கு? எந்த ஆஸ்பத்திரிக்கு?

"நீங்கள் இப்படிப் பறந்தால் ஆகிவிட்டதா? அவளுக்கு அந்த விருந்துக்குப் போகவேண்டுமே என்கிற எண்ணம் இருந்தால்தானே?" என்று நட்டாங்கு பேசினாள் சொர்ணம்பாள்.

"ஏன் இப்படிச் சொல்கிறாய்? அவளுக்கு அந்த எண்ணம் இல்லாமல் போக என்ன வந்துவிட்டது?" என்றார் பரமசிவம்.

"அது யாருக்கு இங்கே தெரியும்? எது நல்லதோ, அது எல்லாருக்கும் நல்லதா



கப் பட்டால்தானே? உயர்ந்ததாக இருந்தால் உயர்ந்தது பிடிக்கும். இல்லா விட்டால், என்னவோ சொல்வார்களே, அப்படித்தான் இருக்கும் குணம்!"

"சரி, சரி" என்று சூள் கொட்டினார் பரமசிவம். அவருக்கு மனைவியின் இந்தப் பேச்சு ருசிக் குறைவாகப் பட்டது. உஷாவை என்னவோ குறை சொல்வதாக இருந்தாலும் மறைமுகமாக அது தம்மையே குற்றம் சாட்டுவதுபோல் தோன்றியது. யாரோ பெற்ற பெண்ணைச் சொந்தப் பெண்ணாகச் சொல்லிக் கொண்டதும் செல்லமாக வளர்க்க நேர்ந்ததும் யாருடைய குற்றம்? அவர் மட்டும்தானா அதற்குப் பொறுப்பாளி? இத்தனை வயதுக்குப் பிறகு பிறந்த சுந்தரி காலத்தில் பிறந்து, இன்று உஷாவைப்போல் கல்யாணப் பருவம் அடைந்திருந்தால் சொர்ணம்பாளுக்கு எவ்வளவு மகிழ்ச்சி உண்டாகுமோ, அவ்வளவு அவருக்கும் இருக்காதா? எப்பொழுது அப்படி நேரவில்லையோ, உஷாவைக் கண்ணபிரானுக்குக் கொடுப்பதில் என்ன தவறு? அதற்காக ஒருவரை ஒருவர் குறை சொல்லிக் கொண்டிருப்பதில் லாபம் என்ன? இப்பொழுதுள்ள நிலையில் எது சாத்தியம், எது சிறந்தது என்பதைப் பார்க்க வேண்டாமா?

அவர்கள் வயிற்றில் உஷா பிறக்கவில்லை என்பது உண்மைதான். ஆனால் ஊரும் உலகமும் அவளை வேறாகவா எண்ணிக் கொண்டிருக்கின்றன? இதைப் போய் இனி மாற்றிச் சொல்லிக்கொள்ள முடியுமா? உண்மையை வலிந்து கூறினாலும், இழிவு என்பது இருக்கட்டும், முதலில் இதை யார் நம்புவார்கள்? இதனால் யாருக்கு நன்மை?

நாட்டியம் நடந்த நாள் முதலே பரமசிவத்துக்கும் சொர்ணம்பாளுக்கும் கருத்து வேற்றுமை பெருகிக்கொண்டு வந்தது. எங்கிருந்தோ எடுத்து வந்த பெண்ணை இவ்வளவு பெரிய கோடீசுவரியாக்குவதா என்று சொர்ணம்பாள் உள்ளம் பொருமினாள். அவளுடைய அறியாமையை எண்ணிப் பாரிஸ்டருக்குச் சிரிப்புத்தான் வந்தது. தங்களுடைய வயிற்றில் பிறந்த சுந்தரிக்கு இத்தகைய பேறு கிடைக்கும் என்றால் அது எல்லாவற்றையும்விட நல்லதுதான். ஆனால் அதற்கு ஏது வாய்ப்பு? சுந்தரி கல்யாண வயதடையும் வரையில் கண்ணபிரான் காத்திருப்பது முடியுமா? அப்படியே இருந்தாலும் வயதுப் பொருத்தம் என்று ஒன்று இல்லையா? மேலும், உஷா என்றதும் மறுத்துப் பேசாமல் இருக்கும் கண்ணபிரான், சுந்தரி என்றாலும் இணங்குவான் என்பது என்ன நிச்சயம்? அழகிலே உஷா எங்கே, சுந்தரி எங்கே? இந்தக் காலத்து இளைஞர்களுடைய நாட்டமெல்லாம் எதன் மீது செல்லும் என்பது தெரியாதா?

சொர்ணம்பாளுக்கு இதெல்லாம் தெரியாததல்ல. ஆயினும் தான் பெற்றெடுத்த மகளுக்கு இல்லாத இந்த அதிர்ஷ்டம் யாரோ பெற்ற உஷாவுக்குக் கிடைப்பது அவளுக்குப் பொறுக்கவே இல்லை. ஆற்றாமைதான் உண்டாயிற்று.

"ஊரார் அவளை உங்கள் பெண் என்று எண்ணிக்கொண்டிருக்கிறார்களே என்று நீங்களும் எண்ணிக்கொண்டுவிட்டீர்களா? சொந்தப் பெண் தட்டுக்கெட்டுப் போகிறது போல முனைந்து நிற்கிறீர்களே! நாகப்பட்டணத்து ஹோட்டலில் துணியில் சுருட்டிக் கொடுத்த மூட்டையை மறந்துவிட்டீர்களா?" என்று ரோசம் தாளாமல் கணவனைப் பார்த்துக் கேட்டாள் அவள்.

"எனக்கா மறதி என்று சொல்கிறாய்?" என்று கேட்டுவிட்டுச் சிரித்தார் அவர். அந்த மூட்டையிலிருந்த குழந்தை அவளுக்கு எத்தனை ஆறுதலைத் தந்தது என்பதை அவர் மறந்துவிடவில்லை. ஆனால் அதை மறந்து போனது யார் என்று

கேட்பது போல இருந்தது அவர் சிரிப்பு. இட்டத்தட்ட அந்தக் குழந்தையினால் அவனுக்கு ஒரு புது வாழ்வே உண்டா யிற்று என்றுகூடச் சொல்லலாம். அதே போல இந்தக் கல்யாணத்தினால் மீண்டும் ஒரு புதிய திருப்பம் உண்டாகப் போவ தைப் புரிந்துகொள்ளாமல் பேசுகிறானே என்று இடித்துக் காட்டுவது போலவும் இருந்தது அவர் சிரிப்பு.

அவர் நடந்துகொண்ட விதம் சொர் ணம்பாளுக்குப் பெரிய மனக்குறை யாகத்தான் இருந்தது.

அவரும் அவளைப் போல் உஷாவிடம் அக்கறை காட்டாமல் நடந்துகொண் டால் அவளுக்குப் பெரிய ஆறுதலாக இருந்திருக்கும். அவரைப் போலத் தன் னாலும் ஏன் உற்சாகப்பட முடியவில்லை என்று எண்ணிப் பார்த்தாள் அவள். அவளுக்கே தன்னுடைய தவறு நன்றாகத் தெரிந்தது. ஒரு பாவமும் அறியாத உஷா விடம் முன்போல் அன்பு காட்டவே துடித்தது அவள் நெஞ்சம். ஆனால் அவ ளால் என்னவோ வேறு விதமாக நடந்து கொள்ளவே முடியவில்லை. ஏதோ வெளியில் சொல்லத் தெரியாத பொறாமை உணர்ச்சிக்கு ஆளாகிவிடுவதாகத் தோன் றியது. ஆனால் பாரிஸ்டர் மட்டும் நல்ல பெயர் எடுப்பதாவது? அப்படியானால் அவள் மட்டும்தானா பொல்லாதவள்? பொறாமை பிடித்தவள்? கேவலமான குணம் படைத்தவள்? மற்றவர்கள் எல் லோரும் ஒரு கட்சியாகவும், தான் மட் டும் தனித்து நிற்பதாகவும் அவளுக்கு ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் தோன்றிக் கொண்டேயிருந்தது. அதுவே அவளு டைய கோபத்தைக் கிளறிவிட்டது. உஷாவிடம் இல்லாத குறைகளையெல் லாம் காண்பது போல் அவள் கற்பனை செய்துகொண்டாள். பாரிஸ்டர் வேண் டும் என்றே அவற்றைப் பொருட்படுத் தாமல் அவளிடம் நடந்துகொள்வதாக எண்ணிக் கோபம் கொண்டாள். கண்ண பிரானுடைய ஆஸ்திகள் அனைத்தும் தன் கணவன் கைக்கே கிடைப்பதாக இருந்தாலும் இந்தக் கல்யாணத்தில் அவர் அக்கறை காட்டுவது அவளுக்குத் துளியும் பிடிக்கவில்லை.



ஆனால் ஒன்றுமட்டும் அவளுக்குச் சிறிது ஆறுதலைக் கொடுத்தது. உஷா இந்தக் கல்யாணப் பேச்சையே காதில் போட்டுக்கொண்டதாகத் தோன்றாதது தான் அது. அத்துடன் மட்டுமல்ல; அவளுக்கு இந்தக் கல்யாணத்தில் விருப் பமும் இல்லை என்பதை அவள் தெளிவாக உணர்ந்தாள். இதற்குக் காரணம் எது வாக இருந்தாலும் அவளுடைய உள்ளப் போக்கைத் திரித்துக் கூறச் சொர்ணம் பாளுக்கு இதுகருவியாகப் பயன்பட்டது.

பாரிஸ்டர், "சரி சரி!" என்று முடித்து விட்டு, அன்று இரவு நடக்கப்போகும் விருந்துக்கு அந்த ஷீலா என்கிற பெண் வருவாளா, மாட்டாளா என்று யோசிப் பதில் முனைந்துவிட்டார். அவருக்குக் கிடைத்த விடை என்னவோ விபரீத மாகத்தான் இருந்தது. இருந்தாலும் அவர் தம் மனத்தைத் தளர விடவில்லை. உஷாவுக்கும் கண்ணபிரானுக்கும் கல் யாணம் நிச்சயமாகாதவரையில் பல கன்னியர்கள் இப்படிப்பட்ட இடங் களில் வந்து, போய்ப் பழகிக்கொண்டு தான் இருப்பார்கள். இதையெல்லாம் தவறாகக் கருதுவது சரியல்லவென்றே அவருக்குப் பட்டது. கல்யாணம் நிச் சயமாகிவிட்டால் அப்புறம் அவர்களுக்கு அங்கே என்ன வேலை? அதற்குமேல் எதற்காக வரப் போகிறார்கள்? தன் பெயரைக் களங்கப் படுத்திக்கொள்ள எந்தப் பெண்தான் விரும்புவாள்? இத் தனை நேரம் இந்தக் கல்யாணப் பேச்சு அவள் வரையில் எட்டாமலா இருந் திருக்கும்? அப்படி எட்டாமல் இருந் தால் இன்று இரவு நடக்கும் விருந்தின் போது அதை எப்படியாவது உணர்த்தி விடவேண்டும் என்று அவர் முடிவு செய்துகொண்டார்.

வாசலில் வண்டி வந்து நின்ற சத்தத் தைக் கேட்டு அவர் தம் கைக் கடிகாரத் தைப் பார்த்தார். மணி ஆறு நாற்பத் தெட்டு! இனி அதிக நேரம் காத்திருப் பதற்கில்லை. உஷாவிடம் காரணம்








கேட்கவோ சமாதானம் பெறவோ இது சமயமல்ல. ஆகவே அவர் நேரிடவே உஷாவின் அறை வாயில் வந்து நின்று, குரலில் சிறிதும் மாறுதலைக் காட்டாமல், "உஷா! மணி ஏழு அடிக்கப் போகிறது. இன்னும் பத்து நிமிஷங்களுக்குள் புறப்படத் தயாராக வேண்டும் நீ! எட்டு மணிக்கு விருந்து என்றால் எட்டு மணிக்குப் போகவேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்து விடாதே!" என்று கூறினர்.

உஷா அவரைத் திரும்பிப் பார்த்து, "எல்லோருமாகவா விருந்துக்குப் போக வேண்டும்?" என்று கேட்டாள்.

"எல்லாரையும் கூப்பிட்டிருக்கிற போது எல்லாரும் போனால்தானே அழைப்பைக் கௌரவித்ததாக ஆகும்?"

"அது சரி, அப்பா! நீங்களும் அம்மாவும் மட்டும் போனால் போதாதா? நான் சுந்தரியைப் பார்த்துக்கொண்டு வீட்டிலிருக்கிறேனே?" என்றாள் உஷா.

பாரிஸ்டருக்கு இது சிறிது உறுத்தலாகத்தான் இருந்தது. "அப்படியானால் உனக்கு அங்கே வர விருப்பமில்லையா?" என்று கேட்டார். சொர்ணம்பாளின் வார்த்தைகளை இவள் உண்மையாக்கி விடக்கூடாதே என்ற கவலை அவர் பேச்சில் தொனித்தது.

"நான் வருவது பொருத்தமில்லை என்று பார்க்கிறேன்!"

பாரிஸ்டர் பரமசிவம் எந்த விதத்தில் பொருத்தமில்லை என்கிறாள் என்பதைக் கேட்க எண்ணினர். ஆனால் இதற்குள் சொர்ணம்பாளின் குரல் சற்று உரக்கவே கேட்டது.

"இன்றைக்குத்தான் நான் பார்த்தீர்களோ ஊரெல்லாம் சுற்றுவதற்கு? இதற்குத்தான் உன்னைக் கூப்பிட்டு உடனே வந்துவிடும்படி ஐயா சொல்லியனுப்பினாரோ?"

குப்பன் இதற்கு விடை ஏதும் சொல்லாமல் தலையைக் குனிந்துகொண்டு நின்றான். குற்றவாளி மாதிரி நிற்கும் குப்பனை வெளியில் வந்து எட்டிப் பார்த்தாள் உஷா. சொர்ணம்பாள் அவள் பக்கமே திரும்பவில்லை. உஷாவைக் கவனிக்காதவளைப் போலவே அவனைப் பார்த்து, "அவன் சொன்னான்; போனேன் என்கிறாயே, அப்படியானால் ஐயா சொன்னது அவ்வளவு பெரிதாக உனக்குத் தோன்றவில்லையோ?" என்று முடுக்கினாள்.

உஷா முதலில் பேசவேண்டாம் என்று தான் நினைத்தாள். ஆனால் குப்பன் விடைகூறத் திணறுவதைப் பார்த்ததும் அவள், "அம்மா, அவனைச் சொல்லிக் குற்றமில்லை. எந்த வீட்டிலுமே எஜமான்தான் சம்பளம் கொடுக்கிறார். இருந்தாலும் அவர் பேச்சைவிட அவருடைய குழந்தைகள் சொல்வதற்கு அதிகமான சலுகை உண்டு. அந்த நினைப்பில் இவன் நடந்து கொண்டு விட்டான். இங்கே நிலைமை வேறு என்பதை இன்றைக்கு நன்றாகத் தெரிந்து கொண்டிருப்பான்!" என்றாள்.

அவள் பேச்சைக் கேட்ட சொர்ணம்பாளும் பாரிஸ்டரும் அதிர்ச்சியுற்று ஒரு கணம் அசையாமல் நின்றார்கள். மறைமுகமாக அதில் தொக்கி நின்ற குறிப்பு அவர்களுடைய மனச்சாட்சியைத் தாக்கியது. உஷாவின் பேச்சு இவ்வளவு கூர்மையாக உள்ளத்தில் பாயும் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. பாரிஸ்டர், சொர்ணம்பாளைக் கோபமாக ஒருமுறை விழித்துப் பார்த்துவிட்டு, பொதுவாக, "சரி சரி, பேச்சுப் போதும்; புறப்படும் வழியைப் பாருங்கள்!" என்றார்.

உஷா மிகவும் மிருதுவான குரலில் ஆனால் மிகவும் உறுதியாக, "நான் வருவது பொருத்தமோ பொருத்தமில்லையோ, தெரியாது. ஆனால் இன்றைக்கு எனக்கு வரப் பிடிக்கவில்லை, அப்பா!" என்றாள்.

# கல்கி
# மாவட்டச் சிறுகதைப் போட்டி

**முதற் பரிசு ரூ. 200** **இரண்டாவது பரிசு ரூ. 100**

★

★ ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு மாவட்டத்தை இலக்காகக் கொண்டு இந்தச் சிறுகதைப் போட்டி நடத்தப்படும். ஒவ்வொரு மாதமும் தேர்ந்தெடுக்கப்படும் கதைகளில் இரண்டு கதைகளுக்குப் பரிசு வழங்கப்படும்.

★ தமிழ்நாட்டின் மாவட்டங்களான கன்யாகுமரி, திருநெல்வேலி, மதுரை, ராமநாதபுரம், திருச்சி, தஞ்சை, தென் ஆற்காடு, செங்கற்பட்டு, வட ஆற்காடு, சென்னை, சேலம், கோயமுத்தூர், நீலகிரி ஆகிய பதின்மூன்று மாவட்டங்கள் இந்தப் போட்டியில் இடம் பெறும்.

★ எல்லா மாவட்டங்களைப் பற்றிய கதைப் போட்டிகளிலும், எல்லாத் தமிழ் எழுத்தாளர்களும் கலந்து கொள்ளலாம்.

★ கதைகள் பண்பட்ட தமிழ் நடையில் அந்தந்த மாவட்டத்தைப் பின்புலமாகக் கொண்டு, முழுவதும் அந்தப் பிரதேச மணம் கமழ்வதாக இருப்பதோடு சொந்தக் கற்பனையாகவும் இருக்க வேண்டும்.

### நான்காவது போட்டி

## வடஆற்காடு மாவட்டம்

### விதிகள்

1. கதைகள் வடஆற்காடு மாவட்டத்தின் சூழ்நிலை எல்லாவகையிலும் அமையுமாறு எழுதப்பட வேண்டும். வடஆற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த மனிதர்கள், பழக்க வழக்கம், தொழில் வாழ்வு போன்றவற்றைச் சித்திரிக்கும் கதைகளே இப்போட்டியில் இடம் பெறும்.

2. கதைகள் 'கல்கி' இதழின் ஐந்து பக்கங்களுக்குக் குறையாமல் ஏழு பக்கங்களுக்கு மேற்போகாமல் இருக்க வேண்டும்.

3. ஒரு எழுத்தாளரே ஒன்றுக்கு மேற்பட்டும் கதைகள் அனுப்பலாம்.

4. பரிசுக் கதைகளைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் "கல்கி" ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

5. பரிசு பெறாத கதைகளில் பிரசுரிக்கத் தகுதியுடையவை, உரிய சன்மானம் அளித்துப் பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்படும்.

6. பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்படாத கதைகளைத் திரும்பப் பெற, கதைகளோடு உரிய தபால் பில்லைகள் இணைக்க வேண்டும்.

7. கதைகள் சம்பந்தமாக எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

8. வடஆற்காடு மாவட்டப் போட்டிக்கான கதைகள் செப்டம்பர் 30-ந் தேதிக்குள் 'கல்கி' காரியாலயத்துக்கு வந்துசேர வேண்டும்.

9. போட்டி முடிவு அக்டோபர் மாத இறுதிக்குள் அறிவிக்கப்படும்.

10. கதைகளின் உறைகளிலும், தலைப்புக்களிலும் "கல்கி வட ஆற்காடு மாவட்டச் சிறுகதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டும்.

குறிப்பு :—வடஆற்காடு மாவட்டத்தின் சிறுகதைப் போட்டி முடிவு வெளியாகும் இதழிலேயே அடுத்த மாவட்டச் சிறுகதைப் போட்டிக்குரிய விவரங்கள் அறிவிக்கப்படும்.

ஆசிரியர், கல்கி

அதற்குக் காரணம் கேட்டால் பேச்சு இன்னும் விபரீதமாக வளரப்போகிறதே என்று அஞ்சி, பாரிஸ்டர் சிறிது தயங்கினார். அவருடைய கோபமெல்லாம் மனைவிமீதே திரும்பியது. எதையும் விட்டுப் பிடிப்பதில் நம்பிக்கையுள்ள அவர், "சரி, இன்றைக்கு வரப் பிடிக்கவில்லை என்றால் இன்னொரு சமயம் பார்த்துக் கொண்டால் போகிறது!" என்று கூறிவிட்டுச் சென்றார்.

உஷா வராததனால் ஏற்பட்ட மனக்குறை லீலா வரவில்லை என்பதை அறிந்த போது சிறிது அதிகமாகவே இருந்தது. ஆனால் அதேசமயத்தில் அவருக்கு ஆறுதலாகவும் இருந்தது. தம்முடைய திட்டம் எவ்வித இடையூறுமின்றி நிறைவேறிவிடும் என்று அவர் முடிவாக எண்ணிக் கொண்டார். கண்ணபிரான் விருந்துக்கு லீலாவை அழைக்காதது அவருக்கு ஒரு நம்பிக்கையைக் கொடுத்தது; நல்ல சூசகமாகவும் பட்டது. அவர் உற்சாக வெள்ளத்தில் மிதப்பதுபோல் உணர்ந்தார். முக்கியமான விருந்தினர்கள் எல்லாம் தம்மைப் புதிய கண்கொண்டு பார்ப்பதுபோல் தோன்றியது. தலைவலி என்று கண்ணபிரான் தன் அறைக்குள் சென்றதும் எல்லாரும் அவரிடம் வந்துதான் விடைபெற்றுக்கொண்டு போனார்கள். இது அவருக்கு மிகவும் பெருமையாக இருந்தது. நினைத்த காரியத்தைச் சாதித்து விட்டதைப் போன்ற நிறைவு அப்போதே உண்டாகி விட்டது. அவர் தோட்டக்காரன் பழனி சொன்னதை உண்மை என்று நம்பி, டாக்டர் வருவதற்காக வெகுநேரம் காத்திருந்தார். ஆனால் எவ்வளவு நேரம்தான் பொறுத்திருப்பது?

பழனியோ கையைப் பிசைந்து கொண்டு நின்றான். பாரிஸ்டர் கேள்வி கேட்கத் தொடங்கி விட்டால், வாயைக் குடைந்து உண்மையைப் பிடுங்கி விடுவார் என்று அவனுக்கு உதறல்.

நேரமாவதை எண்ணி, "சரி, இவர்கள் வண்டி வந்ததும் நான் வருகிறேன். நீ முன்னால் போ!" என்று குப்பனிடம் சொர்ணம்பாளை அழைத்துப் போகச் சொல்லிவிட்டு டாக்டரை எதிர்பார்த்து அவர் காத்திருந்தார்.

## அத்தியாயம் 42

# தூக்கம்

மணி பன்னிரண்டு!

போன வண்டியையும் காணோம்; டாக்டர் யாரும் வரவும் இல்லை. கண்ணபிரான் உள்ளே தூங்குகிறானா, தலைவலியோடு வேதனைப்படுகிறானா என்று தெரியவில்லை. வந்தது வரட்டும் என்று இலேசாகக் கதவைத் தட்டிப் பார்த்தார். குளிர் சாதனம் பொருத்திய அந்த அறைக்கதவு அசைந்தே கொடுக்கவில்லை.

அவருக்குத் தூக்கம் கண்களைச் சுற்றியது. அந்த நிலையில் அங்கிருந்து போகவும் மனம் கொள்ளாமல், இருக்கவும் நிலைகொள்ளாமல் அவர் சிறிது நேரம் சுற்றிச் சுற்றி வந்தார். விருந்து நடைபெற்ற இடமெல்லாம் வெறிச்சென்று கிடந்தது. பங்களா ஆட்கள் எல்லாரும் இருக்கும் இடம் தெரியாமல் முடங்கி விட்டார்கள். அவர் ஒவ்வொரு படியாகக் கீழே இறங்கி, முன் ஹாலை அடைந்து வாயில் நடைக்கு வந்தார். இயற்கைக் காற்று இதமாக வீசியது. அந்தக் குளிர்ச்சியில் அவர் மனப் புழுக்கமே தணிந்தது போல் இருந்தது. வெளி வாயிலை நோக்கிச் செல்லும் அந்த அழகிய பாதையைப் பார்த்துக்கொண்டு சிறிது நேரம் நின்றார். அஷ்டமிச் சந்திரன் அப்போதுதான் விண்டுபோன அப்பத்தைப் போல நெடிதுயர்ந்த மரங்களுக்கிடையே காணப்பட்டான். இரவில் மலரும் பூக்கள் நறுமணத்தை அளைந்து விட்டுக் கொண்டிருந்தன. சிள்வண்டுகள் அந்தப் பிரதேசம் முழுவதிலும் எதிரொலிக்க 'ஙொய்' என்று கத்திக் கொண்டிருந்தன. அழகும் அமைதியும் சூழ்ந்த அந்த இரவு சோலையும், புல்வெளியும் நிறைந்த அந்த மாளிகையில் துயில் பழகுவது போல் தோன்றியது. வானத்து வைர மணிகள் அதற்குக் காவல் செய்வதுபோல் மின்னிக்கொண்டிருந்தன. பரமசிவம் வழக்கறிஞராயல்லாமல் ஒரு கவியாக இருந்திருக்கக் கூடாதா? இயற்கையின் இந்த மோகன எழிலைக் கண்டும் அவர் மௌனியாக நின்றார். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதமாகக் கொள்ளை போகும் இந்த வித்தை அழகைச் சொற்களிலே சிறைப்பிடிக்கும் திறனின்றி அவர் ஊமையாக நின்றார். அங்கங்கே பெட்டி பெட்டியாகத் தேனீக்கள் தேன் சேகரிக்கக் கூடுகள் நிறுத்தப் பட்டிருந்தன. அந்த மரப் பெட்டிகளைப் போல அவரும் ஒருபுறமாக முட்டுப்போல் நின்றார்.

திடீரென்று அவருடைய நினைவு கூட்டைவிட்டு எங்கோ பறந்து சென்றது. லீலா அங்கே வராததற்கும், கண்ணபிரான் தலைவலி என்று கதவைத்

தாளிட்டுக்கொண்டு படுக்கச் சென்றதற்கும் ஏதாவது சம்பந்தம் இருக்குமோ என்று முடிபோட்டுப் பார்க்கத் தொடங்கியது அவருடைய வழக்கறிவு. எந்தக் காரியத்துக்கும் ஒரு காரணத்தைக் கண்டறிய முயலும் அவருடைய சட்டப் படிப்பு, வண்டியில் போனது டிரைவரா, கண்ணபிரானா என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டது. ஷீலா இப்பொழுது இந்த மாளிகையினுள்ளே இருக்கிறாளா, அல்லது கண்ணபிரான் அவளுடைய பங்களாவிலே இருக்கிறானா என்ற கேள்வியே அவர் மனத்தில் தோன்றியது. இரண்டும் இல்லாமல் இருக்கலாம்; கண்ணபிரான் தலைவலியோடு தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருக்கலாம். டாக்டரை அழைக்கப்போன டிரைவர் நேரே தன் வீட்டுக்குப் போய் ஒரு தூக்கம் போட்டு விட்டு வருவதாகவும் இருக்கலாம். இப்படி ஏன் இருக்கக் கூடாது?

பார்த்துக் கொண்டிருக்கும் போதே பாதையில் ஏதோ வெள்ளையாக அசைவதுபோல் தெரிந்தது. பரமசிவம் உற்றுக் கவனித்தார். வருவது ஒரு மனிதன் தான்! வண்டியை எடுத்துக்கொண்டு போன டிரைவர்தான் யார்மீதாவது வண்டியை ஏற்றிவிட்டு, அதைச் சொல்ல வருகிறானோ? வண்டியை விபத்துக்குள்ளாக்கி விட்டு, உயிர் தப்பி நடந்து வருகிறானோ? இல்லாவிட்டால் டாக்டரை அழைக்கப் போனவன் இவ்வளவு நேரம் செய்வதற்கு என்ன நியாயம் இருக்கப் போகிறது?

"யார் அது?" என்றார் பரமசிவம்.

வந்தவன் திடுக்கிட்டு நிற்பது தெரிந்தது.

"யாரடா அது?"—குரல் அதிகாரத்தோடு கேட்டது.

"நான்தான்—பக்கிரி, எஜமான்!"

"யார், டிரைவரா நீ?"

"இல்லீங்க எஜமான்! நான் மீசைப் பக்கிரிங்க!"

பரமசிவத்துக்கு இத்தனைக்கும் நடுவில் இது சிரிப்பாகத்தான் இருந்தது. "அந்த மீசை இல்லாத பக்கிரி எங்கேடா?" என்று கேலியும் கோபமுமாகக் கேட்டார்.

அவர் குரலைக் கேட்டுச் சந்தேகப்பட்டு, சிறிது நெருங்கி வந்து அவரைக் கவனித்தான் பக்கிரி.

"நான் வந்து சின்ன எஜமானைப் பார்க்க வந்தேங்க. எனக்கு வேறு யாரையும் தெரியாது!" என்று குழைவாகக் கூறினான்.

"சின்ன எஜமானைப் பார்க்கவா? இவ்வளவு நேரத்துக்கு மேலா?"

"ஆமாங்க! 'ராத்திரிக்கு மேலே வாடா'ன்னாங்க. அதாங்க வந்தேன்!" என்றான் அவன்.

"அவருக்கு உடம்பு சரியாக இல்லை; நீ அவரை இப்போது பார்க்க முடியாது!" என்று அவனை அனுப்பப் பார்த்தார் அவர்.

ஆனால் அவனோ, "சரிங்க! நான் அந்த ஓரமாப் படுத்திருந்துவிட்டு விடிந்ததும் போறேனுங்க!" என்று கூறிக்கொண்டே, போர்ட்டிகோவுக்குப் பின் பக்கமாகப் போனான்.

வந்தவன்கூடப் போய்ப் படுத்துக் கொண்டு விட்டான். ஆனால் அவர் திரும்பிச் செல்ல ஒரு வழியையும் காணோமே! வண்டி வந்தால் அல்லவா அதைப் பற்றி யோசிக்கலாம்? பரமசிவத்துக்கு அன்று முழுவதும் காத்திருந்த பிழைப்பாகவே போய்விட்டது. அதனால் அவர் களைத்துப் போய் விட்டார். முன் ஹாலில் கிடந்த சோபாவில் போய் உட்கார்ந்து கொண்ட அவர் அப்படியே தம்மையறியாமல் கண்ணயர்ந்து விட்டார். நல்ல தூக்கம். ஏதோ சந்தடி கேட்டு அவர் விழித்துக் கொண்டபோது மணி என்ன இருக்குமோ, தெரியவில்லை. ஜுரப் படுக்கையிலிருந்து எழுந்து வருபவனைப் போல, வெளியிலிருந்து கண்ணபிரான்தான் உள்ளே நுழைந்து வந்து கொண்டிருந்தான். பாரிஸ்டரைப் பார்த்ததும், "ஓ-நீங்களா?" என்று ஒரு கணம் தயங்கி நின்றான்.

"டாக்டர்... டாக்டர்..." என்று தூக்கம் தெளியாமல் பேசினார் பாரிஸ்டர் பரமசிவம்.

"ஆமாம், டாக்டர் வந்து விட்டு, அப்பொழுதே போய் விட்டாரே!" என்றான் கண்ணபிரான், தன்னைச் சமாளித்துக்கொண்டு.

பாரிஸ்டருக்கு இது சிறிது விசித்திரமாகத்தான் இருந்தது. சாத்திய கதவு சாத்தியபடியே இருக்க, கண்ணபிரான் எப்படி வெளியே வந்தான்? மேலே அவனைப் பின்தொடர்ந்து சென்ற பாரிஸ்டருக்கு இந்தக் கேள்விதான் முதலில் உதித்தது. அப்புறம்தான் அவன் இவ்வளவு நேரத்துக்கு மேல் ஏன் விழித்துக் கொண்டு கீழே வந்தான் என்ற கேள்வி உதித்தது.

கண்ணபிரான் சிவந்த விழிகளைக் கசக்கிக் கொண்டு, "பாவம்! என்னால் உங்களுக்குச் சரியான தூக்கமில்லை!" என்று உபசாரமாகக் கூறினான், படுக்கப் போகும் போது.

பாரிஸ்டர் இதையே எண்ணி எண்ணி விடியும் வரையில் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தார். (தொடரும்)

பாகவதமாகிய

# பக்தி வயல்

பௌராணிகர்

## 52. துவாரகையில் கண்ணன்

### மன்மதனும் ரதியும்

**வா**சுதேவனின் அம்சமான மன்மதன் முன்னொருகால் சிவனால் சாம்பலாக்கப்பட்டான். அவனே கண்ணனுக்கும் ருக்மிணிக்கும் புதல்வனாகப் பிறந்தான். அக் குழந்தைக்கு பிரத்யும்னன் என்று பெயர் வைத்தனர். ஆனால் பிறந்த பத்து நாட்களுக்கெல்லாம் சம்பராசுரன் என்ற அரக்கன் அவனைத் தூக்கிச் சென்று கடலில் விட்டெறிந்தான். மிதக்கும் குழந்தையை ஒரு பெரிய மீன் விழுங்கியது. அந்த மீனைச் செம்படவர்கள் பிடித்துச் சம்பராசுரனுக்கு மரியாதையாகச் சமர்ப்பித்தார்கள். சமையல் செய்பவர்கள் மீனை நறுக்கியதும் உள்ளே குழந்தையைக் கண்டு வியப்புற்று சம்பராசுரனுடைய வீட்டில் சேடியாக வேலை செய்யும் மாயாவதியினிடம் கொண்டு காண்பித்தார்கள். மாயாவதி என்பவள் கணவன் சாம்பலாய்ப் போன பிறகு சம்பரனால் வேலைக்காரியாக நியமிக்கப்பட்டு துயரத்துடன் தன் நாட்களைக் கழித்து வரும் ரதிதேவியே. குழந்தையைப் பார்த்ததும் மாயாவதிக்குச் சந்தேகம் தோன்றியது. அச்சமயம் நாரதர் அங்கு வந்து குழந்தையின் உண்மை வரலாற்றை அவளுக்குத் தெரிவித்தார்.

அதைக் கேட்ட ரதி ஆனந்தம் அடைந்தாள். அக் குழந்தையைத் தானே வளர்த்தாள். நாளுக்கொரு அழகேறச் சீக்கிரமாகவே பிரத்யும்னன் மாதர் மனத்தைக் கவரும் மேனியனாய் வளர்ந்தான். அவனுக்கு வயது வந்ததும் ரதி தாமிருவரும் யாரென்றும், நாரதர் தனக்குக் கூறிய வரலாற்றையும் அவனுக்கு எடுத்துரைத்தாள். மாயப் போர் புரியும் பல வழிகளையும் அவனுக்குக் கற்றுக் கொடுத்தாள்.

பிரத்யும்னன் சம்பரனை எதிர்த்துப் போர் புரிய வெளியேறினான். அரக்கனைப் பலவாறு ஏசிப் போருக்கு இழுத்தான். இருவருக்கும் பெரும் போர் நடந்தது. அரக்கன் வானத்தில் மறைந்து கொண்டு பிரத்யும்னன் மீது சரமாரி பொழிந்தான். மாயையை மாயையினால் தடுத்தான் பிரத்யும்னன். மாயை ஒன்றுமே பிரத்யும்னனிடத்தில் பலிக்கவில்லை. முடிவில் தனது வாளை உருவி அரக்கனுடைய தலையை வெட்டித் தள்ளினான்.

மாயாவதிக்கு ஆகாயத்தில் சஞ்சரிக்கும் திறமை உண்டு. கணவனுடன் விரைவில் வான வழியில் துவாரகையை அவள் அடைந்தாள். கண்ணனுடைய அரண்மனைக்குள் இருவரும் சென்றனர். பிரத்யும்னன் பார்வைக்குக் கண்ணனைப் போலவே இருந்தான். அதே மேக வர்ணம், அதே பொன் பட்டாடை, சிவந்த கடைக்கண், புன்சிரிப்பு. இவனைப் பார்த்த அந்தப்புரப்பெண்கள் கண்ணன் என்றே எண்ணி, நாணம் மேலிட்டு, மறைந்து நின்றனர். ஆனால் மறுபடியும் பார்த்ததில் கண்ணன் அல்லவென்று ஓரளவு தெளிந்து அவ்விருவரையும் அணுகினர். ருக்மிணியும் அங்கு வந்தாள். இவ்வழகன் யாரோ என்று திகைத்தாள். தன் மகன் இருப்பானாகில் இதே வயதாகி இப்படியே இருப்பானன்றோ என எண்ணினாள்.

இவ்வாறு ருக்மிணி சிந்தனையில் ஆழ்ந்திருக்கையில் கண்ணன் தனது தாய் தந்தையரோடு அங்கு வந்து அறிந்தும் அறியாததுபோல் இருந்தார். அங்கும் முழு வரலாற்றை நாரதர்தான் அனைவருக்கும் எடுத்துரைத்தார்.

மன்மதனும் ரதியும், பிரத்யும்னனும் மாயாவதியுமாகி, துவாரகையில் வாழலாயினர்.

### சத்யபாமா திருமணம்

**து**வாரகையில் ஸத்ராஜித் என்று ஒரு யாதவன் இருந்தான். அவன் சூரியனை பக்தியுடன் வெகுநாள் பூஜை செய்து வந்தான். அந்தப் பூஜையினால் மகிழ்ந்த கதிரவன் அவனுக்கு சியமந்தகம் என்ற மணியைப் பரிசாக அளித்தான். அந்த மணியைத் தன் கழுத்தில் தரித்துக் கொண்டு அவன் துவாரகை நகரத்து வீதியில் வந்ததும், கதிரவனே வந்தானோ என அனைவரும் ஐயமுற்றனர். மணியின் ஒளியில் தரித்திருக்கும் மனிதனைப் பார்க்க முடியவில்லை. இந்த அதிசயத்தை நகரத்து ஜனங்கள் கண்ண

னிடம் தெரிவித்தார்கள். "கதிரவன் உம்மைக் காண வருகிறான்" என்று தவறாகச் செய்தி சொன்னார்கள். இதைக் கேட்டுக் கண்ணன் புன்னகை செய்தான். "வருபவன் கதிரவன் அல்ல. மணியை அணிந்து கொண்டிருக்கும் ஸத்ராஜித்" என்றான்.

ஸத்ராஜித் தனக்குக் கிடைத்த மணியைத் தனது வீட்டில் பூஜை செய்யும் இடத்தில் வைத்துக் காப்பாற்றி வந்தான். சியமந்தகமணி தான் இருக்கும் இடத்தில் எட்டுபாரம் (நூறு பலம் ஒரு துலாம், இருபது துலாம் ஒருபாரம்) பொன்னை உற்பத்தி செய்யும் சக்தி வாய்ந்தது. அங்கு வறுமையும் தீமையும் அணுகமுடியாது. ஒரு சமயம் கண்ணன் அம்மணியை அரசனான உக்ரஸேனனுக்குக் கொடுக்க வேண்டும் என்று எண்ணினான். ஆனால் ஸத்ராஜித் மணியைக் கொடுக்க ஒப்பவில்லை.

ஒரு தினம் ஸத்ராஜித்தினுடைய இளைய சகோதரன் ப்ரஸேனன், மணியைக் கழுத்தில் கட்டிக் கொண்டு வேட்டையாடக் குதிரைமீதேறிக் கானகம் சென்றான். அங்கு ஒரு சிங்கம் குதிரையோடு அவனையும் கொன்று விட்டது. மணியை எடுத்துக் கொண்டு சிங்கம் ஒரு குகையில் நுழைந்தது. அவ்விடத்தில் வசித்துக் கொண்டிருந்த ஜாம்பவான் மணிமீது ஆசை வைத்தார். உடனே சிங்கத்தைக் கொன்று மணியைத்தாம் பறித்துக் கொண்டார். அதைத் தம் குமாரனுக்கு விளையாடக் கொடுத்தார்.

நிற்க, வேட்டைக்குச் சென்ற ப்ரஸேனன் திரும்பவில்லையே என்று ஸத்ராஜித் துயரமடைந்தான். "மணி வேண்டுமென்று கண்ணன் என்னைக் கேட்டான். கண்ணனே என் தம்பியைக் கொன்று மணியைப் பறித்திருக்க வேண்டும்" என்று அபவாதத்தைத் தன் சார்பாரிடம் பரப்பினான். இது கண்ணன் காதிலும் விழுந்தது. கண்ணன்உடனே காட்டுக்குப் புறப்பட்டான். கண்ணனோடு பலர் பின்தொடர்ந்து சென்றனர். அங்கு இறந்து கிடக்கும் குதிரையையும் ப்ரஸேனனையும் சிங்கத்தையும் கண்டனர். தன்னுடன் வந்தவர்களை வெளியே இருக்கும்படி கட்டளை இட்டுவிட்டுக் கண்ணன் ஜாம்பவான் வசித்து வந்த குகைக்குள் நுழைந்தான்.

குகைக்குள் ஜாம்பவானுடைய மைந்தன் மணியை வைத்து விளையாடிக் கொண்டிருந்தான். கண்ணன் அவனை அணுகினான். புது மனிதனைக் கண்டதுமே குழந்தையின் தாய் கூச்சலிட்டாள். குரலைக் கேட்ட ஜாம்பவான் அவ்விடம் வந்தார். கண்ணனும் ஜாம்பவானும் ஒருவரோடொருவர் போரிட்டனர். இருபருந்துகளைச் சளைக்காது இருபத்தி எட்டு நாள் சண்டை செய்தனர். முடிவில் ஜாம்பவான் அடியுண்டு உடல் சோர்ந்து ஆச்சரியத்தை அடைந்து கண்ணன் கடவுள் என்று அறிந்து கொண்டார். யமனையே வதைக்கும் வைகுண்டவாசியான மாதவனுடன் தாம் எவ்விதத்திலும் போர் செய்ய முடியாது என்று தெளிந்தார். பல விதத்தில் கண்ணனைத் துதித்தார். "எவருடைய சினத்தினால் சிறிது ஒளி கொண்ட பார்வையில் கலங்கிய கடல் மன்னவன் பயம் கொண்டு வழிதந்து நின்றானோ; எவர் கடலைக் கடக்க அணையைக் கட்டினரோ; எவரால் இலங்கை எரிக்கப்பட்டதோ; எவர் அம்பு ராவணன் தலைகளைத் தரைமீது தள்ளியதோ; அந்த ராமனென்றே உம்மை நான் எண்ணுகிறேன்" என்றார். கண்ணன் மகிழ்ந்தான். போரை நிறுத்தி ஜாம்பவானிடம் பேசினான். "கரடிகளுக்கு வேந்தனே! இந்த மணியினால் எனக்கு ஒரு அபவாதம் ஏற்பட்டது. அதை நீக்கவே மணியைத் தேடி இங்கு வந்தேன்" என்று மணியின் வரலாற்றை ஜாம்பவானுக்கு எடுத்துரைத்தான். ஜாம்பவான் மணியைக் கண்ணனிடம் கொடுத்து, அதோடு தமது மகள் ஜாம்பவதியையும் காணிக்கையாகக் கொடுத்தார்.

வெகு நாளாகியும் குகைக்குள் சென்ற கண்ணன் வெளி வரவில்லையே என்று கூட வந்தவர்கள் கவலை கொண்டு நகரத்துக்குத் திரும்பிச் சென்றார்கள். சுற்றத்தாரும் நகரத்தாரும் கண்ணனுக்குக் கேடொன்றும் வராதிருக்க அம்பிகையை ஆராதனை செய்தார்கள். "கண்ணனைக் காண்பீர்கள்" என்று துர்க்கை அவர்களுக்கு உறுதி கூறினாள். அத்தருணம் கண்ணனே ஜாம்பவதியுடன் அங்கு தோன்றினான். மாய்ந்தவன் தோன்றினானென அனைவரும் களிப்புற்றனர்.

கண்ணன் ஸத்ராஜித்தைத் தன் கொலு மண்டபத்துக்கு வரவழைத்து மணியை அவனிடம் கொடுத்தான். ஸத்ராஜித்துக்கு வெட்கம் மேலிட்டது. மணியைப் பெற்றுக் கொண்டு தலைகுனிந்தவனாய் வெளியே சென்றான். தான் செய்த தவற்றை அடிக்கடி எண்ணி மனம் நொந்தான். கண்ணனைப் பகைத்தோமே என்று மனம் கலங்கினான். தனது தவற்றைப் போக்குவது எவ்விதம் என்று ஆலோசனை செய்யலானான். தனது

மகளையும் மணியையும் கண்ணனுக்கு கொடுக்கத் தீர்மானம் செய்தான். அழகு வாய்ந்த சத்யபாமா என்ற சத்ராஜித்தின் பெண்ணைக் கண்ணன் மணம் செய்து கொண்டான். ஆனால் மணியை மட்டும் கண்ணன் ஏற்றுக்கொள்ளவில்லை. "சூரியனுக்குப் பக்தனான உம்மிடமே மணி இருக்கட்டும்" என்று கூறி மணியை ஸத்ராஜித்திடம் கொடுத்தான்.

### நாரதர் கண்ட கண்ணன்

ஒரு சமயம் கண்ணன் பாண்டவர்களைக் காணவேண்டி இந்திரப்ரஸ்தம் சென்றான். அங்கு வசித்து வருகையில் ஒரு நாள் அர்ஜுனனுடன் வேட்டையாடச் சென்றான். கானகத்தில் யமுனை நதிக்கரையில் அர்ஜுனன் ஓர் அழகிய பெண்ணைப் பார்த்தான்! 'நீ யாரெ'ன்று வினவினான். தான் சூரியனுடைய மகள் என்றும், விஷ்ணுவை அடைய விருப்பம் கொண்டு காத்திருப்பதாகவும் தனது பெயர் காளிந்தி என்றும் அவள் உரைத்தாள். அவளைத் தேரில் ஏற்றிக்கொண்டு கண்ணன் நகரை அடைந்தான்.

நாளடைவில் கண்ணன் மித்ரவிந்தை, கோசல அரசன் மகள் சத்யா என்பவர்களையும் மணந்தான். நரகாசுரனால் தனது குண்டலமும், குடையும், நகரும் பறிக்கப்பட்டன என்று கண்ணனிடம் வந்து இந்திரன் முறையிடவே, சத்யபாமாவுடன் கருடன் மீதேறிக் கொண்டு கண்ணன் அரக்கனை வதம் செய்யச் சென்றான். கொடும் போரில் அவனை வதம் செய்து, அவனால் சிறை வைக்கப்பட்டிருந்த பதினாறாயிரம் அரசகுமாரிகளையும் மணந்து கொண்டான்.

ஆனால் கண்ணனுடைய மனைவிமார் ஒவ்வொருவரும் கண்ணன் தனது வீட்டிலேயே இருப்பதாக எண்ணினார்கள். அவனுடைய உண்மை நிலையை அவர்கள் அறியவில்லை. எவ்விடமும் பரவி நிற்கும் பரம்பொருளின் மனத்தை வெல்லவும் அவர்கள் திறமை அற்றவர்களாயிருந்தனர். கண்ணனுக்குப் பலவாறு பணிவிடை செய்து தன்னுடன் தனியே இருக்கிறான் என்று ஒவ்வொரு மனைவியும் எண்ணினாள்!

இந்த வைபவத்தைக் கண்ணாரக் காண வேண்டும் என்று நாரதர் துவாரகைக்குச் சென்றார். மலர் மணம் கமழும் சோலைகளும், மணிமயமான மண்டபங்களும், ஆகாயம் அளாவும் மாளிகைகளும் நிறைந்த நகரத்தைக் கண்டு மகிழ்ந்து, கண்ணனுடைய அந்தப்புரத்தில் பிரவேசித்தார். அங்கு, சேடிகள் பலர் சூழத் தனதருகிலிருக்கும் கண்ணனுக்கு வெண்சாமரத்தால் வீசுகின்ற ருக்மிணியைக் கண்டார். நாரதரைக் கண்டதுமே கண்ணன் எழுந்து வரவேற்று உபசாரம் செய்தான். நாரதர் கண்ணனைத் தோத்திரம் செய்தார். "உமது இச்சைக்கிணங்கி தேவரீர் அவதாரம் செய்திருக்கிறீர் என்பதை நன்கறிவேன். உமது தாள்களைக் கண்டேன். வேறு நினைவின்றி உமது தாமரைத் தாள்களே எனது எண்ணத்தில் என்றென்றும் பதிந்திருக்க அருள்வீராக" என்றார்.

பிறகு நாரதர் அவ்விடம் விட்டகன்று மற்றோர் அரண்மனைக்குள் நுழைந்தார். அங்கு மனைவியுடன் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருக்கும் கண்ணனைக் கண்டார். ஒன்றுமறியாதவர் போல் கண்ணன் பரபரப்புடன் எழுந்து "நீங்கள் எப்பொழுது வந்தீர்கள்? என்னால் ஆவதென்ன?" என்று வினவினான். ஒன்றும் சொல்லவொண்ணாது, பேச்சின்றி நாரதர் வேறொரு வீடு சென்றார். அங்கு கண்ணன் தனது மைந்தர்களுடன் விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டார். மற்றொரு வீட்டில் கண்ணன் நீராடச் சித்தமாயிருந்தான். வேறு வீட்டில் ஓமம் வளர்த்துக் கொண்டிருந்தான்; ஒரு வீட்டில் அந்தணருக்கு அன்னம் அளித்துக் கொண்டிருந்தான்; ஒரு வீட்டில் சீடர்களுக்கு வாள் வித்தை கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தான்; ஒரு வீட்டில் கட்டிலில் படுத்துறங்கிக் கொண்டிருந்தான்; ஒரு வீட்டில் மந்திரிகளுடன் ஆலோசனை செய்து கொண்டிருந்தான்; ஒரு வீட்டில் மனைவியுடன் வேடிக்கை பேசி நகைத்துக் கொண்டிருந்தான்; ஒரு வீட்டில் பூஜை செய்து கொண்டிருந்தான்; ஒரு வீட்டில் தோட்டம் அமைத்துக் கொண்டிருந்தான்; ஒரு வீட்டிலிருந்து வேட்டையாட வெளியேறிக் கொண்டிருந்தான்.

மாதவனின் மாயையைக் கண்டு நாரதர் கண்ணீர் சொரிந்து கண்ணனிடம் பின்வருமாறு மொழிந்தார். "ஹே! யோகேச்வரா! உமது தாளைத் துதித்து உம மாயையை அறிந்தேன். புவியைப் பரிசுத்தமாக்கும் உமது லீலைகளைப் பாடிப் புவியெல்லாம் சுற்றி வருகிறேன். விடை அளிப்பீர்" என்றார். அதற்குக் கண்ணன் "நாரதரே! தர்மத்தைப் படைத்து, தர்மத்தை எடுத்துரைத்து, தர்மத்தை ஆமோதித்து நிற்பவன் நானே. இந்த வேடமெல்லாம் லோகத்துக்குக் காண்பிக்க வேண்டிக் கடைப்பிடித்திருக்கிறேன். உமக்கு இதில் மோகமேது?" என்றான் புன்னகையுடன். பலராகப் பிரிந்திருந்த கண்ணனை ஒருவனாகக் கண்டார் நாரதர்.

''நான் இந்த ட்ரௌஸரைத் தைத்து வெகுகாலமாகி விட்டதல்லவா, ஐயா ?''

''ஐந்து வருஷங்களுக்கு மேல் ஆகிவிட்டன ! அதனால்தான் நான் எப்பொழுதும் விரும்புவது

# பின்னியின் ட்ரில்''

உயர்தர பருத்தியிலிருந்து தயாரிக்கப்பட்ட பின்னியின் ட்ரில்—வெள்ளையோ அல்லது காக்கியோ—பல வருஷங்களுக்கு நீடிக்கிறது. பல சலவைகளுக்குப் பிறகும் அதன் கவர்ச்சித்தன்மை கெடாமல் இருக்கிறது. உங்கள் தையற்காரரை கேளுங்கள், பின்னியின் ட்ரில்தான் நீங்கள் வாங்கக்கூடியது என்பார்.

BY 650-a

பின்னி துணிகள் எப்பொழுதும் கன்டரோல் விலைக்கு விற்கப்படுகின்றன என்பது ஞாபகமிருக்கட்டும்.



பக்கிங்ஹாம் & கர்னடிக் கம்பெனி லிமிடெட்
மானேஜிங் ஏஜெண்டுகள்: பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்

# பிரம்மச்சாரிக் குடித்தனம்

இந்திரா

"அந்தச் செட்டித் தெரு வீட்டில் மூன்று மாதங்களாக வாடகை பாக்கி நிற்கிறதே. நீங்களாவது போய் விசாரித்து விட்டு வரக்கூடாதா?" என்று கவலையுடன் கேட்டாள் பார்வதி.

"எனக்கு எங்கே ஒழிவு இருக்கிறது? கேசவனை அனுப்பிக் கேட்டு வரச் சொல்ல வேண்டும்" என்று பதிலளித்தார் ராமசுப்பு.

"முதல்தேதி வந்ததும் வீடு தேடி வந்து தவறாமல் வாடகையைக் கொடுத்து விட்டுப் போனவரை இல்லாததும் பொல்லாததும் சொல்லிக் காலி செய்ய வைத்து விட்டு இப்போது தவிக்க வேண்டி யிருக்கிறது" என்றாள் பார்வதி.

"இப்போது என்ன முழுகி விட்டது? ஒவ்வொருவரும் தீப்பெட்டி மாதிரி வீட்டைக் கட்டிப் போட்டு விட்டுக் கண்ணை மூடிக் கொண்டு வாடகையை வாங்கிக் குவிக்கிறார்கள். குளுகுளுவென்று வாழையும், தென்னையும், தோட்டமும் தாராளமாகக் கடல் போன்ற வீட்டுக்கு நாற்பது ரூபாய்தான் வாடகை வாங்குவதா? அந்தக் கிருஷ்ணமூர்த்திக்கு அதற்கு மேல் கொடுக்க வகை கிடையாது என்றுதான் அவனை ஒழித்துத் தொலைத்தேன். தற்போது இருக்கும் ராமமூர்த்தியும் கறாராக மாதம் பிறந்ததும் அறுபது ரூபாயைக் கொண்டு வந்து தரவில்லையா என்ன? நாம் கேட்காததால் அவர்களுக்கும் அசுவாரஸ்யம் மெதுவாகத் தரலாமென்று. என்ன அவசரம்? சேர்ந்து வந்து விட்டுப் போகிறது" என்றார் ராமசுப்பு.

"என்னவோ எனக்குக் கிருஷ்ணமூர்த்தியைக் காலி செய்ய வைத்ததில் மனமே இல்லே. நேற்றுக்கூட அவர் மனைவி 'தற்போது போன இடம் ரொம்ப அசௌகர்யமாக இருக்கிறது' என்று கண்ணில் தண்ணீர் வராத குறையாகச் சொல்லி விட்டுப் போனாள்" என்றாள் பார்வதி.

"மறுபடியும் அதையே சொல்கிறாயே, குழந்தையும் குட்டியுமாகக் குடித்தனம் வைத்து வீட்டைப் பாழடிப்பதைவிட, ஒண்டிக்கட்டைகளைக் குடி வைப்பது தான் நல்லது. இப்போது ராமமூர்த்தியோடு இரண்டு மூன்று பேர்கள் இருக்கிறார்கள். எல்லோரும் சேர்ந்து சிரமமில்லாமல் வாடகையைக் கொடுத்து விடுவார்கள். அவர் பொறுப்பாக வாடகையை வாங்கிக் கொடுத்து விடுவார். கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லே" என்றார் ராமசுப்பு.

"என்னவோ, எல்லாம் உங்கள் இஷ்டம். கேசவனை அனுப்பி வையுங்கள்" என்று கூறிவிட்டு வீட்டினுள்ளே போனாள் பார்வதி.

ராமசுப்பு தோட்டத்தில் செடிகளுக்குத் தண்ணீர் விட்டுக் கொண்டிருந்த கேசவனை அழைத்து ராமமூர்த்தியைச் சந்தித்துவிட்டு வரும்படி உத்தரவிட்டார். "கண்டிப்பாகப் பேசி மூன்று மாதத்து வாடகையையும் வாங்கி வந்து விடு. தேங்காய் பறித்து மூன்று மாதங்களாகின்றன. அதையும் ஓர் ஆளை வைத்துப் பறித்து விடு. எலுமிச்சை மரம் காய்த்திருக்கிறதா, பார்!" என்று அடுக்கடுக்காகக் கட்டளையிட்டு அனுப்பினார்.

சிறிதுநேரத்தில் கேசவன் தலையைச் சொறிந்து கொண்டு வந்து சேர்ந்தான். "ஏன்டா! வாடகை கொடுத்து விட்டாரா?



என்ன சொன்னார்?" என்று கேட்டார் ராமசுப்பு.

"அவரை வீட்டிலேயே காணலீங்க. இன்னும் யாரோ நாலு சிறு பிள்ளைகளாக இருக்கிறார்கள். கேட்பதற்குக் கூடச் சரியாகப் பதில் சொல்லாமல் ஏதேதோ கலாட்டா செய்கிறார்கள்" என்றான் கேசவன்.

அன்று மாலையில் ராமமூர்த்தியைத் தேடிக்கொண்டு கிளம்பினார் ராமசுப்பு. வீட்டில் நுழைந்து, 'சார்! சார்!' என்று உரக்கக் கத்தினார்.

ஹாலில் கண்ணாடி எதிரில் ஒரு வாலிபன் கையில் ரேஸருடன் மிகக்

கவனமாக முக க்ஷவரத்தில் ஈடுபட்டிருந்தான். அவர் நிற்பதையோ, கூப்பிடுவதையோ சிறிதும் மதிக்காமல் கருமமே கண்ணுயிருந்தான். அப்போது உள்ளேயிருந்து அலங்கார ரூபமாக மற்ருெரு யுவன் வெளியே தோன்றினன். ராமசுப்புவைக் கண்டதும், "யாரையா நீர்?" என்று வெடுக்கென்று கேட்டான்.

"நான்...நான்..." என்று குழறினர் ராமசுப்பு.

"வீடு திறந்திருக்கேன்னு ஏதாவது யாசகத்துக்கு வந்தீரா? போம், போம்" அவர் மறுமொழி பேசுவதற்குள் அவன் செருப்பை மாட்டிக் கொண்டு தெருவில் இறங்கி விட்டான். ராமசுப்புவுக்கு அதிர்ச்சியிலிருந்து மீள ஐந்து நிமிஷங்கள் பிடித்தன. கடைசி ஆசையாக வாசற் பக்கத்து அறையில் படுத்திருந்தவரிடம் நெருங்கி, "ராமமூர்த்தி!" என்று அழைத்தார்.

"போ! போ! இப்போது தூங்கும் போது வந்து தொந்தரவு செய்யாதே. நாலு மணிக்கு மேல் அழுக்குப் போடுறேன்" என்று சொல்லி விட்டுப் புரண்டு படுத்தான் அந்த இளைஞன்.

**வீ**ட்டில் நுழையுமுன்பே, "என்ன ஆயிற்று? வாடகை வந்து விட்டதா?" என்று கேட்டாள் பார்வதி.

"உஷ்! நீ வேறு சும்மா தொணதொணக்காதே. நாளைக்கு ஞாயிற்றுக் கிழமை. நிச்சயம் ராமமூர்த்தியைச் சந்தித்து விடலாம்" என்று வயிற்றெரிச்சலை அடக்கிக் கொண்டு பதில் அளித்தார் ராமசுப்பு.

இப்படி ஒரு வீட்டைக் கட்டிப் போட்டு விட்டு அலைய வேண்டிய விதியா என்று நொந்த வண்ணம் ஞாயிற்றுக்கிழமை மாலை செட்டித் தெரு வீட்டில் நுழைந்தார் ராமசுப்பு. ஹாலில் ஏழெட்டு வாலிபர்கள் குழு மும்முரமாகச் சீட்டாட்டத்தில் ஈடுபட்டிருந்தது. அங்கேயும் ராமமூர்த்தி இல்லை. ராமசுப்புவுக்கு வீட்டைச் சுற்றி ஒரு முறை வந்ததும் வயிற்றைச் சங்கடம் செய்தது. என்ன அலங்கோலம்! பக்கம் பக்கமாக ஷர்ட்டுகளும் துணிகளும் தொங்கின. ஒரு மூலையில் கடைவைக்கலாம் போல் விதம் விதமான செருப்புகளும், பூட்ஸுகளும் தாறுமாறுகக் கிடந்தன. காலை வைக்கும் இடமெல்லாம் பழைய பிளேடுகளும் ஆணிகளும் குத்தின. வீடுமுழுதும் சுற்றிவந்த பிறகும் அவரை ஒருவரும் கவனிக்கவில்லை. பேசப் பிடிக்கா விட்டாலும் மறுபடியும் ஹாலுக்கு வந்து, "ராமமூர்த்தி இல்லையா?" என்று கேட்டார். சீட்டாட்டக் குழாம் கவனம் கலைந்து அவர் பக்கம் திரும்பியது. முதல் நாள் பார்த்த வாலிபன் மறுபடியும் அவரை நோக்கி, "யாரையா நீர்?" என்று கேட்டான்.

"எனக்கு ராமமூர்த்தியைப் பார்க்க வேண்டும்."

"அவர் இல்லை. போய் வாரும்." அலங்கார வாலிபன் ஆட்டத்தில் கவனம் செலுத்தலானன். "நான் இந்த வீட்டுச் சொந்தக்காரர்" என்று அழுத்தமாகக் கூறினர் ராமசுப்பு.

"வீட்டுச்சொந்தக்காரரா?" என்று அதிசயமாகக் கூவினன் ஒரு கோணல் கிராப்புக்காரன். எல்லோரும் ஏதோ விநோதப்பொருளைப் பார்க்கிற மாதிரி அவரை நோக்கினர்.

"இந்த வீட்டுக்கு ஒரு சொந்தக்காரரா? எத்தனை சொந்தக்காரர்கள்? இந்த வீடு ராமமூர்த்தியினுடையது என்றல்லவா நான் நினைத்தேன்?" என்ருன் ஜிப்பா அணிந்த ஒருவன்.

"உங்கள் அபிப்பிராயமெல்லாம் எனக்குத் தேவையில்லை. ராமமூர்த்தி எங்கே?"

"அவர்தான் இல்லையென்று சொல்லியாயிற்றே. இன்னும் எங்களுக்கு இடைஞ்சலாக நின்று கொண்டு ஏன் கழுத்தையறுக்கிறீர்?" என்று எரிந்து விழுந்தான் அலங்கார வாலிபன்.

"இது என்ன காவாலித்தனமாக இருக்கிறது! நான் வீட்டுச் சொந்தக்காரன்.

மூன்று மாத வாடகை பாக்கி நிற்கிறது. வீடு தேடி வந்த என்னை அவமதிப்ப தாவது!'' ராமசுப்பு இரைந்தார்.

''இப்போது யார் யாரை அவமதித்து விட்டார்கள்? நீங்கள் வீட்டுச் சொந்தக் காரர் என்று இங்கே யாருக்குத் தெரி யும்?'' என்று நிதானமாகப் பதிலளித் தான் ஜிப்பாக்காரன்.

''உங்கள் ஒருத்தர் மூஞ்சியையும் எனக்குத் தெரியாது. என்னையும் யாருக் கும் தெரிய வேண்டியதில்லை. நான் பார்க்க வந்தது ராமமூர்த்தியை. அவர் எங்கே என்பதை மட்டிலும் சொல்லித் தொலையுங்கள்'' என்றார் ராமசுப்பு படபடப்பாக.

''ராமமூர்த்தியா? அவரை எங்கே பார்க்க முடியும்? அவர் இந்த அறையை விட்டு மாற்றிப் போய் இரண்டுமாதங்க ளாகின்றனவே!'' என்று கூறினான் இதுவரையில் பேசாமலிருந்த ஒருவன். ராமசுப்புவுக்கு அந்த வீடே 'கிர்'ரென்று சுழல்வது போலிருந்தது.

''மாற்றிப் போய் விட்டாரா? அவர் எப்படிப் போகலாம்? பெரிய மோசடி யாக இருக்கிறதே? நான் ஒருத்தரிடம் பொறுப்பாகச் சாவியைக் கொடுக் கிறது. அவர் கண்டவர்களை உள்ளே நுழைய விட்டுச் சொல்லாமல் போகிற தாவது? எல்லோரும் சத்திரம் மாதிரி உள்ளே புகுந்து கொட்டமடிக்கிறீர்கள். இது எந்த நியாயத்துக்கு அடுக்கும்?'' என்று கூச்சலிட்டார் ராமசுப்பு.

''இந்தக் கேள்வி ராமமூர்த்தியைப் பார்த்துக் கேட்க வேண்டியது. அவர் பார்த்து எங்களை இருக்கச் சொன்னார். நாங்கள் இருந்து வருகிறோம்'' என்றான் கோணல் கிராப்பு.

''இந்த அரட்டல் பேச்செல்லாம் என் னிடம் நடக்காது. எனக்கு இப்போது வீட்டுச் சாவி கொடுத்தாக வேண்டும்'' என்றார் ராமசுப்பு.

''பூ? இது என்ன பிரமாதம், இதற்கு இவ்வளவு சண்டை ஏன்? அதோ சாவி மாட்டியிருக்கிறது. தாராளமாக எடுத்துப் போகலாம்'' என்று சுவரைக் காட்டினான் அலங்கார வாலிபன்.

'கொல்'லென்று சிரிப்பொலி எழுந் தது. ராமசுப்புவுக்கு எல்லோரையும் நாலு அறை வைக்கலாம்போல் ஆத் திரம் வந்தது.

''என்னிடம் விளையாடினால் நான் ரொம்பப் பொல்லாதவனாக இருப்பேன். மரியாதையாக வீட்டைக் காலி செய்து விடுங்கள்'' என்றார்.

''நாங்கள் என்ன பாத்திரமும், மேஜை நாற்காலிகளும் வீடு நிறைய வைத்துக் கொண்டா குடும்பம் நடத்துகிறோம் காலி செய்து விட! இந்த வீட்டை எல் லோரும் காலியாக வைத்திருக்கிறோம். சம்பளம் வந்ததும், ஹோட்டல், லாண்டரி, ஸலூன் யாவற்றுக்கும் எண்ணிக் கொடுத்து விட்டுக் கையை உதறிக்கொண்டு வீடு திரும்புகிறோம். ஆளுக்கு ஒரு பெட்டி, அல்லது பைதான் சாமான். பூட்டி வைக்க எங்களிடம் ஏதும் இல்லை. ஒவ்வொருத்தர் ஒவ்வொரு நேரத்துக்கு வருவதால் வீடு பூட்டுவதே கிடையாது'' என்றான் கோணல் கிராப்பு.

''பொறுப்பற்ற பயல்கள்! கேட்கக் கேட்க எல்லாம் ஒரே அக்கிரமமாக வல்லவா இருக்கிறது? ஏன் இப்படி எல் லோரும் தறிதலைகளாக இருக்கிறீர்கள்! குடியும் குடித்தனமுமாக இருப்பவனு யிருந்தால் இப்படி இருப்பானா!''

''சரி, உங்களுக்கு வீட்டுக்குப் போக நாழிகையாக வில்லையா?''

''என்னை வெளியே போகச் சொல்ல நீங்கள் யார்? எல்லாம் சக்கரவட்ட மாகப் பேசுகிறீர்களே! மூன்று மாத வாடகைக்கு யார்-பொறுப்பாளி? அதற் கும் உங்களுக்குமாவது சம்பந்தம் உண்டா இல்லையா?''

''ஏன் இல்லை? நீங்கள் வந்து வாடகை கேட்டு எங்களில் யார், எப்போது இல்லை என்றோம்?''

''சரி. இவ்வளவு நாட்கள்தான் தவறு செய்து விட்டேன். இப்போது வந்து

''உங்க சங்க ஆண்டு விழாவிற்குத் தலைமை தாங்கறதைப் பத்தி ஆட்சேபனை இல்லை. ஆனா எத்தனைமாலைபோடுவீங்க?''

''அது நீங்க எங்கள் சங்கத்துக்குக் கொடுக்கிற நன்கொடையைப் பொறுத்த விஷயம்''

கேட்கிறேன். யோக்கியதை உள்ளவர்களானால் எடுத்து வீசி எறியுங்களேன்."

"மூன்று மாதங்களாக வாயை மூடிக்கொண்டிருந்து விட்டு இப்போது திடீரென்று கேட்டால்? சம்பளம் வந்ததும் கேட்டால் கொடுத்து விட்டுப் போகிறோம். இந்த் நாலு ரூபாய்க்காக எங்களுக்குப் பிரமாதமா?"

"நாலு ரூபாயா! நாலு ரூபாய்! எப்படி? இந்த வீட்டுக்கு எவ்வளவு வாடகை?" என்று தூக்கிவாரிப் போட்டுக் கொண்டு கேட்டார் ராமகப்பு.

மீண்டும் ஒரே அட்டகாசச் சிரிப்பு!

"உங்கள் வீட்டுக்கு வாடகை எவ்வளவு என்று எங்களையே கேட்கிறீரோ? நீங்கள்தான் வீட்டுக்காரரா என்று சந்தேகமாக இருக்கிறதே! சொல்கிறேன், கேளுங்கள்! நாங்கள் இங்கு வசிப்பது மொத்தம் பதினைந்து பேர்கள். ஆளுக்கு நாலு ரூபாயாக மொத்தம் அறுபது ரூபாய் வாடகை. கணக்குப் புரிந்ததா?" என்றான் திப்பாக்காரன்.

"பதினைந்து பேர்களா?" என்று தடுமாறினார் ராமகப்பு. "அட, ஆண்டவனே! பதினைந்து பேர்கள் எப்படி வரலாம்? உங்கள் அக்கிரமத்துக்கு எல்லையே இல்லையா? ராமமூர்த்தி நாலு பேர்கள் என்றுதானே சொன்னார்!"

"ஏனய்யா 'ராமமூர்த்தி, ராமமூர்த்தி' என்று உயிரை விடுகிறீர்! அவர் பொறுப்பு முடிந்து இரண்டு மாதங்கள் ஆகி விட்டன. தற்போது நிகழ்வது எங்கள் ராஜ்யம். அது பற்றிப் பேசினால்தான் எங்களுக்குப் புரியும்" என்றான் கோணல் கிராப்பு.

இன்னும் சிறிது நேரம் அவ்விடம் நின்றால் நிச்சயம் மூளை குழம்பிவிடும் என்று தீர்மானித்த ராமகப்பு 'விர்'ரென்று வெளியே கிளம்பினார். அவர் சொல்லாமல் கிளம்புவதைக் கண்டதும், உள்ளேயிருந்து கிளம்பிய எக்காள ஒலி தெருக்கோடி வரையில் கேட்டது.

அவர் வீடு வாடகைக்கு விட்ட அழகை என்னவென்பது? பார்வதியின் கேள்விகளுக்கு வேறு பதில் சொல்லியாக வேண்டுமே என்ற கவலையோடு இரவு ஒன்பது மணிக்கு வீட்டை அடைந்தார்.

"நம் வீட்டில் குடியிருப்பவர்களென்று இரண்டு பிள்ளைகள் வந்து வாடகைப் பாக்கியை உங்களிடம் கொடுக்கச் சொல்லி விட்டுப் போனார்கள்" என்று கூறி ஒரு கவரைக்கொடுத்தாள் பார்வதி.

ராமகப்புவுக்கு நம்பிக்கையே ஏற்படவில்லை. வீடு தேடி வந்து ஏதோ கிரிசமன் செய்து விட்டுப் போயிருப்பார்கள்" என்று தீர்மானித்துக் கவரை உடைத்தார். உண்மையிலேயே மூன்று மாத வாடகைப் பணம் அதில் இருந்தது. எல்லாம் நல்ல ரூபாய் நோட்டுத்தானா என்று சந்தேகத்துக்கு இரண்டு மூன்று தரம் திருப்பிப் பார்த்துக் கொண்டார். பிறகு கையிலுள்ள கடிதத்தைக் கவனித்துப் படிக்கலுற்றார்.

அன்பார்ந்த ஐயா,

வணக்கம். ராமமூர்த்தி அவர்கள் இந்த ஊரை விட்டு மாற்றிப்போய் உண்மையில் இரண்டு நாட்களே யாகின்றன. அவருக்கு அவகாசமில்லாததால் மொத்த வாடகையையும் தங்களிடம் சேர்ப்பிக்கும்படி கொடுத்துச் சென்றார். மாலை எங்களில் ஒருவர் உங்கள் வீட்டுக்கு வருவதாக இருந்தோம். அதற்குள் பெரிய அசம்பாவிதம் நிகழ்ந்து விட்டது. இந்த வீட்டில் குடியிருப்பவர்கள் ராமமூர்த்தியைத் தவிர நாங்கள் மூவர்தான். தாங்கள் வந்தபோது பார்த்தவர்கள் ஞாயிற்றுக்கிழமைப் பொழுதுபோக்குக்கு வந்திருந்த எங்கள் நண்பர் கூட்டம். எங்களது உல்லாச வேளையில் தாங்கள் விஜயம் செய்ததால் தங்கள் வரவு விரும்பத்தகாததாக ஆகி விட்டது. நீங்கள் வராதிருந்தால் ரொம்ப நல்ல பிள்ளைகளாக வாடகையைக் கொண்டு சேர்த்திருப்போம். தங்களிடம் அம்முறையில் நடந்து கொள்ள நேர்ந்ததற்கு மிகவும் வருந்துகிறோம்.

இப்படிக்கு, தங்கள் அன்புள்ள

ஷண்முகம், சாரதி, கோபால்

தாங்கள் மகிழ்ச்சி அடையக்கூடிய மற்றொரு குறிப்பு — எங்கள் மூவருக்கு இவ்வளவு பெரிய வீடு தேவையில்லாததால் வேறு சிறிய இடம் பார்த்து விட்டோம். இன்னும் ஒரு மாதத்தில் காலிசெய்து விடுகிறோம்.

ஷ. சா. கோ.

"சட்! சுத்த கேலிக் கூத்து! இந்தக் காலத்துப் பிள்ளைகளின் புத்தி எவ்வளவு விபரீதமாக வேலை செய்கிறது! வெறும் விளையாட்டுப் பயல்கள்!" என்று வாய்விட்டு அலுத்துக் கொண்டார் ராமகப்பு.

"என்ன அப்படிச் சொல்கிறீர்கள்? எனக்குக்கூட முதலில் ஒரு மாதிரியாகத்தான் இருந்தது அந்தப் பிள்ளைகளை நேரில் பார்த்ததும் மனசுக்குத் திருப்தியாகி விட்டது. என்ன அடக்கம், என்ன பவ்யம்!" என்று அடுக்கிக்கொண்டே போனாள் பார்வதி.

"போதும் நிறுத்து உன் வர்ணனையை" என்று அவள்மீது எரிந்து விழுந்தார் ராமகப்பு. பேசாமல் உள்ளே போகத் திரும்பிய அவளைக் கூப்பிட்டு, "பார்வதி! நாளைக்கு அந்தக் கிருஷ்ணமூர்த்தியின் மனைவியைச் சந்தித்து அவர்கள் இன்னும் ஒரு மாதத்தில் நம் செட்டித் தெரு வீட்டுக்குக் குடி வந்து விடலாம் என்று சொல். வாடகை முப்பத்தைந்து ரூபாய் கொடுத்தால் போதும் என்றும் சொல்லிவிடு" என்றார் உறுதியாக.

அவரது மனமாற்றத்துக்குக் காரணம் புரியாத பார்வதி திகைத்து நின்றாள்.

Arvind



QUALITY FABRICS

ஷர்டிங்குகள்
பாப்ளின்கள்
கோட்டிங்குகள்
பல ரக - கலர் பிரிண்டுகள்
புட்டாஸ்

•SANFORIZED•
REGISTERED TRADE MARK
of CLUETT PEABODY & CO., INC. U.S.A.

அரவிந்த் மில்ஸ் லிட்.
அஹமதாபாத் - 2

ஸான்பொரைஸ்டு டிரேட் மார்க்கை உபயோகிக்க பதிவுசெய்து கொண்டவர்கள்

**கா**ந்திமதி நதிப் பக்கம் கண்ணைத் திருப்பினான். மேற்கே சிந்துபூந்துறை முதல் கிழக்கே செப்பறை மூக்கு வரை நீர்ப்பரப்புத் தெரிந்தது. எதிர்ச் சாரியிலுள்ள சவுக்குத் தோப்புகள் தம்முள் அடக்கிவைத்திருந்த காரிருளை நீரில் பிரதிபலித்துக் கொண்டிருந்தன. நதி நீருக்கு இதனால் ஒரு கரும் பச்சை நிறம் ஏற்பட்டிருந்தது.

செப்பறைக் காட்டுவழியே பச்சைத் துகிலுடுத்தித் தாம்பிரவருணித் தாய் தனி வழியே நடந்து செல்கிறாளோ என்று எண்ணத் தோன்றியது.

காந்தியின் மனத்தில் எண்ணங்கள் புரண்டன. கீழூர்ச்சாலையில் நடையைத் திருப்பினான். பாளையங்காலின் நுனிக்கரை வரை ததும்பத் ததும்ப நீர். மேடிட்ட இருகரைகளின் அரவணைப்புக்கு அடங்காமல் நீர் வழுவி ஓடிக்கொண்டிருந்தது.

வாய்க்கால் கரையில் கிட்டா பல் தேய்க்க நின்றுகொண்டிருந்தான்.



# ஜடம்

ஸ்ரீ வேணுகோபாலன்

" வா, காந்தி !"

அவன் 'ஈ' யென்று இளித்த பல் அவன் வருகைக்கு முகமன் கூறவா, அல்லது கையில் வைத்துள்ள வேப்பங் குச்சிக்கு இலக்காகவா என்று தெரியவில்லை.

" சுருக்கச் சாப்பிட வந்துடுடா, கிட்டா !" என்றான் காந்தி.

" இதோ, நொடியில் வந்துடறேன் !"

கிட்டா இன்னும் பெரிதாக இளித்துக் காட்டினான். விளையாட்டு முகமூடிச் சித்திரத்துக்குள்ளது

போல் அவன் வாய் காதுவரையில் கிழிந்து தெரிந்தது.

காந்தி குளித்து விட்டுக் கரையேறினாள். குடத்தை இடுப்பில் வைத்து மேல் நீரைச் சற்று வழித்து விட்டாள். முறுக்கிய கயிற்றைப்போல் பிழிந்த புடைவையைத் தோளில் போட்டுக் கொண்டாள்.

படித்துறையின் படியில் கிட்டாவின் பரட்டைத்தலை நிழல் மடிந்து பூதாகாரமாகத் தென்பட்டது. கிட்டா சற்றுத் தொலைவில் நின்றிருக்க வேண்டும்.

"ஆளைப் பிரியைக்கட்டி இழுக்க வேண்டும்! பார்க்கிறதுக்கு நிக்கறான்" என்று முணுமுணுத்தாள் காந்தி.

"போயேண்டா வீட்டுக்கு!" காந்தியின் குரலில் சீற்றம் கலந்திருந்தது.

"இதோ போறேன், காந்தி!"

காந்தி நடந்தாள். தூரத்தில் பாளையங்கோட்டைச் சாலையில் மூக்கத் தேவனின் வில் வண்டி வந்துகொண்டிருந்தது. சிவலப்பேரி ஓட்டன்கள் இரண்டும் பருநடை போட்டு வரவே, சுழலும் குடை ராட்டையைப் போல் வண்டிப் பைதாக்கள் கால் தெரியாமல் சுழன்று கொண்டிருந்தன.

"யாரேனும் வருகிறார்களா?"

காந்தி நடையைத் துரிதப்படுத்த முயன்றாள். உடற் பருமனைத் தாங்காது இரு கால்களும் பக்கவாட்டில் சிறிது சுழன்றே முன்னேறின.

வண்டி சாலையில் நின்று விட்டது.

"ஆச்சியோவ்!"

மூக்குத் தேவன் மூக்கணாங் கயிற்றை இழுத்துப் பிடித்துக்கொண்டு வண்டியை நிறுத்தியிருந்தான்.

"பட்டணத்திலேர்ந்து நம்ப 'எஸமான்' வந்திருக்காஹ. மதியம் அவுகளுக்குச் சாப்பாடு நம்ப வீட்டிலேதான் வச்சுக்கணும்!"

"வரச் சொல்லேன், மூக்கா! நான் தயார்செய்து வைக்கிறேன்."

காந்தியின் பார்வை ஒரு கணம் படுதா மாட்டிய வில் வண்டியுள் பாய்ந்தது. உள்ளே தொங்கும் குஞ்சலத்தைப் பிடித்துக்கொண்டு யாரோ......அந்தப் பட்டணத்து 'எஸமான்'......அமர்ந்திருந்தார்.

"ஹை...இந்தாலே..." என்று வண்டியை ஓட்டினான் மூக்கன்.

வீட்டுக்கு வந்ததும் காந்திக்கு மூச்சு வாங்கியது. குடத்தை வைத்தவள் பாவுளின் ஆழன் காலில் தொங்கிய புடவையை எடுத்து உடுத்திக்கொண்டாள்.

காந்தியை அழைப்பதில் ஊரில் எல்லோருக்கும் சம உரிமை. ஊர் முழுவதற்கும் அவள் உறவு. எல்லோருக்கும் எதற்காகவாவது அவள் உதவி தேவைப்படும். ஒரு வீட்டில் இட்டிலிக்கு அரைத்துக் கொடுப்பாள். ஒரு வீட்டில் மிளகாய்ப் பொடிக்கு வறுத்து இடிப்பாள். ஒரு வீட்டில் முழுச் சமையல் வேலை! ஊதியமோ, வெறும் ஊழியமோ, ஏதாவது வேலை எப்போதும் அவளுக்கு இருந்து கொண்டேயிருக்கும். பிள்ளையார் கோவில், ஆலமர நிழல், வீட்டுப்புறத் திண்ணைகள் என்பன போன்று அவளது சேவையும் ஊருக்குப் பொது.

நினைவு தெரிந்த நாளிலிருந்து இது தான் அவள் வேலை! தாய் செத்துப் போனபோது அவளுக்கு வயது எட்டுக் கூட நிரம்ப வில்லை. அப்போதிலிருந்தே அவள் ஊருக்கே மகளாக வளர்ந்து விட்டாள்!

வளர்ந்திருந்தாளேயொழிய, வளர்ச்சியில் இயற்கை வஞ்சித்திருந்தது. அழகற்றவளாகப் பிறந்து விட்டாள் காந்தி.

அவள் ஊன் வளர்ந்திருந்ததேயொழிய உணர்ச்சி வளரவில்லை.

அவளது உணர்ச்சிகளே என்னவென்று யாருக்கும் தெரியாது. ஊராருக்கு வேலை செய்ய வேண்டுமென்பது அவள் நியதியாகிவிட்டது. அதனால் ஏற்பட்ட ஒரு யந்திர கதியும், நிஜ உறவு முறை இல்லாததால் ஏற்பட்ட சூன்யமும் அவளை வெறும் ஜடமாக்கி யிருந்தன!

காந்தி அரிசி களைய உட்கார்ந்தாள்.

"நான் களைஞ்சு தரட்டுமா, காந்தி!" வாசல் நிலையோரத்தில் கிட்டா நின்று கொண்டிருந்தான்.

"ஒண்ணும் வேண்டாம்! நீ போடா இங்கே விட்டு! அப்புறம் சாப்பிடற போது வா!"

கிட்டா நகர்ந்த வழியாயில்லை.

"காந்தி!"

"என்னவாம்!"

"நீ ஒண்டியா அம்புட்டு வேலையையும் செய்யறதைப் பார்த்தால் ...?"

"எனக்கு வேலை ஒண்ணும் கஷ்டமில்லை, போ!"

"வேலையைப் பத்திக் கவலைப்படல்லே, காந்தி! நீ ஒண்டியா இருக்கயேன்னு..."

"ஏன், உன் மனைவியை ஒத்தாசைக்கு அனுப்பேன்! சொல்லச் சொல்ல நோப்பாளம் மட்டும் தைத்துக் கொண்டு வரும்; போடாங்கறேன்!" காந்தி எழுந்துபோய் நடைக் கதவை ஒருக்களித்துவிட்டு வந்தாள்.

கிட்டா தெருத் திண்ணையில் போய் உட்கார்ந்தான்.

ஊரில் எல்லோரும் அழைப்பதைவிடக் கிட்டா காந்தியை அழைப்பதில் ஒரு தனி உணர்ச்சி இருக்கும். ஊரிலுள்ள எட்டி மரம், வற்றிய ஊருணி வகையில் கிட்டா! மனைவி சண்டை பிடித்துக்

கொண்டு போய் ஒரு வருடம் ஆகிவிட்டது. சென்று போன மனை வாழ்க்கையில் ஏற்பட்டு மறைந்த உணர்ச்சிகள் சிலவற்றுக்குக் காந்திமதியின் உறவு மூலம் உயிர் கொடுப்பதற்கு முயன்றுன் கிட்டா!

மத்தியானம் வாசலில் 'ஆச்சியோவ்!' என்று குரல் கேட்டது. மூக்கத் தேவன் பட்டணத்து ஐயாவுடன் அவன் வீடு தேடி வந்து சேர்ந்திருந்தான்.

"அவரை உள்ளே வரச் சொல்லு, மூக்கா!"

நடராஜன் சாப்பிட அமர்ந்தான்.

"என்னைத் தெரிகிறதா, நடராஜா?"

நடராஜன் ஏறிட்டுப் பார்த்தான்.

"தெரியலியே!"

"இணைற்றடி சீதாலட்சுமி மாமியின் பொண்ணு!"

"யாரு, காந்திமதியா?"

"ஆமாம்!"

நடராஜன் கலத்தில் சாப்பிட்டவாறே ஏதோ யோசித்தான்.

"சிவன் கோவிலில் மதில் சுவர் மேலே சின்ன வயசிலே ஏறி விளையாடுவோமே, ஞாபகம் இருக்கா?" என்றுன் காந்தி.




"அப்போ ஒல்லியா இருந்தயே!" காந்தி சிரித்துக்கொண்டாள்.

"ஊரில் எத்தனை நாள் தாமசம்?"

"ஒரு மாசத்துக்குக் குறையாமல் இங்கே இருப்பேன்...."

"இங்கேயே சாப்பிட்டுக்கோயேன்!"

"அதுக்கென்ன!"

அவன் போன பிறகு காந்திமதி கதவின் பாக்கட்டைப் பிடித்துக் கொண்டு ஒரு கணம் நின்றுள். பிறகு என்ன நினைத்துக் கொண்டாளோ? உள்ளே போய் நார்ப் பெட்டிக் கண்ணுடியை எடுத்துத் தன் முகத்தை ஒரு தடவை பார்த்துக் கொண்டாள்.

அன்று......

இருட்டி நட்சத்திரங்கள் பொரிந்து விட்டன. காந்தி ஆற்றங்கரை அரச மரத்தடியில் உட்கார்ந்திருந்தாள். இரு பத்தைந்து ஆண்டுகளாக இருள் அடித்த அவள் இதயத்தில் சிறு சிறு மின் பொறிகள் பூத்துப் பொரிந்திருந்தன

"யாருடீ? காந்தியா?" கோவிலகத்து மாமி ஆற்றிலிருந்து கரையேறிக்கொண்டிருந்தாள்.

"ஆமாம், மாமி!"

"நன்றுயிருக்கு! பெண்ணுய்ப் பிறந்தவள் இப்படிக் கும்மிருட்டிலே தனியே

# வீட்டு வைத்தியம்





கணவன் சொல்கிறான் :

ஆபீசுக்குக் கிளம்பி ஐந்தே நிமிடங்களில் நான் திரும்பி வந்ததும் என் மனைவியின் முகத்தில் கேள்விக்குறி எழும்பியது. எதை மறந்துவிட்டேன், பர்ஸையா? பவுண்டன் பேனாவையா? . . . அல்லது திடீரென உடம்புக்கு ஏதேனும் . ?

"ஒன்றுமில்லை, என் சட்டைக்குத்தான் உடம்பு!" என்று கூறி முதுகுப்புறத்தைக் காண்பித்தேன். எடை காட்டும் கருவியிலுள்ளது போல பத்து நயா பைசா நுழையும் அளவுக்கு ஒரு கிழிசல்! உடுத்தியபோது என் கண்ணில் படாத இந்தக் கிழிசல், பஸ் ஸ்டாண்டில் என் நண்பனின் கண்ணில் பட்டது. பெட்டியிலுள்ள மற்ற சட்டைகளுக்கோ காலர்களில் கோளாறு!

"ஒரே நிமிஷம் சரிசெய்துவிடுகிறேன். போய்விடலாம் ஆபீசுக்கு" என்று ஊசி நூலை எடுத்தாள் மனைவி.

"வேண்டாம சீக்கு என்று லீவுக் கடுதாசு அனுப்பிவிட்டேன் ஆபீசு சிநேகிதன் மூலமா. இன்னைக்கி ஹாய்யாக இருக்கலாம்" என்றேன்.

ஆனால், 'ஹாய்'யாக என்றால் . . . ? நல்ல துணிகளெல்லாம் இன்னும் அழுக்கு மூட்டையில் ஐக்கியமாகியிருக்கையில், ஒரு பார்க்கோ, மரீனாவோ, சினிமாவோ போகமுடியுமா? பகல் தூக்கம் ஒன்றுதான் முடியும்!

கண்ணை மூட முயன்ற சமயத்தில் வாசற்புறம் பேச்சுக் குரல் ஒலித்தது: "உன் கணவருக்கு என்ன உடம்பு?"—இக் குரல் என் மனைவியின் சிநேகிதியான டாக்டர் கண்ணம்மாவினுடையது.

"தலைவலியும் கதகதப்பும்" என்றாள் என் மனைவி. எனக்குப் பகீரென்றது. டாக்டரம்மா என் உடம்பைப் பரிசோதிக்க வந்துவிடவே, "என் உடம்புக்கு ஒன்றுமில்லை என் சட்டைக்குத்தான் உடம்பு . . ." என்று குழறினேன். கண்ணம்மா புன்னகை புரிந்தாள். நிலைமையை சமாளித்துக்கொண்டு அவளை முன்கட்டுக்கு அழைத்துச் சென்றாள் என் மனைவி.

எனக்கும் தூக்கம் கண்ணைச் சுழற்றியது. அப்புறம் என் மனைவி காப்பி சகிதம் என்னை எழுப்பியபோது மணி நான்கு இருக்கும். ஊஞ்சல் பலகை மீது பளிச்சென்று வீற்றிருந்த ஒரு துணி வரிசை என் கண்களைக் கூச வைத்தது. "சலவையாகி வந்துவிட்டதா" என்று கேட்டேன்.

S/P. 4A-30 TM

"எப்படி? பளிச்சென்றிருக்கிறதா?" என்று முறுவலித்தாள். "நீயே சலவை செய்தது போல நடிக்கிறாயே?" என்றேன்.
"நெஜமா. நான்தான் செய்தேன்!"
"கதைக்காதே. இவ்வளவு பளிச்சென்று? இவ்வளவு துணிகளையுமா? அப்படியொன்றும் அசந்து தூங்கிவிடவில்லை நான். அடித்துத் துவைத்த சத்தம் என்னை எழுப்பியிருக்காதா?" என்றேன். ஆனால் அவள் விளக்கிக் கூறிய பிறகுதான் எனக்கு விவரம் புரிந்தது.

மனைவி சொல்கிறாள்:



மனிதருக்கு மட்டும்தான் டாக்டராக இருப்பவர் என்றெண்ணிய போது துணிகளுக்கும் டாக்டராக மாறிவிட்டாளே இந்தக் கண்ணம்மா! துணி கிழிவதைக் காயம் படுவதற்கும், பித்தான்கள்



உடைவதை எலும்பு முறிவுக்கும் ஒப்பிட்டு அவள் பேசியபோது தமாஷாயிருந்தது. அவள் கூறினாள்:
"உங்கள் கணவர் கூறியதுபோல, துணிகளின் ஆரோக்கியமும் நாம் கவனிக்க வேண்டிய விஷயமே. அழுக்கடைந்த துணிகளை நாள் கணக்காக வைத்துக்கொண்டு அப்புறம் சலவைக்குக் கண்மறைவாக அனுப்பிவிடுவது நல்லதல்ல. சுத்தமான நல்ல சோப்பை உபயோகித்து உடனுக்குடனே நம் கையினாலேயே துவைத்துவிடுவது போலாகாது."
"சொல்வது சரிதான், ஆனால் இப்போது நீங்கள் கட்டிக்கொண்டிருக்கும் வெளுப்பான புடவையைப்போல ஆகுமா வீட்டுச் சலவை?" என்றேன்.
"நல்ல கேள்வி கேட்டீர்கள். இது என் கையாலேயே வெளுத்த புடவை. எல்லாத் துணிகளையும் அன்றன்று நானே துவைத்து விடுகிறேன்" என்றாள். பிறகு கையோடு என்னை அவள் வீட்டுக்கே அழைத்துச் சென்று, தான் அலசி உயர்த்தியிருந்த, தும்பைப் பூத் தோரணம் போன்ற துணி வரிசையைக் காண்பித்தாள். எனக்கு மலைப்புத் தட்டியது.
"ஆனால் ஸன்லைட் விலையைப் பற்றி யோசித்தால் ..." என்று இழுத்தேன். கண்ணம்மா குறுக்கிட்டாள்: ... துணிகள் அடிக்கடி கிழிந்து, அடிக்கடி புதுத்துணி வாங்குவதைப்பற்றி யோசியுங்கள். ஸன்லைட் சலவையில் அந்தக் கவலையே இல்லை. கொள்ளைக் கொள்ளையான நுரை தரும், சக்திவாய்ந்த சோப்பாதலால், அடித்துத் துவைக்காமலேயே பளிச்சென்று வெளுத்துவிடும். ஆகவே துணிகளுக்கு ஆயுசுகெட்டி. அதோடு, கொஞ்சம் ஸன்லைட் உபயோகித்தாலும் ஏராளமான துணிகளை வெளுத்துத் தரும். சோப் செலவும் மிச்சமாகும். ஆகவே, இரண்டு விதத்திலும் சிக்கனம், இல்லையா?"
அவள் சொன்னபடியே ஒரு ஸன்லைட் வில்லை வாங்கிவந்து இந்தத் துணிகளுக்குப் போட்டேன். "கண்ணம்மாவின் வாய்க்கு சர்க்கரைதான் போட வேண்டும்!" என்றேன் என் கணவரிடம். பளிச்சிட்ட அந்தத் துணிகளின் மீது பார்வை பதித்திருந்த அவர் திடீரென முகமலர்ந்து "செல்லம், இன்று நாம், சினிமா சாயங்கால ஆட்டத்திற்குப் போகிறோம், தயாராகு"! என்றார்.



உட்கார்ந்து கொண் டிருக்கலாமோ ? எழுந்து போடி !''

'' பரவாயில்லே மாமி ! தலே கொஞ்சம் கனக்கிறது. அரச மரத்தடிக் காற்று ஆறுதலா யிருக்கு !''

அவள் போன பிறகு நதி ஜலத்தில் ஒரு சலசலப்பு ! யாரோ மறு கரையி லிருந்து வந்து கொண்டிருந்தார்கள். காந்தி கூர்ந்து கவனித்தாள்.

'' நடராஜஞ ?''

'' யாரு காந்தியா ?''

நடராஜன் போய் விட்டான். அவ ளுக்கு மாத்திரம் ஒரே புல்லரிப்பு. அவன் போன திசையையே பார்த்தாள் ! மெல்ல அடித்த இளங்காற்று அவள் தூல சரீரத்தையும் அதனுள் உறங்கி வந்த உணர்ச்சி அலேகளேயும் சிலிர்க்க வைத்துச் சென்றது.

பொதிகையில் சாரல் கட்டிப் பல மாதங்களாகிவிட்டன. நதியிலும் வாய்க் கால்களிலும் புது நீர் பெருகிக்கொண் டிருந்தது.

காந்தியின் உள்ளத்திலும் ஏதோ வெள்ளப் பிரவாகம்!

நடராஜன் ஊருக்கு வந்திருக்கும் நோக்கம் அவளுக்குத் தெரிந்துவிட்டது. அவனுக்கு வடக்கே எங்கேயோ வேலே. யாராவது ஒரு பெண்ணேக் கல்யாணம் செய்து கொண்டு வடக்கே அழைத்துப் போக வேண்டும் !

அன்று சாப்பிடும்போது அவன்தான் பேசினன்.

'' நாளேக்கு அநேகமாகக் கல்யாணம் நிச்சயமாகிவிடும், காந்தி !''

காந்தி சிறிது நேரம் பேசவில்லே. பிறகு, ''பெண் எங்கேயோ ?'' என்றாள்.

'' நம்ப மணப்படை ஜோஸ்யர் பொண்ணு !''

''சாவித்திரியா ?''

'' ஆமாம் !''

காந்தி பேசவில்லே. அவன் சாப்பிட்டு எழுந்து போயும் கூடப் பாத்திரங்களே எடுத்துப் போகக் கை ஓடவில்லே!

அவள் மனத்தில் 'சிவ்' வென்று இருள் புகுந்த மாதிரி தோன்றியது. 'அவ னுக்கும் நமக்கும் என்ன சம்பந்தம் ?'' ...ஆனல் சாவித்திரி...அவளேப் பற்றி நடராஜனுக்குத் தெரியுமா ?'

காலேயில் நடராஜன் வெற்றிலே பாக்குப் பழங்களுடன் புறப்பட்டுக் கொண்டிருந்தான். காந்தி அவன் எதிரே தென்பட்டாள். ''நீயும் வரயா, காந்தி! தாயார் தமக்கை ஒருத்தரும் இல்லாதது இப்போத்தான் தெரிகிறது '' என்றான் நடராஜன்.

'' நடராஜா !'' காந்தி தயங்கினள்.

'' என்ன காந்தி? ''

'' இந்தச் சம்பந்தம் வேண்டாம் !''

'' ஏன் ?'' என்று கேட்டான்.

'' சாவித்திரிக்கு ஒரு காது செவிடு ! இன்னெரு காது பாதிதான் கேட்கும் !''

'' அப்படியா ?''

நடராஜன் விசாரித்துவிட்டான்.

நிச்சயதார்த்தம் நடைபெறவில்லே. காந்திக்கு மனத்தில் எதனுலோ திருப்தி ! நடராஜனேக் காப்பாற்றியதாலா, அல்லது அவன் இன்னும் சில நாட்கள் தன்னுடன் இருக்க வழி ஏற்பட்டதாலா என்று தெரியவில்லே.

அன்று மழை ! வானம் கீழிறங்கி வந்தாற்போல் அடித்து நொறுக்கியது. கோவில் மண்டபத்தின் ஓரத்தில் காந்தி ஒதுங்கிக் கொண்டிருந்தாள். மேலெல்லாம் சொட்டச் சொட்ட நீர் !

'' காந்தி! இங்கே எங்கே வந்தே ?''

மற்றெரு தூண் அருகில் நடராஜன் நின்று கொண்டிருந்தான்.

'' குளிச்சுட்டுப் போகத்தாண்டா !''

'' இந்த மழையிலா ?''

'' மழையானல் என்ன ?''

அவள் அவனே ஏறிட்டுப் பார்த்தாள்.

'' உடம்பெல்லாம் நனேஞ்சிருக்கே, நடராஜா !''

'' மழையிலே அகப்பட்டுக் கொண்டு விட்டேன் !''

'' வீட்டுக்குப் போய் உடனே தலே யைத் துவட்டிக் கொள் ! உன் உடம் புக்கு ஆகாது !''

நடராஜன் அவளேப் பார்த்தான் ! சாதாரண நாட்களானல் அவளும் அவனேப் பார்த்திருப்பாள். ஆனல் இப் போது ..? அவள் ஐட உள்ளத்திலும் பெண்மை தளிர்த்திருந்தது. அவனேக் கண்டதால் ஏற்பட்ட நாணம் அவளே...

''உன் உடம்பெல்லாம் நனேஞ்சிருக்கே, காந்தி !''

'' என்னே மழையும் வெயிலும் ஒன் ணும் செய்யாதடா !''

அவளது பச்சை நிறப் புடவை நனேந்து உடலோடு ஒட்டிக் கொண்டிருந்தது.

'' காந்தி !'' என்றான் நடராஜன். '' உனக்கும் ஓர் அழகு இருக்கிறது !''

'' எனக்கா ?''

அவளுக்கும் நாணம் அழகைத் தந்தது. கண்களில் ஆனந்தக் கண்ணீர் துளித்தது.

வானத்தில் வெடிப்பு விட்டாற்போல் கிறியவாறு மின்னல் ஒன்று ஓடியது. காந்திமதி வானத்தை நோக்கினள். பூமியைக் குளிரக் குளிர வானம் நீராட்டு வது போல் தோன்றியது.

தன்னுள்ளும் குளிரக் குளிர நீரை ஊற்றி யாரோ இறைப்பதைப் போன்ற உணர்ச்சி ! குனிந்த தலேயை அவள் நிமிர்த்தவேயில்லே.

அன்று இரவு பதிவாகச் சாப்பிட வரும் வேளையில் நடராஜன் வரவில்லை. அவளுக்கு மனம் இருப்புக் கொள்ள வில்லை. அவள் தங்கியிருந்த வீட்டுக்கு மெதுவாகச் சென்றாள்.

"நடராஜா!"

நடையைத் தாண்டி அவள் ரேழியுள் நுழைந்தாள்.

"வா, காந்தி!"

நடராஜன் சுவரோரத்தில் படுக்கை விரித்துப் படுத்துக் கொண்டிருந்தான்.

"உடம்பு சரியில்லையா?"

"ஆமாம், ஜுரம்!"

"நான்தான் சொன்னேனே, மழையிலே நனையாதேன்னு; கஞ்சி வைச்சுக் கொண்டு வரவா?"

"ம்!"

அவள் கஞ்சியைக் கொண்டு வரும் போது மீண்டும் மழை பலமாகப் பெய்ய ஆரம்பித்து விட்டது.

உள்ளே நுழைந்தவாறே "நடராஜா!" என்று அழைத்தாள். அவன் பதில் கொடுக்கவில்லை.

"தூங்கி விட்டானோ?"

காந்தி மெதுவாக அருகில் சென்று, அவன் கைகளைப் பிடித்துப் பார்த்தாள். அனலாகக் கொதித்தது.

"நடராஜா!"

அவன் எழுந்திருக்கவில்லை. அவள் மெதுவாக அவன் மீது போர்வையை விரித்தாள்.

அவனுக்கு நினைவு நடு இரவில் வந்தது. இருளில் யாரோ உட்கார்ந்திருப்பது போல் தெரியவே, "யார்?" என்று கேட்டான்.

"நான்தான், காந்தி! தூங்கு!" காந்திமதி மீண்டும் போர்வையை அவன் மீது இழுத்துப் போர்த்தினாள்.

"ஜுரம் எப்படி இருக்கிறது?" என்று கேட்டவாறே அவள் தன் கைகளை அவன் நெற்றியில் வைத்துப் பார்த்தாள். சிறிது வியர்த்து விட்டிருந்தது.

"தலையைக் கொஞ்சம் வலிக்கிறது."

நெற்றியின் இரு பொட்டுக்களையும் அழுத்தினாள். அவனுக்கு வலி சிறிது சிறிதாகக் குறைவதுபோல் பிரமை. மீண்டும் கண்களை மூடிக் கொண்டான்.

ஒரு வாரத்தில் அவன் உடல் நிலை சரியாகிவிட்டது.

இப்போதெல்லாம் காந்தி வீட்டை விட்டு அதிகமாய் வெளியே போவதில்லை. "காந்தி, கொஞ்சம் அப்பளத்துமா இடிக்க வேண்டுமேடி" என்று யாராவது சொன்னால், "மாமி! கையெல்லாம் வலிக்கிறது" என்று கூறிவிடுவாள். வெளியில் போய் வேலை செய்வதில் ஒரு வெறுப்புப் பிறந்து விட்டது! எப்போதும் வீட்டிலேயே வேலை; சாமான்களை முன்போல் அவள் ஒழுங்கீனமாக வைப்பதில்லை. பாத்திரங்கள் களிம்பு மாறி இப்போது ஒளி சிந்தத் தொடங்கின. ஒழிந்த நேரங்களில் தாயக் கட்டம் ஆடுபவள் இப்போது தன் புடவைகளை மடித்துவிடத் தலைப்பட்டாள்.

அன்று அவளுக்கு மனம் ஏனோ சரியில்லை! காலையிலிருந்து உலைநீர் வைக்கக் கூட மனம் வரவில்லை.

போது விடிந்ததுமே நடராஜன் இரண்டாவது தடவையாகப் பெண் பார்க்கப் பாளையங் கோட்டைக்குப் போய் விட்டான்.

வெய்யில் ஏறிக் கொண்டிருந்தது! மெதுவாகப் போய்ப் பெட்டகத்தைத் திறந்தாள். அதில் அன்று காலை நடராஜன் சாப்பாட்டுச் செலவுக்காக அவளுக்கு அளித்த மூன்று பத்து ரூபாய்த் தாள்கள் மேலாகத் தெரிந்தன.

அவள் முகத்தைச் சுளித்துக் கொண்டாள். தாள்களைக் கசக்கிப் பெட்டகத்தின் அடியில் திணித்து வைத்தாள்.

மாலையில் பாளையங் கோட்டைச் சாலையில் காந்தி 'லொங்கு, லொங்' கென்று நடந்து வந்து கொண்டிருந்தாள். ஆற்றங்கரைப் பாதை வந்ததும் மூத்துமாமி அவளை மடக்கிக் கொண்டாள். "பாளையங்கோட்டைக்கா போய்ட்டு வரே?"

"ஆமாம்!"

"என்ன விசேஷம்?"

"உடம்பு சரியில்லை; டாக்டர் கிட்டே காண்பிச்சேன்."

"அதற்கு நடந்து போய்ட்டா வரே?"

"பின்னே என்ன செய்யறது, மாமி? நம்ப பவிஷுக்கு வண்டி வைக்க முடியுமா, என்ன?"

இரவில் நடராஜன் சாப்பிட வந்தான்.

"பெண் எப்படிடா இருக்கு?"

"எனக்குப் பிடிச்சிருக்கு, காந்தி!"

காந்தி முகத்தை இலேசாகத் திருப்பிக் கொண்டாள்.

"அப்போ நிச்சயம்!"

"ஆயிடுத்தே!"

"ஐயோ!"

காந்தியின் வாயிலிருந்து வார்த்தை மீறி வந்து விட்டது. நடராஜன் திடுக் கிட்டு விட்டான்.

"ஏன், காந்தி!"

காந்தி மென்று விழுங்கினாள்.

"அந்தப் பெண்ணுக்கு அப்பப்போ காக்காய் வலிப்பு வருமாம்."

"உனக்கு எப்படித் தெரியும்?"

"இன்னைக்கு நானே பாளையங் கோட்டைக்குப்போய் அக்கம் பக்கத்திலே விசாரித்துவிட்டு வந்தேன்!"

"என்ன? நீ இன்னிக்குப் பாளையங் கோட்டைக்குப் போறயா, காந்தி?"

"ஆமாம்!"

"எதுக்கு?"

"உன் ஏற்றத் தாழ்விலே எனக்குப் பங்கு இல்லையா, நடராஜா?"

அவள் அவனை ஏறிட்டுப் பார்த்தாள். அவன் சிந்தனையில் ஆழ்ந்து விட்டான்.

சாப்பிட்டு எழும்போது, "அப்போ இந்தக் கல்யாணத்தை எப்படியும் நிறுத்தி விடறேன்" என்றான்.

காந்தி பதில் பேசவில்லை.

"எனக்கு என்னவோ, இப்படி எடுத்ததெல்லாம் வழுவிப் போகுது. ஒருவேளை எனக்குக் கல்யாணமே நடக்காதோ என்னவோ!" என்றான் நடராஜன்.

"உனக்கு ஏன் நடக்காமல் போறது? என்னைப்போல்......" அவள் வார்த்தைகளை நிறுத்திக்கொண்டாள்.

"நீ ஒண்ணும் குறைப்பட வேண்டாம், காந்தி! உன் பணிவிடையைக் கண்டு மெச்சி யாராவது உன்னை..." அவன் வார்த்தைகளும் அதோடு நின்றன. அவள் கண்களைக் கொட்டிக் கொண்டு கால் கட்டை விரலால் தரையைக் கீறிக் கொண்டிருந்தாள்.

அன்றிலிருந்து அவன் சாப்பிட வரவில்லை. காந்திக்குப் பிரளயக் கடல்போல் மனம் அடித்துக்கொண்டது.

அவன் ஏன் சாப்பாட்டை நிறுத்தி விட்டான்?

அன்று காந்தி குளித்துவிட்டு வந்தாள். அவள் கண்களுக்குத் தூரத்து மாமரத்தின் அடியில் நடராஜன் நிற்பதுபுலப்பட்டது. விறு விறு என்று காந்தி நடக்க ஆரம்பித்தாள்.

"நடராஜா!"

"காந்தியா?"

"ஏன் சாப்பாட்டை நிறுத்திட்டே?"

"இல்லை, காந்தி! வந்து..."

அவன் இழுத்தான். அவள் கண்களில் கலக்கம் தெரிந்து விட்டது.

"ஊரிலே பேச்சு புரண்டு போச்சு, காந்தி!"

அவள் புரிந்து கொண்டதாக அவனுக்குத் தெரியவில்லை.

"உன்னையும் என்னையும் பிணைச்சுப் பேச ஆரம்பிச்சுட்டா, காந்தி!"

"என்ன?"

அவள் கண்களை அகல விழித்து நோக்கினாள். அவன் அதற்கு மேல் அவளிடம் ஒன்றும் பேசவில்லை.

காந்தி ஒரு கணம் திகைத்து நிற்பது போல் தோன்றியது. மறு கணம் இடுப்பில் குடத்தை எடுத்துக் கொண்டு அவனைப் பாராது நடந்தாள்.

அன்று வானம் துக்கமுற்றது போல் மூடிக் கிடந்தது. வாடைக் காற்றின் வீச்சில் ஏதோ முணுமுணுப்பு இருந்தது. நதியிலும் குளத்திலும் ததும்பி வழிந்த நீர் பூமிதேவியின் கண்ணீர் போலிருந்தது.

ஊர்ச் சாலையில் நடந்து போய்க் கொண்டிருந்த காந்தி ஊரின் மேற்குத் திருப்பத்தைத் தாண்டியிருக்க மாட்டாள். பின்னால் வந்த வண்டியொன்று அவளை விலகி முன் சென்றதும் நின்றது.

"காந்தி!"

வண்டியில் நடராஜன்தான் அமர்ந்திருந்தான்.

"எங்கே புறப்பட்டே, காந்தி?"

காந்தி பதில் பேசவில்லை. அவள் கண்களில் நீர் திரையிட்டிருந்தது.

"என்னை மன்னிச்சுடு, காந்தி!"

அவள் கண்களில் நீர் முத்திட்டது.

"ஊருக்குப்புறப்பட்டுட்டயா?" ஈனஸ்வரத்தில் அவன் கேட்டான்.

"ஆமாம்!"

"போய்ட்டு வா!"

அவன் குரலில் உயிரில்லை.

வண்டி நகர ஆரம்பித்தது. அவன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவன் எண்ணங்கள் புரண்டன.

அவன் பெண் பார்த்த படலங்கள் கண்முன் தோன்றி மறைந்தன. காந்தி இருந்திராவிட்டால்...... அந்தப் பெண்களில் யாரையாவது ஒருத்தியை மணந்து கொண்டு அவன் வாழ்வே ஊனமாயிருக்கும்! அந்த ஊனம் ஏற்படாது தடுத்தவளின் வாழ்விலே இன்று ஊனம் விழுந்து விட்டது. அதைத் துடைக்க அவனால் முடியும்! ஆனால்...

அவள் வாழ்வைத் தன் வாழ்வுடன் பிணைத்துக் கொண்டால்..அந்த நினைவில் செல்லவே அவன் மனம் மறுத்தது.

இனி அவள் வாழ்வு?

அவளது பணிவிடையை மெச்சி அவளை மணக்க முன் வரும் 'ஒருவனை' எதிர்பார்த்து வாழ்நாள் கழிய வேண்டும்; அல்லது இளம் விதவையைப் போல், அவனுக்குப் பணிவிடை செய்த சிலநாட்களின் நினைவை வாழ்வு முழுவதும் அசைபோட்டுச் சுவைக்க வேண்டும்.

அவன் திரும்பிப் பார்த்தான். தூரத்தில் காந்தி 'லொங்கு லொங்'கென்று நடந்து சென்று கொண்டிருந்தாள். மீண்டும் ஜடம்!

"ம்... மற்றவர்கள் துயரை நினைத்தால் ஒரு முடிவு ஏது? தன் துயரே தலைக்கு மேலே இருக்கே!"

அவன் வாய்விட்டு முனகினான்.

மாட்டுச் சலங்கை கலகலத்தது.... அது அவன் 'சித்தாந்தத்தை' ஆமோதித்ததோ, அல்லது நகை செய்ததோ?

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk Madras-10
Managing Editor, T. Sadasivam

# புதிய மெருகு! புதிய சுடரொளி!

# இதுவே விம் தரும் பரிசுத்தம்!






**விம்** பவுடர் போட்டு விறுவிறுவென்று தேய்த்துப் பாருங்கள்; ஒளிப் பிழம்பாக எல்லாமே பளிச்சிடும். வீட்டுத் தரை, கழுவப் பயன்படும் பேஸின்கள், சமையல் பாத்திரங்கள், கண்ணாடி—பீங்கான் சாமான்கள் எல்லாமே பளிச்சிடும். பாடுபடாமல், பிரயாசையில்லாமல் கீறலே விழாத பரிசுத்தம் செய்ய உங்களுக்கு உதவுவது விம். மிகமிகச் சுலபமான வேலை! ஒரு ஈரத் துணிமீது விம் பவுடரைத் தூவிக்கொண்டு இலேசாகத் தேய்த்துவிட்டுப் பாருங்கள்—அழுக்கும், களிம்பும் நொடிப்பொழுதில் மாயமாக மறைந்துவிடுவதைக் காண்பீர்கள். மங்காத பெருமை தரும் உங்கள் வீடு மங்களவாசமாக விளங்க விம் உபயோகியுங்கள்!

## விம் பட்ட இடமெல்லாம் ஒளிப்பிழம்பே!

இந்துஸ்தான் லீவர் லிமிட்டெட் தயாரிப்பு

V. 99-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon